# அருளாளர்கள்



கங்கை
புத்தக
நிலையம்

பேராசிரியர்
அ.ச. ஞானசம்பந்தன்

# அருளாளர்கள்

பேராசிரியர்
அ.ச. ஞானசம்பந்தன்




13, தீனதயாளு தெரு,
தியாகராய நகர், சென்னை-17.

முதற் பதிப்பு : ஜனவரி, 1998
இரண்டாம் பதிப்பு : ஏப்ரல், 2000


விலை : ரூ. 48.00

| | | | |
|---|---|---|---|
| ☐ | TITLE | : | ARULALARGAL |
| ☐ | AUTHOR | : | Prof. A.S. GNANASAMBANDAN |
| ☐ | SUBJECT | : | LITERATURE |
| ☐ | LANGUAGE | : | TAMIL |
| ☐ | EDITION | : | SECOND EDITION, APRIL, 2000 |
| ☐ | No. OF PAGES | : | viii + 248 = 256 |
| ☐ | PUBLISHED BY | : | GANGAI PUTHAKA NILAYAM, 13, DEENADAYALU STREET, THYAGARAYA NAGAR, CHENNAI – 17. |
| ☐ | PRICE | | Rs. 48.00 |

Laser Typeset at : Sivasakthi Laser Prints, Chennai – 41
Printed at : Sakthi Printers Chennai - 600 021

# முன்னுரை

அருளாளர்கள் என்ற பெயரில் வெளியாகும் இந்நூல் பதினொரு கட்டுரைகள் கொண்டதாகும். அரை நூற்றாண்டுக்கு மேலாக எழுத்துப் பணியில் ஈடுபட்டிருந்த யான் இதுவரை வெளியிட்ட நூல்கள் இலக்கியத் தொடர்பு உடையனவாகும். எவ்வளவு தான் இலக்கியத்தில் ஈடுபட்டிருந்தாலும் மனத்தின் ஆழத்தில் ஆன்மிகம், சமயம், அருளாளர்கள் என்ற அடிப்படையில் எண்ண ஓட்டங்கள் இருந்துதான் வந்தன. வாய்ப்பு நேர்ந்த பொழுதெல்லாம் தனித் தனிக் கட்டுரைகளாக ஆன்மிகவாதிகள்பற்றி எழுதியது உண்டு. இவற்றில் பெரும்பான்மையானவை முதலில் சொற்பொழிவாக செய்து, பின்னர் எழுத்து வடிவம் கொடுக்கப்பட்டவை ஆகும்.

முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் திருவிடை மருதூரில், திருமந்திர மாநாடு ஆண்டுதோறும் மிக விரிவாக நடைபெற்றது. அம் மாநாட்டில் பேசியதே திருமந்திரம் - பொருள் நிலை என்ற இரண்டாவது கட்டுரையாகும். அதே போல இருபது ஆண்டுகளுக்கு முன்னர் கோவை நன்னெறிக் கழகத்தில் பேசப் பெற்றதே நம்மாழ்வார் என்ற தலைப்பில் வரும் கட்டுரை ஆகும்.

தாயுமானார், வள்ளலார் என்ற இரண்டும் வானொலியில் பேசப்பட்டதே ஆகும். நடராசத் தத்துவம் என்ற தலைப்பில் உள்ள கட்டுரை, நாட்டியம் பயில்விக்கும் ஒரு பள்ளியின் பயிலரங்கில் பேசப் பெற்றதாகும்.

இறுதியாக உள்ள யோகசுவாமிகள் என்ற கட்டுரை முப்பத்தைந்து ஆண்டுகள் முன்னர் எனக்குப் புதுவாழ்வு தந்து, என்னைப் பணிகொண்ட ஒரு மாபெரும் சித்தருடைய வாழ்க்கையில் எனக்கு நேர்ந்த அனுபவங்களைத் தொகுத்து எழுதியதாகும்.

பல்வேறு காலப் பகுதியில் எழுதப்பெற்றவை ஆதலின் நடையில் வேறுபாடுகள் மிகுந்து காணப் பெறும். அவை ஓரளவுக்கு எனது உணர்ச்சியையும் குறிப்பவை ஆகும்.

வழக்கம் போல் இதனைத் தொகுத்து, நூல்வடிவம் தந்து வெளியிட உதவிய, ஞா.மீரா, திருமதி சுந்தரி யோகிஸ்வரன் ஆகியவருக்கும் நல்வாழ்த்துக்கள் உரியனவாகும்.

வழக்கம் போல் நூலின் பெரும்பகுதிகளைப் படித்துப் பார்த்து தடை விடைகள் எழுப்பி சில பகுதிகளை மீண்டும் எழுதுமாறு செய்த இதய மருத்துவ நிபுணர் டாக்டர் N. சிவராசன் M.D. அவர்களுக்கும் நல்வாழ்த்துக்கள்.

படி திருத்தும் பணியில் தொடங்கி புதிய சிந்தனைகளுக்கு இடம் தந்து அவற்றையும் எழுதச் செய்த செல்வன் காளப்ப சேதுபதிக்கும் நல்வாழ்த்துக்கள் உரியன.

வழக்கம் போல் மிக அழகிய முறையில் இதனை அச்சிட்டு வெளியிடும் கங்கை புத்தக நிலையத்துக்கும், அதன் அதிபர் திரு. திருநாவு இராமநாதனுக்கும் நல்வாழ்த்துக்கள் உரியன.

**சென்னை 600 083** **அ.ச. ஞானசம்பந்தன்**

# பொருளடக்கம்

# 1. திருமூலர்

திருமூலர் என்றவுடன் 'மெய்ப்பொருள் அறிவு' பெற்றவர் என்ற நினைவு தோன்றுகிறது. மெய்ப்பொருள் அறிவுநிலை என்பதை Mysticism என்ற ஆங்கிலப் பதத்தின் நேர்ப் பதமாகப் பயன்படுத்துகிறோம். மெய்ப் பொருள் அறிவுநிலை என்பது ஒரு வகை மனநிலையாகும். இந் நிலை அடைந்தவர்கள் பின்னர் அந்நிலை பற்றிய முழு விளக்கமும் தந்தது இல்லை. காரணம் சொற்களால் அந்நிலை விளக்கப்பட முடியாமைதான். எவ்வளவு விளக்கினாலும் விளங்கிக் கொள்வதும் கடினம். சர்க்கரை என்றவுடன் அதன் தன்மையை நாம் அறிவதோடு, அதன் சுவையையும் உணருகிறோம். முன்னர் சர்க்கரையைத் தின்று அறியாதவன் என்ன செய்ய முடியும்? அது பற்றி ஆராய்ச்சி செய்வதும் அறிவதும் ஒன்று. ஆனால், சுவையை அனுபவிப்பது மற்றொன்று. இன்று நாம் மெய்ப்பொருள் அறிவுநிலைப் பற்றிப் பேசுவதும் ஆராய் வதும் இது போன்றதே. பேச்சிலும் ஆராய்ச்சியிலும் மட்டும் உண்மை காணுகிற ஒரு விஷயம் அன்று மெய்ப் பொருள் அறிவுநிலை; என்றாலும், பிறர் இந்நிலையைப் பெற்று அனுபவித்துக் கூறியவற்றை அறிய முயல்வதில் தவறு ஒன்றும் இல்லை. ஒரு சிலர் இவ்வனுபவத்தைக் குறை கூறுவதையும், அனுபவம் பெற்றவர்களை எள்ளி நகையாடுவதையும் காண்கிறோம். இது இசை அறிவு இல்லாத ஒருவன், இசையில் ஈடுபட்டுத் தன்னை மறந்திருக்கும் ஒருவனை கேலி செய்வதையே ஒக்கும். அறிவால் அறியப்படுவனவற்றை ஒருவருக்கொருவர்

அறிவுறுத்தலாம், பிறர் அறியுமாறு செய்யலாம். ஆனால், உணர்ச்சியால் உணரப்படவேண்டியவற்றைப் பிறர் உணருமாறு செய்தல் முற்றிலும் இயலாத காரியம்.

இம்முறையில் பார்த்தால் மெய்ப்பொருள் அறிவு நிலை அனுபவம், சொற்களால் விளக்கப்பட முடியாத ஒன்று. ஒருவாறு விளக்கினாலும் அது சர்க்கரை இனிக்கும் என்று மட்டும் கூறினால் என்ன பயனைத் தருமோ அதே பயனைத்தான் விளைக்கும். மெய்ப்பொருள் அறிவுநிலை அனுபவம் ஏனைய அனுபவங்களினும் வேறுபட்டது. ஏனைய அனுபவம் தோன்றும் பொழுது அறிவுக்கு அங்கே வேலை இல்லை. அவ்வுணர்ச்சியால் அறிவு விளக்கம் அடைவதில்லை. ஆனால், மெய்ப்பொருள் அனுபவத்தில் அறிவு, விளக்கமும் கூர்மையும் அடைகிறது. அறிவின் எல்லைக்கு அப்பாற்பட்ட பேருண்மைகளையும் அழியாமல் (Eternal truths) காணுமாறு செய்கிறது. கண்ட உண்மை விளக்கத்தால் மெய்ப்பொருள் அறிவு பெற்றவர்கள் 'உள்ளொளி' பெறுகிறார்கள், இந்நிலை பற்றிச் சிறந்த ஆராய்ச்சி ஒன்றை மேனாட்டுத் தத்துவப் பேராசிரியரான 'வில்லியம் ஜேம்ஸ்' செய்து 'Mysticism' என்ற தம் கட்டுரையில் எழுதி இருக்கிறார். பெரும்பாலும் அவர் கூறியன நாமும் ஒத்துக் கொள்ளக் கூடியனவே. இந்நிலை தானே அமைவது ஒன்றாயினும் ஓரளவு இதனை இயல்பாகவே பெற்றவர் பிறகு பயிற்சியால் இதனை வளர்த்துக் கொள்கின்றனர். இவர்கள் செய்யும் பல வகைப் பயிற்சிகளில் யோகமும் ஒன்று. யோகம் அல்லாத வேறு வழிகளாலும் இந்நிலையை அடையலாம் என்பதற்கு நம் நாட்டுச் சைவ நாயன்மார்களும் வைணவ ஆழ்வார்களுமே சான்று. மேனாடுகளில் 'செயிண்ட் இக்னேஷஸ்', 'செயிண்ட் தெரசா' போன்றவர்களும் இத்தகைய சித்தி பெற்றவர்களேயாவர்.

திருமூலர் யோகப் பயிற்சியால் இந்நிலையைப் பெற்றவராவார். அவருடைய விரிவான வரலாறு இன்று நமக்குக் கிடைக்கவில்லை. திருத்தொண்டர்புராணம் ஓரளவு இவர் சரிதம் கூறுகிறது. அதன்படி முனிவர் ஒருவர் தம் யோகசித்தியால் இறந்து கிடந்த இடையன் ஒருவன் உடலிற் புகுந்து அவன் மாடுகளைக் காத்துப் பின்னர் தம் உடலைத் தேட, அது காணுமையால் அவன் உடலிலேயே தங்கிவிட்டார் என்று கூறப்பெறுகிறது. அதன் பின்னர் மூவாயிரம் ஆண்டுகள் யோகத்தில் இருந்து ஆண்டு ஒன்றுக்கு ஒரு திருமந்திரம் வீதம் மூவாயிரம் அருளிச் செய்தார் என்றும் கதை பேசப்படுகிறது. தவவன்மையால் மிக நீண்டகாலம் உயிருடன் இருந் திருக்கலாம். அதுபற்றி இக்கதை எழுந்ததோ என்னவோ தெரியவில்லை. அது எவ்வாறாயினும் நமக்குக் கவலை இல்லை. திருமூலர் என்ற பெயர் உடைய ஒரு பெரியார் "திருமந்திரம்'' என்ற அரியதொரு நூலை அருளி உள்ளார். அந்நூலைப் படிக்கும் பொழுது அவர் மெய்ப்பொருள் அறிவு பெற்றவர் என்பது நன்கு புலனாகிறது. உண்மைப் பொருளை கண்டவர் என்பதற்குச் சான்றாக அவருடைய நூலிலிருந்து சில பாடல்களைக் காண்போம்.

மெய்ப்பொருள் அறிவுநிலையைப் பெற யோகம் ஒரு சாதனம் எனக் கண்டோம். அதுபற்றித் திருமூலர் இதோ பேசுகிறார்.

'புள்ளினும் மிக்க புரவியை மேற்கொண்டால்
கள்ளுண்ண வேண்டாம் தானே களிதரும்
துள்ளி நடப்பிக்கும் சோம்பு தவிர்ப்பிக்கும்
உள்ளது சொன்னோம் உணர்வுடை யோருக்கே'

(திருமந்– 566)

(பறவையைவிட வேகமாகச் செல்லுகின்ற பிராணனாகிய அக்குதிரையின்மேல் ஏறிக்கொண்டால் களிப்பிற்கு வேறு கள்ளுண்ண வேண்டுவதில்லை.) இவ்வாறு கூறுவதால் மனிதன் நன்கு வாழவும் இருக்கவும் தவம் வேண்டற் பாலது என்ற உண்மை நன்கு விளங்கும். தவம் என்று கூறினவுடன் அது மறு உலகம் செல்ல விரும்புபவர்கள் மட்டுமே ஏறும் வண்டி என்ற எண்ணம் பலர் மனத்தில் தோன்றுகிறது. மறு உலகம் செலுத்தும் காரியத்தைத் தவம் மட்டும் செய்வதில்லை. தவத்தின் அப்பாற்பட்ட மெய்யுணர்வு இருந்தால் ஒழிய வானாடு வழி திறப்பதில்லை. ஆகவே, வானாட்டை நம்பாமலும், அங்குப் போக விரும்பாமலும் இருப்பவர்கட்கும்கூடத் தவம் வேண்டற்பாலதே என்கிறார் திருமூலர். இந்த உலகில் செம்மையாக வாழ வேண்டுமானாற்கூடச் சோம்பல் இல்லாமல், நல்ல உடலுடன் இருப்பதுதானே சிறந்தது. அதைத்தான் செய்கிறது தவம் என்று இப்பாடல் நமக்கு அறிவிக்கிறது.

ஏன் மனிதன் தவத்தை மேற்கொள்ள வேண்டும்? உலகிலுள்ள அனைத்தும் நிலையாமை உடையவாகலின் தவம் வேண்டும்! இதனை அறியாதார் அறியாதாரே. நிலையாமையை அறிந்து உணர்ந்த யார்தான் சும்மா இருக்க முடியும்? ஆகவே நிலையாமைபற்றித் திருமூலர் வருந்திக் கூறுகிறார்.

'பாலன் இளையன் விருத்தன் எனநின்ற
காலம் கழிவன கண்டும் அறிகிலார்
ஞாலங் கடந்(து) அண்டம் ஊடறுத் தானடி
மேலும் கிடந்து விரும்புவன் நானே'

(திருமந்–181)

நாளும் நாளும் செத்துக் கொண்டிருக்கிற நாம் நிலையாமையை உணராமல் இருப்பது வருந்தத் தக்கதே! இதனையே வள்ளுவப் பெருந்தகை,

'நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாள்அஃது உணர்வார்ப் பெறின்'

(குறள்– 334)

என்று கூறிப் போனார். எத்துணைச் சிறப்புடன் வாழ்ந்தாலும் முடிவில் காலன் வெற்றிகொண்டு விடுகிறான். அவனை எதிர்த்து வெற்றி கண்டார் ஒருவரும் இலர். ஊருக்குப் பெரியவர் தான். நாட்டாண்மைக்காரரும் அவரே. பெருஞ் செல்வத்தில் புரண்டார். சிவிகை அல்லது பல்லக்கில் அல்லாமல் எங்குஞ் சென்று அறியார். ஆனால் முடிவில்,

'நாட்டுக்கு நாயகன் நம்மூர்த் தலைமகன்
காட்டுச் சிவிகையொன்(று) ஏறிக் கடைமுறை
நாட்டார்கள் பின்செல்ல முன்னே பறைகொட்ட
நாட்டுக்கு நம்பி நடக்கின்ற வாறே'

(திருமந்– 153)

இப்படி பாடை மேல் போகின்றவரைக் கண்டால் அப்பொழுதாவது உண்மை தெரிகிறதா? தெரிந்தால்தான் நிலையாத வாழ்க்கையில் ஓரளவு பற்றை விட்டு நிலைத்தவற்றைத் தேட உலகம் முற்படுமே!

மெய்ப்பொருள் அறிவு பெற்ற திருமூலர் ஒரு பேருண்மையைக் கண்டார். உலகம் தோன்றிய நாளில் இருந்து உயிர் வருக்கங்கள் தோன்றி வாழ்ந்து அழிகின்றன. உயிரினம் ஒரு பெரிய சங்கிலித் தொடர்போல் இருந்து கொண்டு இருக்கிறது. தோன்றி அழியும் இவ்வுயிர் இனத்தில் ஏதாவது நிலைபெற்ற ஒன்று உண்டா?

நிலையாமையை வெற்றி கொள்ளும் ஒன்று இருந்தால் தான் வாழ்க்கைக்கு ஒரு பொருள் உண்டு. இன்றேல் உயிர் வாழ்க்கை அர்த்தமற்ற ஒரு விளையாட்டாகவே முடியும். புல்பூண்டில் தொடங்கி மனிதன் ஈறாக உயிர் இனம் பலவகைப்பட்ட உடம்பை மேற்கொண்டு இருக்கிறது. இவ்வேறுபட்ட உடம்புடன் வாழும் உயிர் இனத்தில் ஏதேனும் ஒற்றுமை இருக்கிறதா? இருந்தால் அது என்ன? இக்கேள்வியைக் கேட்டவர்கள் என்றும் உண்டு. ஆனால் விடை கண்டவர் சிலரே. எல்லாவற்றிற்கும் முதற் பொருளான இறைவன் யார்? அவனுடைய இயல்பு என்ன? ஆம்! எத்தனை வினாக்கள்? எவ்வளவு சுலபமாகக் கேட்கப்பட்டு விட்டன? இருந்தாலும் விடை யளிப்பது அவ்வளவு எளிதன்று. மக்கள் இனத்திற்கு நல் வழி காட்டுவதற்காகப் பல சமயங்கள் தோற்றுவிக்கப் பட்டன. காலம் இடையிட்டவும் தேசம் இடையிட்டவும் ஆன பல இடங்களிலும், பல காலங்களிலும் வாழ்ந்த மக்கள் கூட்டத்தின் தேவைக்கு ஏற்ப இச்சமயங்கள் தோன்றின. ஆகலான் இவற்றிடையே மாறுபாடுகள் ஓரளவு இருக்கின்றன. இத்தமிழ் நாட்டில் மிகப் பழங்காலந்தொட்டு மக்கள் வாழ்ந்து வருகிறார்கள். ஆகலின் இவர்கள் நாகரிகமும் பழமையானதாகும்; இவர் கள் சமயமும் பழமையானதாகும். அதில் கண்ட பேருண் மைகள் பல. உயிர் இன ஒற்றுமை எது என்ற வினாவை இத்தமிழ் இனம் கேளாமலா இருந்திருக்கும்? கேட்டுக் கண்ட விடை திருமூலர் வாக்கால் இதோ வெளிப்படுகிறது.

'அன்பு சிவம் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்'

(திருமந்–270)

இதற்கும் அவ்வினாவிற்கும் என்ன சம்பந்தம் என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? இன்னும் ஒரு படி சென்றால் உண்மை விளங்கிவிடும்.

உயிர்கள்தோறும் தங்கி அதனை இயக்கும் ஆற்றல் எது? எல்லாவற்றையும் படைத்து, காத்து, அழிக்கின்ற ஓர் ஆற்றல் எது? அத்தகைய பேர் ஆற்றலையே 'கடவுள்' என்று உலகம் குறிப்பிடுகிறது. கடவுள் என்றால் கடந்து நிற்பவன் என்பதுதானே பொருள்? கடந்து நிற்றல் எப்பொழுது? கலந்து நின்ற பிறகுதானே கடந்து நிற்றல் கூடும்? எனவே, எல்லா உயிர்களிலும் கலந்தும், அவற்றைக் கடந்தும் நிற்கும் ஒருவனையே கடவுள் என்று குறிப்பிடுகிறோம். இப்பொருளுக்கு, வாக்கு மனம் கடந்த இதற்கு, ஒவ்வொரு மொழியிலும் ஒரு பெயரிட்டு உள்ளனர். குணம் கடந்த அதற்குக் குணம் கற்பித்தனர். அவ்வாறு இட்ட பெயர்களுள் இத்தமிழ் நாட்டார் இட்ட பெயர் 'சிவம்' என்பதாகும். எல்லாவற்றுள்ளும் கலந்து நிற்கும் பொருளுக்குச் சிவம் என்று பெயர் இட்டனர். சிவம் என்றால் பொருள் என்ன? அன்பு என்பதன் மறுமொழியே சிவம் என்கிறார் திருமூலர். ஆகவே, எல்லா உயிர்களிடத்தும் காணப்படுகிற ஒற்றுமை எது என்று கேட்டால் 'அன்பு' என்று விடை கூறிவிடலாம். உயிர் வருக்கங்கள் பலவேறாகக் காட்சி அளித்தாலும் அவை அனைத்தையும் ஒன்றுபடுத்தும் சக்தியாக அன்பு இருத்தலை அறிகிறோம். அன்பே கடவுள் என்றும் திருமூலர் கூறுகிறார். எனவே, கடவுளை அடையச் சிறந்த வழி யாது என்றால் அன்பு நெறியே என்ற விடை கிடைக்கும். அன்பு வடிவாகிய இறைவனை அடைய அன்பு வழியை விடச் சிறந்த ஒன்று இருத்தற்கில்லை. இக்கருத்து திருமூலர்க்கு முன்னும் பின்னும் இந்நாட்டார் பலருங் கூறிய ஒன்றாகும். 'பக்தி வலையிற் படுவோன் காண்க',

'அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே' போன்ற அடிகள் இக்கருத்தை வலியுறுத்தல் காண்க. இறைவனைப் பற்றிய இவ்உண்மைகளை அறிவதற்கும் மெய்ப்பொருள் அறிவு பயன்படுகிறது.

இது நிற்க, இந் நிலைபெற்றோர் ஒரு தனிப்பட்ட வாழ்க்கை முறையையும் இன்பத்தையும் அடைகின்றனர் என்று கூறப்பெற்ற தல்லவா? எத்தகைய வாழ்க்கை அது? இவ்வுலகில் வாழும் ஏனையோர் வாழ்க்கையினும் மாறுபட்டதா? ஓரளவு மாறு பட்டதுந்தான். மற்றையோர் வாழுகிறபடிதான் இந்நிலை பெற்ற ஞானியும் வாழுகிறான். இருந்தாலும் என்ன வேற்றுமை? உடலில் அமைந்துள்ள பொறி புலன்களின் உதவியால் பிறர் வாழ்கின்றனர். ஆனால், மெய்ப்பொருள் அறிவுபெற்ற திருமூலர் போன்றோர் நம் போன்றவர் பெற்றுள்ள பொறி புலன்களுக்கு அப்பாலும் சிலவற்றைப் பெற்றுள்ளனர். அவை,

'காணாத கண்ணுடன் கேளாத கேள்வியும்
கோணாத போகமும் கூடாத கூட்டமும்
நாணாத நாணமும் நாதாந்த போதமும்
காணாய் எனவந்து காட்டினன் நந்தியே'

(திருமந்–1610)

என்று திருமூலர் கூறுகிறார். எனவே, பிறர் கண்டும் காணாதவற்றை இவர்கள் காண்கின்றனர்; கேளாதவற்றை இவர்கள் கேட்கின்றனர். இன்னுங் கூறப்போனால் பிறர் வெட்கப்படும் பொருளுக்கு இவர்கள் வெட்குவதில்லை யாம். இப்படி இருத்தலினால் பெறும் பயன் என்ன? பிறர் காணாதவற்றையும் கேளாதவற்றையும் கண்டும் கேட்டும் இருத்தலால் பெறும் பயன் என்னவாம்? இதோ விடை தருகிறார் திருமூலர்.

'ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்
நடுங்குவ தில்லை நமனும் அங்கு இல்லை
இடும்பையும் இல்லை இராப்பகல் இல்லை
படும்பயன் இல்லை பற்றுவிட் டோர்க்கே'
(திருமந்-1624)

*இத்தகையவர்கள் உலகத்தில் வாழும்பொழுது துன்பத்தை அனுபவிப்பதில்லை ஏன்? நமனும் அவர்களை அச்சுறுத்து வதில்லை. இதைவிடச் சிறந்த வாழ்க்கை எதுவாக இருக்க முடியும்?*

`Mystics' *என்று மேனாட்டார் கூறும் இம்மெய்ப் பொருள் அறிவு பெற்றார் என்ன பேருண்மையைக் கண்டார்கள்? உண்மை உணர்ந்த பெரியார்கள் அவர்கள், உலகம், அதன் தோற்றம், அதன் உண்மைநிலை முதலிய வற்றைக் கேவலம் புறச்சாதனங்கள் கொண்டு ஆராயாமல் இவர்கள் உண்மை காண்கின்றனர். திருமூலர் கண்ட உண்மை யாது?*

'எங்கும் திருமேனி எங்கும் சிவசத்தி
எங்கும் சிதம்பரம் எங்கும் திருநட்டம்
எங்கும் சிவமாய் இருத்தலால் எங்கெங்கும்
தங்கும் சிவனருள் தன்விளை யாட்டதே'.
(திருமந்-2722)

*உலகம் முழுமையும் இறைவனாகக் காண்பதே அக்காட்சி. இங்ஙனம் கூறியதால் இவ்வுலகையும் மக்களையும் சட்டை செய்யாதவர்களோ இவர்கள் என்ற ஐயங் கொள்ள வேண்டா. உலகமே இறைவன் வடிவம் என்றால் மக்களும் இறைவன்தானே. எனவே, இறைவனுக்குச் செய்யும் தொண்டைவிட, மக்கட்குச் செய்வதே சிறந்தது என்பது திருமூலர் கண்ட உண்மை.*

'படமாடக் கோயில் பகவற்கு ஒன்(று) ஈயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கு அங்கு ஆகா
நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்(று) ஈயில்
படமாடக் கோயில் பகவற்கு அது ஆமே'

(திருமந்–1857)

*உயிர்கட்குச் செய்யுந் தொண்டே இறைவற்குச் செய்வதாம் என்கிறார் மெய்ப்பொருள் அறிவு பெற்ற திருமூலர்.*

✈✈✈✈✈

# 2. திருமந்திரம் – பொருள்நிலை

*உயர் விஞ்ஞானம் அல்லது கணிதம் கற்கின்றவர்கள் வைத்திருக்கும் நூல்களை எடுத்துப் புரட்டிப் பார்த்தால் நம் போன்றவர்கட்கு அந்நூல்கள் புரியாத புதிராகவே இருக்கும். அவற்றிலுள்ள எழுத்துக்களும், எண்களும் நாமறிந்தவையே. எனினும் அவைகளின் கருத்துக்கள் நம் அறிவுக்கு அப்பாற்பட்டவையாக இருக்கும். ஆனால் அத்துறைகளில் பயின்றவர்கட்கு அந்நூலில் கூறப்பெற்ற கருத்துக்கள் அங்கை நெல்லிக்கனியாக விளங்கும். என்போன்ற சிலருக்கு திருமந்திரம் மந்திரமாகவே (மறை மொழியாகவே) உள்ளது.*

*இந்நிலையிற்கூட ஓர் உண்மையை மறவாமற் காண்டல் வேண்டும். எத்துணைதான் பதி, பசு பாச ஆராய்ச்சியில் ஈடுபட்டாலும் அவ்வாராய்ச்சி காலத்தோடு ஒட்டிவாராக்கால் ஒரு சிலருக்கே பயன்படுவதாக முடிந்துவிடும். உண்மையைக் கூறவேண்டுமானால் நம் நாட்டில் இற்றை நாளில் சமயங்கள், அவை பற்றிய பிரச்சாரம் என்பவை எந்நிலையில் உள்ளன? சைவம் என்றால் என்ன என்பதை அறியாதவர்கள் இடமன்றோ நம் சமயத்தைச் சென்று பரப்ப வேண்டும்? அதன் எதிராக அதுபற்றி அறிந்தவர்கள், அதை வாழ்க்கையில் கடைப்பிடிப்பவர் இவர்கள் இடையே சென்று 'சைவத்தின் மேற்சமயம் வேறில்லை' என்று கூறுவதன் நோக்கம் யாது?*

பிற நாட்டாரையும், பிற சமயத்தாரையும் எடுத்துப் பார்த்தால் ஓர் உண்மை விளங்கும். கால, தேச, வர்த்த மானங்களைக் கடந்து அவர்கள் தம் நாகரிகம் அறியாத பிற மக்களிடத்தில் சென்று அவர்களோடு தங்கி, அவர்களிடைத் தம் சமயத்தைப் பரப்புகின்றனர். நம்மைப் பொறுத்தவரை நிலை என்ன? முன்னர்க் கூறியது போல ஏற்கனவே சமயத்தை ஓரளவு அறிந்தவர்களிடம் மட்டுமே சென்று நம் சரக்கை வியாபாரம் செய்கிறோம். அது மட்டுமன்று எத்துணை அளவு பதி, பசு, பாசம் பற்றிப் பேசினாலும் இந்நாளைய தேவைக்கு அவை பயன் படக்கூடிய நிலையில் பேசுகிறோமா என்றால் அதுவும் இல்லை. பிற சமயத்தார்கள் அணுயுகத்திற் கேற்பத் தம் சமயக் கருத்துக்களுக்கு வேற்றுருவம் தந்து பரப்புகின்றனர். இதன் பயன் என்ன? சமயப் பற்றும் ஓரளவு அனுபவமும் உடைய பெரியோர்கட்கும், இளம் சமுதாயத்தினர்க்கும் இடையே ஒரு பெரிய இடைவெளி ஏற்பட்டுள்ளது. 'காலத்தை வென்று நிற்பது சைவ சித்தாந்தம்' என்றும் 'காலாதீதப் பழம் பொருள் இறைவன்' என்றும் கூறு கிறோமே தவிர நம் காலத்தில் நம் கண்ணெதிரில் உள்ள இளைஞர்கட்குக்கூட நாம் அமைதி தேடித்தர முடிய வில்லை. இதனால் நம் சமயம் என்பது வெறும் சடங்கு களாக முடிவதுடன் அதன் தத்துவம் மறக்கப்பட்டுப் பொய்யாய், கனவாய், பழங்கதையாய் மெல்லப் போய்க் கொண்டிருக்கிறது.

இந்நாளைய உலகம் அழிவை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது என்று கூட்டங் கூடிப்பேசுவதால் மட்டும் பயனின்று. இச்சமுதாயம் போகின்ற வேகத்தில் திருமந்திரம் போன்ற சமய நூல்களின் இடம் யாது என்று ஆராய வேண்டியுள்ளது. இது நாள் வரை நாம் நம் சமய நூல்களைப் பற்றிப் பேசிக் கொண்டு வந்த முறையை,

அதாவது நமக்குள் நாமே கூட்டம் போட்டு முன்னரே அதுபற்றித் தெரிந்தவர்களிடம் திரும்பத் திரும்ப அதையே பேசுதல் போன்ற முறையை, மாற்றிக் கொண்டால் ஒழிய விரைவில் இந்நூல்கள் புதைபொருள்களாக மாறி நூல் நிலையங்களில் கேட்பாரற்றுக் கிடக்கும் நிலை ஏற்பட்டு விடும். எவ்வளவு உயர்ந்த நூல்களானால்தான் என்ன? அவற்றைப் போற்றிக் கற்பார் இலரேல் அவை மறைந்து போதல் இயல்புதானே!

ஓயாமல் மாணவர்களோடு பழகுகின்ற என் போன்றவர்கள் மனத்தில் தோன்றுகிற அச்சமாகும் இது. இன்றைய மாணவர் சமுதாயம் இந்நூல்களை அறியாமல் வளர்கின்றது. நாளை இவர்கள் பெரியவர்களாகும் பொழுது என்ன ஆகும்? பொது மக்களோடு, அவருள்ளும் சிறப்பாக இளைஞர்களோடு பழகி அவர்களை நம் நெறிக்கு இழுக்காவிடின் என்ன நேரும் என்று சிந்தித்தது உண்டா? நாம் எங்கோ ஒரு மூலையில் அமர்ந்து கொண்டு இந்த அருள் நூல்களைப் படிப்பதால் நாம் மட்டும் பயனடைவோமே தவிரச் சமுதாயத்திற்கு நம் கடமையை நிறைவேற்றியவர்களாக ஆவோமா?

நம் முன்னோர்கள், அதிலும் குறிப்பாக இவ்வருள் நூல்களை ஆக்கித்தந்த பெரியோர்கள் இவ்வாறு நடந்து கொள்ளவில்லை என்பதையாவது சிந்தித்தோமா? திருமந்திரமாகிய பெருநூலை ஆக்கித் தந்த பெருமகன் எங்கோ இருந்து இறைவனில் ஈடுபட்டிருக்க வேண்டியவர் ஏன் இங்கு வந்தார்? இறந்து போதல் என்பது இவ்வுலகின் இயல்பு என்று அவருக்குத் தெரியாதா? ஏன் இறந்தவன் உடம்பில் அவர் புக வேண்டும்? பின்னர் ஏன் இத் துணைப் பாடல்களை ஆக்க வேண்டும்? நம்மாட்டுக் கொண்ட கருணையினால்தான் இவற்றைச் செய்தார் என்று கூறத் தேவை இல்லை.

திருமூலர் போன்ற நம் முன்னோர்கள் நம் மாட்டுக் காட்டிய கருணையை அவரின் பின் வந்தோராகிய நாம் கடைப்பிடிக்கிறோமா? திருமூலர் அளவிற்கு நாம் செல்லாவிடினும் இன்றைய சமுதாயத்திற்கு எது தேவை என்பதை அறிந்து அதையாவது பூர்த்தி செய்ய முயல்கிறோமா? எந்த அளவாவது நாம் நம் சமுதாயத்திற்குப் பயன்பட வேண்டுமென்று நினைக்கிறோமா? சைவர்களாகிய நாம் இம்முறையில் சிந்திக்கத் தொடங்கினாலொழிய நம் சமயம், சமயம் நேரும்போது மெல்ல மறைதல் இயல்பு.

மனித வாழ்வு முழுவதையும் உற்று நோக்கினால் அதனை ‘அக வாழ்வு’, ‘புற வாழ்வு’ என இருவகையாகப் பிரிக்கலாம் என்பது விளங்கும். இங்கு யான் அகவாழ்வு, புறவாழ்வு என்று கூறுவது தமிழ் இலக்கியத்தில் கண்ட பிரிவை அன்று. மனிதன் தன் மனத்திலே ஓர் உலகை உண்டாக்கிக் கொண்டு வாழ்வதையே ‘அகவாழ்வு’ என்று கூறுகிறேன். மனம், அதனோடு தொடர்புடைய உடல் என்ற இரண்டிற்கும் புறம்பாக உள்ள உலக வாழ்வையே ‘புற வாழ்வு’ என்று குறிக்கிறேன். மேலை நாட்டாரைப் பொறுத்தமட்டில் புறவாழ்வில் (இவ்வுலக வாழ்வில்) வெகுவாக முன்னேறிச் சென்றுள்ளனர். சந்திரனில் சென்று இறங்கும் அளவிற்கு முன்னேறிய அவர்கள் இப்பொழுது அந்த விஞ்ஞான முன்னேற்றத்தால் மட்டும் பயனில்லை என்பதையும் மனித மனம் எங்கு போனாலும் கூடவே வரும் என்பதையும் அம்மன வாழ்வு செம்மைப் பட்டாலொழிய மனிதவாழ்வு பூரணத்துவம் அடைவதில்லை என்பதையும் கண்டு கொண்டனர். இன்று அவர்கள் அனுபவமூலம் கண்டுகொண்ட இந்த உண்மையை அவர்கள் சமயத்தை நிறுவிய இயேசு பெருமான் இரண்டாயிரம் ஆண்டுகளின் முன்னரே

கண்டு 'மனிதன் ரொட்டித் துண்டால் மட்டும் வாழ்வதில்லை' என்று கூறிப் போனார். மனிதனுடைய அகவாழ்வு (மன வாழ்வு) செம்மைப்படாத பொழுது புற வாழ்வு (உலகவாழ்வு) எத்துணைச் சிறப்புடன் பொலிந் தாலும் பயனில்லை. இதனை நன்கு மனத்துட் கொண்டு இந்நாட்டில் வாழ்ந்த பேரருளாளர்கள் நமக்கு வழி காட்டிப் போயினர்.

தம் ஆன்மாவை முன்னேற்ற வேண்டிய தேவை இல்லாத இப்பெருமக்கள் இவ்வுலகிடை வந்து பிறந்து நம்முடன் பழகி நம்முடைய நன்மைக்காகவே சில பலவற்றைக் கூறிப் போயினர். அவர்கள் தம் நிலையில் இருந்து நம்மாட்டுக் கொண்ட கருணையால் கீழிறங்கி வருகிறார்கள் என்பதை அறிந்ததால்தான் அவர்கள் வருகையை 'அவதாரம்' (கீழிறங்கி வருதல்) என்றும் குறிக்கிறோம். முழுமுதற் பொருளாகிய இறைவன் மட்டும் 'சௌலப்பியம்' (எளிவந்த தன்மை) உடையவனல்லன். அவனருள் பெற்ற பெரியோர்களும் இந்த எளிவந்த தன்மையை நிரம்பப் பெற்றவர்கள்.

சீவன் முத்தராகிய திருஞானசம்பந்தர் போன்ற பெரியோர்கள் திருவீழிமிழலை போன்ற பகுதிகளிற் பஞ்சம் வந்தபொழுது அவண் மடம் வைத்து அனை வருக்கும் சோறு சமைத்துப் போட்டு அவர்கள் பசிப் பிணியைப் போக்கினர் என்று வரலாறு பேசுகிறது. ஆண்டவனிடம் பக்தி கொள்ள வேண்டும் என்பதை நன்கு அறிவுறுத்திய அவர்கள் 'மண்ணில் நல்ல வண்ணம் வாழ'வும் வழி கூறினர். இதனால் அப்பெரியார்கட்குப் பொதுமக்கள் தொடர்புநிரம்ப இருந்தமையை அறிகிறோம். அவர்கள் பேசிய சமயமும் கடவுள் நம்பிக்கையும், மக்கள் அனைவரையும் இறைவனாகவே காணுகிற நிலையும்

வெறும் பேச்சளவில் நில்லாமல் அவர்கள் வாழ்வுடன், குருதியுடன் கலந்த ஒன்றாக இருந்தன. ஆனால், நம்மைப் பொறுத்தவரையில் சமயம் என்பது தற்போது உள்ளீடற்ற போர்வையாக பயன்படுத்திக் கொள்ளும் கருவியாக அமைந்து விட்டது. பெரியோர்களாகிய அவர்கள் வாழ்ந்து காட்டியதை மறந்து விட்டு அவர்கள் கூறியபடி வாழவும் மறந்துவிட்டு அவர்கள் பாடல்களை மட்டும் மனனம் செய்து ஒப்பிப்பதால், பாராயணம் செய்வதால் எப்பயன் விளையும்? வெறும் பாராயணம் பயன் தருமெனில் ஒலிப்பதிவு எந்திரங்கள் அனைத்துமே பயன் பெற்றுவிடும்!

சைவர்களாகிய நாம் நம் நெஞ்சில் கை வைத்து நம் முன்னோர்களாகிய நால்வர் சென்ற வழியில் ஓரளவாவது செல்ல முற்படுகிறோம் என்று கூற முடியுமா? அவர்கள் பாடல்களைப் படிக்கிறோம்; படிப்பிக்கிறோம்; ஆனால் உணர்கிறோமில்லை. கற்றல் கேட்டல் முதலியவற்றின் அப்பாற்பட்டுள்ள உள்ளத்து உணர்வோடு ஒன்று கிறோமோ?

திருமூலர் ஆன்மிக வாழ்க்கையில் எத்துணைத் தூரம் முன்னேறிச் சென்றுள்ளாரோ அதே அளவுக்குப் புற உடம்பு பற்றியும் அறிந்திருந்தார். நரம்பு மண்டலங்களைப் பற்றி உடற்கூறு வல்லுநர்கள் இன்று எத்துணைத் தூரம் அறிந்து பேசுகிறார்களோ அத்துணைத் தூரம் மூலரும் அறிந்து வைத்திருக்கிறார்.

இறைபணியில் எத்துணை முன்னேறிச் சென்றாலும் இப்பெருமக்கள் ஏனைய உயிர்கள் இடத்துக் கொண்டு உள்ள அன்புக்கு எல்லையே இல்லை. இதற்கு ஒரு காரணமும் உண்டு. இறைவன் உயிர்களினின்று வேறானவன் என்று இவர்கள் கருதவே இல்லை.

*அதனால்தான் மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்று கூறினர். திருமூலர்,*

"படமாடக் கோயில் பகவற்கு ஒன்று ஈயின்
நடமாடக் கோயில் நம்பர்க்கு அங்கு ஆகா
நடமாடக் கோயில் நம்பர்க்கொன்று ஈயின்
படமாடக் கோயில் பகவற்கு அது ஆமே"
(திருமந்திரம்–1857)

*என்றும்,*

"அன்பு சிவம் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்"
(திருமந்திரம்–270)

*என்று கூறுமுகமாக இதனை வலியுறுத்திப் போனார்.*

*உலகியலிற்கூட ஒரு தாய்க்கு ஒரு பொருளைத் தருதலினும் அவளுடைய குழந்தைகட்கு அதனைத் தருவது மூலம் அத்தாயின் மகிழ்ச்சியை இரட்டிப்பாக்க முடியும். அதுபோல உயிர்கட்குச் செய்யும் உதவி கண்டு யாவர்க்குந் தாயாகிய இறைவனும் மகிழ்கிறான். குழந்தை மகிழக் கூடிய, சிறிய பொருளைத் தரினும் அக்குழந்தையின் மகிழ்ச்சி கண்டு தாய் தானும் மகிழ்கிறாள். ஆனால் அதே பொருளை நேரடியாகத் தாய்க்குத் தரின் அவள் அச்சிறிய பொருளை ஏற்று அவ்வளவு மகிழ்ச்சி அடைவாளா என்பது ஐயத்திற்குரியது. இறைவனுக்குத் தொண்டு செய்வதினால் உடல், பொருள், ஆவி ஆகிய மூன்றையும் அர்ப்பணித்து தொண்டுசெய்யவேண்டும். அது அத்துணை எளியதுமன்று. ஆனால் உயிர்கட்குத் தொண்டு செய்ய இத்துணைப் பாடுபட வேண்டா, என்றாலும் இறைவன் உயிர்கட்குத் தாய் ஆதலின், அவர்கட்குத் தொண்டு செய்வதைக் கண்டு மகிழ்கின்றார். இந்த நுணுக்கத்தை*

நன்கு அறிந்த மூலர் இதனை மேலே கண்ட பாடலில் எடுத்துக் கூறுகிறார்.

இனி யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வ நிலையாமை என்பன பற்றியும் அரசன் செங்கோல் என்பவை பற்றியும் பேசியமையாலும் இவ்வுலக வாழ்க்கையாகிய புறவாழ்க்கை நன்கு அமைய வேண்டிய சூழ்நிலையைப் பேசியுள்ளார். அவ்வாறு இல்லாவிடின் மந்திர மறைப் பொருள்களைப் பேசவந்த அவர் நிலையாமை முதலியவற்றைப் பேசுவானேன்? நம் மாட்டுக் கொண்ட கருணையால் நம்மைத் தட்டி எழுப்பவே இவற்றை எல்லாம் பாடினார் என்பதே பொருத்தமாகும். ஒன்றுக்கொன்று முரணுகக் காணக் கூடியவற்றைக்கூட இவர் பேசியுள்ளார். ஒரு பாடலில் உடம்பின் இழிவைக் கூறப்புகுந்து 'பானை உடைந்தாலும் ஓடாவது எஞ்சும், உடம்பிலுள்ள உயிர் பிரிந்தால் இறைப்போதும் அதனை வைத்திருக்க மாட்டோம்' என்று பேசும் அவரே,

"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே"
(திருமந்திரம்–724)

என்றும் பாடுவது என் கருதி?

நம்மிடத்தில் ஒரு பொருள் கொடுக்கப்பட்டால் அதனைப் பயன்படுத்த வேண்டிய முறையிற் பயன் படுத்த வேண்டும். இன்றேல் அப்பொருள் தோன்றிய நோக்கமும் கெட்டு நம்மிடம் வந்து சேர்ந்ததன் பயனையும் இழக்கிறது. செல்வம் என்பது பிறர் துயரம் துடைக்கப் பயன்படல் வேண்டும். 'செல்வத்துப் பயனே ஈதல்' என்று பேசிச்

செல்கிறது பழைய புறநானூறு. ஆனால் அதே செல்வம் தகுதி இல்லாதவன் மாட்டுச் சிக்கிக் கொண்டால் அவனையும் கெடுத்துத் தானும் கெடுகிறதன்றோ? அதேபோல உடம்பெடுத்ததன் பயன் பிறர் பொருட்டுப் பயன்படுதற்காக, ஆனால் அப்பயன் விளையாதபொழுது அந்த உடம்பு பாரமாகி விடுகிறது. உடம்பை வளர்ப்பது எப்போது? திடம்பட மெய்ஞ்ஞானம் சேரும் வழிக்கு உடம்பு உதவியாக இருக்கும்பொழுது.

மைந்தன் நல்லனவற்றைச் செய்யும்பொழுது அவனைப் போற்றும் அதே தந்தை அவன் தவறு செய்தபொழுது இடித்துரைத்தல் போல உடம்பை ஒரு முறை போற்றியும் மற்றொரு முறை தூற்றியும் பாடுகின்றார் பெரியார். உடம்பை வைத்துக் கொண்டு பயன்படுத்தும் வழிபற்றிப் பலர் கொண்டுள்ள தவறான கருத்தையும் சாடுகின்றார். ஒரு சிலர் ஆசனம் இட்டுப் பிராணாயாமம் செய்து விடுவதால் பெரும் பயனை அடைந்து விடலாம் என்று நினைப்பதை எள்ளி நகையாடுமுகமாக ஒரு கருங்கல் எண்ணாயிரம் ஆண்டு நீருள் கிடப்பினும் ஒரு சொட்டு நீரையும் உறிஞ்சாதது போல இத்தகைய சித்திகளால் எவ்விதப் பயனுமில்லை என்கிறார். மெய்யுணர்வு வாய்க்கப் பெறாமல் பொறி புலன்களை அடக்கிப் பழகுவதால் எப்பயனும் விளையாது என்ற பேருண்மையைக் கூறுகிறார். இதே கருத்தை வள்ளுவப் பெருந்தகையும்,

**'ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே**
**மெய்யுணர் வில்லாத வர்க்கு'** (குறள்–354)

என்று கூறுகிறார்.

விஞ்ஞானத்தின் துணைகொண்டு புற உலகில் முன்னேறியுள்ள மேலைநாட்டார் இன்று தம் அனுபவ மூலம் கண்டுள்ள புதுமை இதுவாகும். எத்துணை வசதி

படைத்திருப்பினும் செல்வத்திற் புரண்டாலும் மனவாழ்வு நிரம்பாவிட்டால் எஞ்சுவது வெறுப்பே ஆகும், என்பதை அவர்கள் அறியத் தலைப்பட்டு, பின்னர் மனத்துக்கும் உடலுக்குமுள்ள தொடர்பை ஆய்ந்தனர். உடலுக்குத் தலைவனாக மனம் இருத்தலின் மனத்தை அடக்கினா லொழியப் பொறிபுலன் அடக்கம் பயனற்றது என்பதை அவர்களும் அறியத் தொடங்கிவிட்டமையின் அமைதி யான வாழ்வு (Relaxed Life)வேண்டும் என்று கூறுகின்றனர்.

பொறிகளை அடக்குவது என்பது இயற்கையை எதிர்த்துச் செய்யும் போராட்டம் என்பதையும், அதனால் எவ்வித நற்பயனும் விளைவதில்லை என்பதையும் திருமூலர் 'அஞ்சும் அடக்கு அடக்கு' என்பர் அறிவிலார், அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கில்லை' என்று கூறிப் போனார். இதன் அடிப்படை யாதாக இருக்கும் என்று யாரேனும் சைவர்கள் என்று மார்தட்டிக் கொள்பவர்கள் நின்று சிந்தித்துப் பார்த்ததுண்டா? பொறிகளையும் புலன் களையும் படைத்த இறைவன் பைத்தியக்காரன்அல்லனே! பொறிகளைப் படைத்து இவற்றால் அனுபவிக்கப்படும் பொருள்களாகிய தனு, கரண, புவன போகங்களையும் படைத்துக் கொடுத்த பிறகு இவற்றால் அவற்றை அனுபவிக்கக்கூடாது என்றுகூறுவது எப்படி அறிவுடைமை யாகும்? பொறிபுலன்களைத் தந்த இறைவன் அவற்றின் துணை கொண்டு எவற்றை அனுபவிக்க வேண்டும் என்று முடிவு செய்தற்குரிய 'பகுத்தறிவை மட்டும்' நம்மிடமே தந்து விட்டான். எனவே இவற்றைத் தவறான வழியிற் செலுத்திவிட்டுப் பொறிகளையோ, அவற்றைப் படைத்தவனையோ, குறைகூறுதல் பெருந்தவறாகும்.

இன்று பணம் பெருத்த நாடாகிய அமெரிக்காவில் தோன்றி வளரும் புதிய கூட்டம் எது என்று நினைக்கிறீர்கள்? 'ஹிப்பிகள்' எனப்பெறும் கூட்டத்தார்

பலரும் பெருஞ்செல்வர் வீட்டுப் பிள்ளைகள். செல்வத்தால் மட்டும் அமைதி அடைய முடியவில்லை என்பதனைக் கண்ட அவர்கள் பல்வேறு செயற்கை மருந்துகளைப் பயன்படுத்தி மன அமைதியைத் தேட முனைந்தனர். அவ்வழியிலும் அமைதி கிட்டாமற்போகவே 'நியூயார்க்' நகரிலும், 'சிக்காகோ' நகரிலும் தலையை மொட்டை அடித்துக் கொண்டு தெருவில் கிருஷ்ண பஜனை செய்து கொண்டு ஊர்சுற்றி வருகின்றனர்.

உலகில் எதனையும் காண்பதற்குப் புற நோக்கமோ, புறக்கருவிகளோ இன்றியமையாதவை அல்ல இக்கருத்தைத் திருமூலர் மட்டும் கூறினாரென்றில்லை; நவீன விஞ்ஞானமும் இதனை அறிவுறுத்துகிறது. 'ஒப்பியல் தத்தவத்தை' உலகுக்கு எடுத்துக்காட்டிய மாபேரறிஞ னாகிய 'ஐன்ஸ்டீன்'என்ற மேதை தொலைநோக்காடியால் (Telescope) அற்றை நாளில் காணமுடியாத 'ப்ளுட்டோ' (PLUTO) என்ற கோளின் இருப்பையும் தான்போட்ட கணிதத்தைக் கொண்டே நிலை நிறுவினார்

எனவே மனிதன் சிந்தனையை அகமுகமாகச் செலுத்துவதன் மூலம் உண்மைப் பொருளைக் காண முடியும் என்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டாகும். அகமுக நோக்கம் .ஆண்டவனை மட்டுமே அறிய உதவும் என்று தவறான எண்ணம் கொள்ள வேண்டா. அறிவை அகமுகமாகச் செலுத்துவதன் மூலமே புற உலக அறிவைக்கூட வளர்த்துக் கொள்ளலாம் என்பதையும், அவ்வறிவை இன்னும் ஆழமாகச் செலுத்துவதன் மூலம் மெய்ப்பொருளைக் காணவும் கூடும் என்பதையும் அறிதல் வேண்டும்.

சத்தியப் பொருளை, நித்தியப் பொருளை அறிதற்கு அகமுக நோக்கம் பயன்படுகிறது. அவ்வாறு உண்மைப் பொருளை அறிகின்ற முறையில் பல்வேறு

உண்மைகளையும் அவ்வகமுகமான நோக்கம் கண்டு வெளியிடுகிறது. மனிதப் பண்பாட்டை அடிப்படையாகக் கொண்டு ஆன்மிக முன்னேற்றத்துக்கு அடிகோலுவதும், பொருள்களின் இயல்புகளை உள்ளவாறு அறிய முற்படுவதும் அகமுக நோக்கமேயாகும். எந்த வழியிற் சென்றாலும் இறுதியில் அடையும் பயன் ஒன்றேயாகும். வழிகள்தாம் பல வகையே தவிர முடிவு ஒன்றுதான்.

அகமுகநோக்கம் ஒன்றையே துணையாகக் கொண்டு திருமூலர் எத்தனை எத்தனையோ உலகங்களைப் பற்றிக் கூறிக்கொண்டு செல்கிறார். அவையெல்லாம் நம்மைப் பொறுத்தவரை ஊமையன் கண்ட கனவாகவே உள்ளன. அவர் கூறுகின்ற சக்கரங்கள் என்ன என்பதை இன்று பலர் அறிய முடியுமா? ஒரு பொருளை ஆராய்ந்து அதன் இயல்புகளை அறிவது வேறு; அதனை அனுபவிப்பது என்பது வேறு. சர்க்கரை என்ற பொருளைச் சுவைத்து அனுபவிப்பது ஒன்று; அதே சர்க்கரையைச் சோதனைக் குழாயிலிட்டு அதன் இயல்பு என்ன என்று ஆராய்வது வேறு. திருமூலரைப் பொறுத்த மட்டில் பொருளை ஆராயவும் செய்கிறார், அனுபவிக்கவும் செய்கிறார்.

பக்தி மார்க்கத்தில் சென்ற அடியார்கள் இறைவனைப் பற்றி அறிவின் துணைகொண்டு ஆராயாமல் அன்பின் துணைகொண்டு பக்தி செய்தனர். பின்னர்த் தோன்றிய மெய்கண்டார் போன்ற பெரியோர்கள் அறிவின் துணைகொண்டு இறைவனின் இயல்பையும், உலகின் இயல்பையும் ஆராய முற்பட்டனர். 'ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா, சுடர்விட்டு நின்றுளன் எங்கள் சோதியான்' என்று எந்தப் பரம்பொருளை அறிவின் துணைகொண்டு அதிகம் ஆராய வேண்டா என்று ஞானசம்பந்தர் கூறினாரோ அதே பொருளைப்பற்றி மெய்கண்டார்

'அவன், அவள் அது எனும் அவை மூநிலைமையின்' என்று ஆராயத் தொடங்குகிறார். இதிலிருந்து நாம் அறியவேண்டிய உண்மை ஒன்றுண்டு.

நம்முடைய முன்னோர்கள் காலத்துக்கேற்பத் தம் வழி முறைகளை மாற்றிக் கொண்டு உலகிற்கும் பயன்படு முறையில் ஆய்வு செய்ய அஞ்சியதில்லை. திருஞான சம்பந்தப் பெருமான் காலத்தில் பரவி இருந்த சைன சமயக் கொள்கைகள் அறிவை நம்பி இருந்தன. அறிவின் துணைகொண்டு மட்டும் எல்லாவற்றையும் ஆய்ந்து விட முடியாது; அஃது அனைவருக்கும் ஏற்ற வழியு மன்று; என்பதை வலியுறுத்துதற்காக ஞானசம்பந்தர் பக்தி மார்க்கத்தை வலியுறுத்தினார். ஆனால் 12 ஆம் நூற்றாண்டின் பின்னர் உள்ள தமிழகத்தில் மறுபடியும் சூழ்நிலை மாறிவிடுகிறது. அறிவை வலியுறுத்தி அதன்மூலம் மக்களுடைய பலவாகிய தேவையற்ற நம்பிக்கைகளைப் போக்க வேண்டிய சூழ்நிலை ஏற்படுதலின் மெய்கண்ட தேவர் போன்றவர்கள் ஏதுக்களையும், எடுத்த மொழி யையும் கொண்டு பொருளின் உண்மையைச் சோதிக்கப் புகுந்தனர்.

சர்க்கரையின் இயல்பை நாவில் இட்டுக் காட்டும் திருஞானசம்பந்தரும், சோதனைக் குழாயில் போட்டு அதன் இயல்பை விளக்கும் மெய்கண்டாரும் இரண்டு வேறுபட்ட வழிகளை மேற் கொண்டார்கள், இவ்வாறு கூறுவதால் ஒருவர் வழி தவறு என்றோ மற்றொருவர் வழி சரியானதென்றோ கூறல் முடியாது. காலத்துக்கும் சூழ் நிலைக்கும் ஏற்ப நம் பெரியோர்கள் தாம் கூறும் வழிகளை மாற்றிக் கொண்டனர். திருஞானசம்பந்தர் கூறியதற்கு எதிராக மெய்கண்டார் கூறியதனால் நால்வர் வழியை மீறிவிட்டார் என்றோ அவர் சைவத்தை

எதிர்த்துப் புதுவழி கண்டார் என்றோ யாரும் குறை கூறத் துணிவதில்லை அன்றோ?

தோத்திர வழி (பக்தி வழி), சாத்திர வழி என்ற இரண்டும் மக்கள் முன்னர் வைக்கப்பட்டன. அவரவர் பக்குவத்திற்கேற்ப அவரவர் தாம் மேற் கொள்ளும் வழியை அறிந்து ஏற்றுக் கொண்டனர். இனிப்புப் பண்டமும் காரப்பண்டமும் பசியைப் போக்க உதவுகின்றனவெனில் ஒன்றிற்கொன்று உயர்வு தாழ்வு கற்பிப்பது எங்ஙனம்? இதை நன்கு புரிந்து கொண்டால் சாத்திர வழிக்காரர்கள் தோத்திர வழிக்காரர்களை மறுத்துறைக்கவோ இவர்கள் அவர்களை மறுத்துரைப்பதற் கோ வழி இல்லாமற் போய்விடும்.

இக்கருத்து நம்முடைய நாட்டைப் பொறுத்தவரை புதுமையானதன்று. திருமுருகாற்றுப்படை ஆசிரியர் இதனை வலியுறுத்திக் கூறினார். 'சேவடி படரும் செம்மல் உள்ளம்' ஒன்றுதான் தேவையானது. அதுமட்டும் இருந்து விட்டால் 'இன்னே பெறுதி நீ முன்னிய வினையே' என்று கூறுகிறார். வேண்டப்படுவன, ஒரு குறிக்கோளும் நெஞ்சில் உறுதியுமேயாம். அவை இருக்குமானால் எந்தவழியை மேற் கொண்டாலும் தவறில்லை. இறுதியில் பயன் பெறமுடியும்.

உலகையும் அது இருக்கும் சூழ்நிலையையும் நன்கு எடுத்துக் காட்டுகிறார் திருமூலர். நிலையற்ற உலகம் என்பதனால் அதனை அனுபவிக்கக்கூடாது என்ற கருத்தில்லை. ஆனால் 'இந்த அனுபவமே எல்லாம்' என்று நினைக்கின்ற தவற்றை மனிதன் செய்துவிடக்கூடாது என்பதே அவருடைய நோக்கம். மனிதனுக்கு இருதயம் என்ற ஒன்று இருக்கிறது என்பதையே பிறநாட்டார் அறிந்து கூறுவதற்கு முன்னர் திருமூலர் அது இருப்பதையும் அதுவும் இடப்பக்கத்தில் இருப்பதையும், அது தாக்கப்பட்டால் இறப்பு வெகு விரைவில் கிட்டும்

என்பதையும் இருதயநோய் உடையார் தாக்கப்படும் போது முன் எச்சரிக்கை எதுவும் இராது என்பதையும் எத்துணை அழகாக கூறுகிறார்.

"அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணம் கொண்டார்
இடப்பக்கமே இறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே!" (திரு.–148)

என்பது அவர் வாக்கு.

வாழ்க்கை எத்துணை மென்மையானது; எவ்வளவு விரைவில் முடியக்கூடியது; என்பதை இவண் காட்டும் திருமூலர் மனிதன் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வாழவும் முடியும் என்பதையும் எடுத்துக் கூறியுள்ளார். இவ்வாறு மாறுபட்ட கருத்துக்களைத் திருமூலர் தேவை இல்லாமற் கூறவில்லை. அதற்கொரு ஆழமான காரணமுண்டு.

ஓரறிவுயிராகிய அமீபா (Amoeba) விலிருந்து ஆறறிவு படைத்த மனிதன் ஈறாக அனைவருக்கும் பொதுவான இயல்பாக ஏதேனும் உண்டா? உண்டு. அதுவே துன்பத்தை வெறுத்தலும் இன்பத்தை நாடலுமாம். இந்த உயிர் இலக்கணத்தை அடிப்படையாகக் கொண்டு திருமூலர் துன்பத்தை எடுத்துக் காட்டுகிறார். இதனை வெறுக்கும் உணர்ச்சியைத் தூண்டிவிட்டு அடுத்து இன்பத்தை அடையும் வழியைக் கூறுகிறார். ஒவ்வொரு துன்பமாகக் களைந்தாலும் அது வேண்டப்படுவதேயாகும்.

'யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்' (குறள்–341)

என்பது பொதுமறை. ஆனால் ஒவ்வொரு துன்பமாகக் கொண்டு களைவதென்பது மரத்தின் ஒவ்வொரு

கிளையாக முறிப்பது போலாகும். மரத்தை அழிக்க வேண்டுமாயின் வேரைக் களைந்து வெந்நீரை விட வேண்டியதுதானே. அதுபோல எல்லாத் துன்பத்திற்கும் காரணமாகவுள்ள பிறவித் துன்பத்தை போக்க முயல்வது தானே முறை. இவ்வாறு பிறவியைப் போக்க வேண்டும் என்று கூறும் மூலரே ஒருவன் ஐயாயிரம் ஆண்டுகள் வாழலாம் என்றும் கூறுகிறார். அவ்வாறானால் அவர் பிறவியை அறுக்கவேண்டும் என்பது வெறும் உடம்பை ஒழிக்க வேண்டும் என்ற பொருளிலன்று என்பது விளங்கும். பிறவியில் ஏற்படும் துன்பத்தைப் போக்க வழியறியார் பிறவியையே போக்க நினைத்தார்.

உடம்பெடுத்ததன் பயனை அடையக் கூடுமானால் உடம்பையும் அதற்குரிய பிறப்பையும் யாரும் கடிவ தில்லை. பின்னர் வந்த பெரியோர் 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே.'என்றும் 'மண்ணிலே வந்த பிறவியே எனக்கு வாலிதாம் இன்பம்' என்றும் கூறிப்போயினர். மூலரும் 'உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே' என்று கூறுகிறார். அவ்வாறானால் உடம்பின் பயன் என்று இவர்கள் எதனைக் கருதினார்கள்? 'கூடும் அன்பினில் கும்பிடு'வதையே பயன் என்று கருதினர். இந்தப் பயன் உடம்பு எடுத்தவர்கட்குக் கிடைக்கவில்லையெனில் பிறவி வீணாகிவிடுகிறது; துன்பம் நிறைந்ததாகி விடுகிறது.

வாழ்க்கையில் நாம் என்ன செய்கிறோம்? ஒரு பொருள் நமக்குப் பயன்படும் என்று கண்டால் அதனைப் போற்றிப் பாதுகாக்கின்றோம். பயன்படாத பொருளைத் தூக்கி எறிந்து விடுகிறோம். அதுபோலப் பிறவி பயன்படு மானால் அதனைப் பாதுகாக்க வேண்டும்! என்ன பயனை விளைக்கிறது எனில் வணங்குதலாகிய பயனை அளிக்கிறது. யாரை வணங்குவது என்ற வினாவிற்குச்

*சிவத்தை வணங்குவது என்ற விடை வரும். 'சிவம்' என்றால் என்ன என்ற வினாவிற்கு 'அன்பே சிவம்' என்ற விடையை மூலர் தருகிறார். அப்படியானால் சிவனை வணங்குதலும், சிவத்தோடு இரண்டறக் கலத்தலும் வேண்டப்படுவன என்று கூறுவதால் தவறில்லை.*

*அன்புடன் கலத்தல் என்பது அன்பே வடிவாக ஆதல் எனப் பொருள்படும். அன்பே வடிவாக ஆகிறவர்கள் பிற உயிர்கட்குத் தொண்டு செய்வதே அன்புடன் கலத்தல் அல்லது சிவத்துடன் கலத்தல் என்று தருக்கரீதியாகக் கூறிவிடலாம். இவ்வுண்மையை அறியாமலும், அறிய மறுத்தும் இறைவனை வழிபட்டு வேறு ஏதோ பயனை அடையப் போவதாக நினைப்பவர்கள் யார் என்ற வினாவை எழுப்பிக் கொண்ட மூலர், அவர்கள் 'சிவ' தத்துவத்தை அறியாத அறிவிலிகள் என்ற கருத்தில்* 'அன்பு சிவம் இரண்டென்பர் அறிவிலார் அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்' *என்றும் கூறிப்போனார்.*

*சிவ வழிபாடு என்பது உயிர்கள்மாட்டு அன்பு கொண்டு தொண்டு செய்தலே என்பதை இத்துணை அழகாகவும், விளக்கமாகவும், தருக்க முறையிலும், கூறி யுள்ளனர் நம் முன்னோர் என்பதை இக்காலத்துக்கேற்ப எடுத்துக்காட்டாத நாம் சைவர்களா? இல்லை; சைபர்கள்.*

"நல்லவும் தீயவும் அல்ல குவிமுகிழ்
புல்லிதழ் எருக்கம் ஆயினும் உடையவை
கடவுள் பேணேம் என்னா" (புறம்—106)

*என்று பழைய புறநானூறு கூறவும் 'யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை' என்று மூலர் கூறவும்,*

'ஐய யாஅம் இரப்பவை,
பொருளும் பொன்னும் போகமும் அல்ல;

நின்பால் அருளும் அன்பும் அறனும், என்றாங்கு
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே!'

(பரி. 5 : 78–81)

என்று பரிபாடல் கூறவும் அவற்றை ஏற்கும் மிக உயர்ந்த நிலையில் இருந்த சைவ சமயம், இன்ன பூவுக்கு இன்ன பயன் என்று கூறும் இழிநிலைக்கு வந்தமையாலே இன்று அது கேட்பாரற்றுக் கிடக்கிறது.

மிகப் பழமையான நம்முடைய சமயம் எத்துணைப் பரந்த மனப்பான்மையுடன் யாவரையும் தன்னுள் அணைத்துக் கொண்டு வளர்ந்தது என்பதை நினைக்கையில் உண்மையான பரவசமும் பெருமிதமும் அடையலாம். உயர்ந்தார், தாழ்ந்தார், கற்றார், கல்லாதார், உடையார், இல்லார் என்ற வேறு பாடற்று அர்த்த மற்ற சடங்குகட்கு இடந்தாராமல் எல்லா உயிர்களிடத்தும் இறைவன் உறைகின்றான் ஆகலின் உயிர்கட்குத் தொண்டு செய்வதே சமயத் தொண்டு என்ற மிக உயர்ந்த குறிக்கோளுடன் இருந்த சமயம் எங்கே? இத்துணை உயர்ந்த நிலையிலிருந்த சைவம் அடுத்த காலத்தில் வெள்ளியில் இலிங்க வடிவம் வைத்து வழிபட்டால் என்ன பயன்? தங்கத்தில் வைத்து வழிபட்டால் என்ன பயன்? என்றும், வெள்ளை மலரால் அருச்சித்தால் என்ன பயன் கிட்டும்? சிவப்பு மலரால் அருச்சித்தால் என்ன பயன் கிட்டும் என்றும் சாத்திரம் வகுக்கத் தொடங்கிவிட்டது. சிவபூசையை ஒரு வியாபார மாக்கிய பெருமை பிற்காலச் சாத்திரங்கட்கு (அவற்றின் பெயரைக் கூற விரும்பவில்லை) உரியதாகும்.

புறச் சமயத்திலிருந்து மீண்ட திருநாவுக்கரசர் 'பிராயச்சித்தம்' செய்துகொண்டா சைவரானார்? எத்தகைய மனநிலை உடையாருக்கும் உய்கதி காட்டுகின்ற முறையில் இருந்த சமயம், மக்கள் வாழ்க்கையில்

இரண்டறக் கலந்து அவர்கள் இரத்த ஓட்டத்தோடு கலந்திருந்த சமயம் இன்று வெறும் வெளிப்பூச்சாய் ஆரவாரமுடைய சடங்குகளாய் நின்றுவிட்டமையின் உண்மைச் சமயத்தைப் பற்றிக் கவலைப்படுவார் யாரும் இல்லாமற் போய் விட்டனர்.

'அப்பாலும் அடி சார்ந்தார்' அனைவரையும் உளப்படுத்திக் கொண்டு அகில உலகத்திலும் உள்ளார் அனைவருக்கும் பொதுவாக இருந்த சமயம் இன்று இருக்கும் நிலை யாது? 'இன்று சைவ சாப்பாடு' என்று கூறுகின்ற முறையில் சாப்பாட்டுச் சைவமாகி நிற்கும் அவல நிலை ஏன்?

இறைவனுக்குச் செய்யும் தொண்டைவிட உயிர் கட்குச் செய்யும் தொண்டே சிறந்தது என்றும், அதில் தான் இறைவனும் மகிழ்கிறான் என்றும் கூறிய சைவ சமயம் உண்மையிலேயே உலகச் சமயங்களுள் மிக உயர்ந்தது என்பதில் ஐயமில்லை. இதனை உலகம் முழுவதற்கும் எடுத்துக்கூறிச் 'சேர வாரும் செகத்தீரே' என்று அழைக்க வேண்டியவர்கள் தமிழர்களாகிய நாம்.

இத்தகைய சமயத்தையும் அதன் உண்மையான தத்துவத்தையும் உள்ளவாறு எடுத்துக் கூற முற்பட்டால் ஓயாத அல்லலிற் சிக்கித் தவிக்கும் இன்றைய உலகம் உடனே செவி சாய்க்கும். மனிதன் சந்திரமண்டலத்துக்குப் போனாலும் அவனுடைய மனம் அவன் கூடத்தான் போகிறது. 'மனம் அடங்கக் கற்காவிட்டால் எந்த மண்டலத்திற்குச் சென்றாலும் அமைதி கிட்டாது.' எனவே மனிதன் பெறவேண்டிய அந்த ஒப்பற்ற அமைதியை உள்ளவாறு எடுத்துக் கூறும் 'திருமந்திரம்' போன்ற நூல்களை நம்முடைய பூசைப் பெட்டியை விட்டு வெளிக் கொணர்ந்து காலத்திற்கேற்பப் பரப்புவோமானால் நாமும்

உலகமும் உய்வோம். இக்கருத்தை முன்னரே சோழப் பேரரசின் அமைச்சராக இருந்த சேக்கிழார் என்ற பெரியார் தீர்க்க தரிசனம் போலச் 'சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும் இனி வருங்காலத்தின் சிறப்பும் இன்று எழுந்தருளப் பெற்றபேறு இதனால் என்றைக்கும் திருவருள் உடையோம்' என்று கூறிப் போனார். அவர் கூறியாங்கு இங்கு நம்மிடையே இந்நல்லெண்ணம் எழுவதாக.



# 3. நடராஜ தத்துவம்

இது விஞ்ஞான யுகம். எந்த ஒன்றையும் அறிவின் துணைக்கொண்டு ஆராய்ந்து உண்மை காண வேண்டும் என்று நினைப்பது விஞ்ஞானத்தின் அடிப்படை.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஜடப்பொருட்களை ஆராய்ந்த விஞ்ஞானம், அவற்றைப் பகுத்துக் கொண்டே சென்று, இறுதியாக எஞ்சி நிற்கும் மூலக் கூறு பிரிக்கமுடியாத ஒன்று என்ற முடிவுக்கு வந்தது, உடைக்க முடியாத அந்த மூலக்கூறுக்கு 'உடைக்க முடியாதது' என்ற பொருளைத் தரும் 'அதோமா' என்ற லத்தீன் மொழிப் பெயரைச் சூட்டிற்று. அப்பெயர் தான் இப்போது ஆங்கிலத்தில் 'Atom' என வழங்கப்படுகிறது.

ஆனால், இந்த முடிவுக்கு வந்த சில ஆண்டுகளில் உடைக்க முடியாதது என்று கருதப்பெற்ற அந்த மூலக்கூறு உடைக்கப்பட்டு, 'எலக்ட்ரான்', 'புரோட்டான்' 'பாசிட்ரான்', 'நியூட்ரான்', 'மீசான்' முதலான பல பொருட்கள் அதனுள் இருப்பதை விஞ்ஞானம் கண்டது.

இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில், தனி மூலக்கூறாக இருந்த அணு, பல உட்பொருட்களைக் கொண்டிருப்பதை அறிந்து சொல்வதற்கு 1200 ஆண்டு களுக்கு முன்னரே இத்தமிழகத்தில் வாழ்ந்த ஒரு மெஞ்ஞான—சிவனடியார், போகிற போக்கில் தான் பாடிய திருவாசகத்தில்,

"சென்று சென்று அணுவாய்,
தேய்ந்து தேய்ந்து ஒன்றாய்,
நின்ற நின் தன்மை" (திருவாசகம் 22–7)

என்று பாடிச் செல்கிறார்.

"அணுவிற்கணுவாய்"

என்று மற்றொரு இடத்திலும் கூறுகிறார்.

இந்த அணுவைப் பற்றிய விஞ்ஞானம் கண்ட மற்றோர் உண்மையும் இங்கே கருதப்பட வேண்டும். அணு என்பதனுள் புரோட்டான் என்ற பொருளைச் சுற்றி எலக்ட்ரான் என்ற ஒரு சிறு பொருள் மிக மிக வேகமாகச் சுற்றி வருதலை விஞ்ஞானம் நிரூபித்தது. உலகத்தில் உள்ள சரம், (Movable) அசரம் (Immovable) ஆகிய எல்லாப் பொருட்களும் அணுக்களால் ஆக்கப் பெற்றவை; இந்த அணுவினுள்ளே நடைபெறுகின்ற ஓட்டம் அல்லது நடனம் நின்று விட்டால் அழிவைத் தவிர வேறு வழியே இல்லை என்ற உண்மையையும் விஞ்ஞானம் கண்டது.

எல்லாப் பொருட்களிலும் இரண்டறக் கலந்து நிற்கும் இந்த அணுவினுள் நடைபெறும் இந்த நடனத்தை, மிகப் பெருக்கிக் காட்டும் எலக்ட்ரானிக் மைக்ராஸ்கோப்பின் மூலம்கூட நாம் காணமுடியாது. எனவே, நம்முடைய முன்னோர்கள் இந்த மாபெரும் தத்துவத்தை நாம் எளிதில் அறிந்து கொள்ளுமாறு ஒரு வழியைக் கண்டனர்.

நாமரூபமற்றதும், எங்கும் நிறைந்திருப்பதும், எல்லாப் பொருட்களிலும் ஊடுருவியும், வெளிப் பட்டும், தனித்தும் நிற்கக் கூடிய பரம்பொருளுக்கு ஒரு வடிவம் கற்பித்தனர். மனிதன் எவ்வளவுதான் அறிவின் துணைகொண்டு மேலே சென்றாலும் தன்னை ஒத்த ஒரு வடிவத்தைத்தான் கற்பிக்க முடியும்.

இக்கருத்தையே 19 ஆம் நூற்றாண்டின் மாபெரும் மெய்ஞ்ஞானியாகிய விவேகானந்தர், "மீன்களெல்லாம் கூடி தமக்குள் ஒரு கடவுளைப் படைத்தால் அதற்கு ஓர் மீன் வடிவம்தான் கொடுக்க முடியும்'' என்று கூறிப் போந்தார். எனவே மனிதன் நாம, ரூபம் அற்ற பரம்பொருளுக்கு ஒரு வடிவம் கொடுக்க விரும்பினான். அவன் மெஞ்ஞானத் தால் கண்ட உண்மை, கூறுகளின் உள்ளே நடைபெறுகின்ற நடனம், இந்த இரண்டையும் ஒன்றாக்கி நடராஜ வடிவத்தைக் கற்பித்தான்.

நடராஜ வடிவத்தைச் சுற்றி வளைந்திருப்பது 'திருவாசி' எனப்படும். பல்வேறு அண்டங்கள் வடிவாக செறிந்து நிற்பதை பிரபஞ்சம் என்று கூறுகிறோம் இந்தப் பிரபஞ்சத்திற்கு ஓர் அடையாளம் தான் திருவாசி எனப்படும். இந்த வட்டத்தின் நடுவே பெருமான் நடனம் ஆடுகிறான். அப்பெருமானின் தொப்புள்தான் வட்டத்தின் மத்திய புள்ளியாகும். அதிலிருந்து ஆறு இடங்கள் இந்த திருவாசியை (பிரபஞ்சத்தை) தொட்டுக் கொண்டிருப் பதைக் காணலாம். 1. கீழே ஊன்றியிருக்கின்ற கால், 2. இறைவனின் திருமுடி, 3. உடுக்கை ஏந்திய கை, 4. அக்னியை ஏந்திய கை. 5. தூக்கிய திருவடி, 6. இடையில் கட்டியிருக்கும் புலிவால் ஆகிய இந்த ஆறும் சுற்று வட்டத்தை (திருவாசி) தொடுவது போல் அமைந்திருக்கும்.

இவற்றையெல்லாம் கற்பித்ததைவிட இன்னொரு அற்புதத்தையும் கற்பித்தார்கள். வட்டத்தைத் தொடும் இந்த ஐந்து பகுதிகளும் (புலிவால் தவிர) இந்த ஐந்தும் தொடும் பகுதிகளும் இறைவனின் வடிவத்தின் பல்வேறு பகுதிகள். இப்படிச் சொல்வதால் அவன் ஆடுகிறான் என்பதைக் காட்ட முடியாது. ஆடுகின்ற ஒரு குறிப்பிட்ட நிலையை (One Pose) தெரிவிக்குமே தவிர, ஓயாது ஆடுகிறான் என்பதை இவை அறிவிக்கமாட்டா. அதையும் அறிவிக்க விரும்பிய சிற்பி ஒரு அற்புதத்தைச் சாதித்தான். பெருமான் இடையில் கட்டியிருப்பது புலித்தோல் ஆடை. அந்தப் புலியின் வால் தொங்கிக் கொண்டுதானே யிருக்கும். ஓயாது சுற்றும்போது, இடையில் கட்டிய சாதாரணத் துணி கூடத் தொங்கும் நிலையில் இருந்து ஒரு ஆரம்போல் வட்டத்தின் விளிம்பைத் தொடும் நிலைக்குச் (From Perpendicular to Horizontal) சென்றுவிடும். ஆகவே தொங்குகின்ற புலிவாலை தொங்கும் நிலையில் இருந்து ஓர்ஆரம்போல் விளிம்பைத் தொடுமாறு செய்து விட்டான். எனவே ஓயாது ஆடுகிறான் என்று அறிவிக்க, தொங்கு கின்ற புலிவாலை ஆரம் ஆக்குவதன் மூலம் நம் முன்னோர் நமக்குக் காட்டினர்.

கொப்பூழிலிருந்து கணக்குப் பார்த்தால் கீழே மூன்று தொடும் இடங்களும், மேலே மூன்று தொடும் இடங்களும் இருப்பதை அறிய முடியும். இதையே ஆறு ஆதாரம் என்று கூறுவர்.

நடராஜப் பெருமான் ஆடும் கூத்தைப் பஞ்ச கிருத்தியத் (ஐந்தொழில்) தாண்டவம் என்பர்.

1. வலக்கையிலுள்ள 'டமருகம்' (உடுக்கை) படைப்புத் தொழிலைக் குறிக்கும். அனைத்துப் பொருட்களை ஆக்குவதற்கு மூலமாயும் இருப்பது (PRIMORDIAL SOUND) ஆதிநாதம்
2. தலையில் உள்ள கங்கை (தண்ணீர்) காத்தலை குறிக்கிறது.
3. இடக்கையிலுள்ள அக்னி (நெருப்பு) அழித்தலைக் குறிக்கிறது.
4. முயலகன் மீது ஊன்றிய திருவடி மறைத்தலைக் குறிக்கிறது.
5. தூக்கிய திருவடி உயிர்களுக்கு நல்கும் அருளலைக் (விடுதலை) குறிக்கிறது.

பஞ்ச கிருத்தியம் என்று சொல்லப்படும் ஐந்து தொழில்களையும் அனாயாசமாகச் செய்யும் பரம் பொருள் ஓயாது சலித்துக்கொண்டே இருக்கிறது. சலித்தல் (Vibration) மிக வேகமாக நடைபெறும் போது, பொருள் நிலைத்திருப்பது போல் நமக்குக் காட்சியளிக்கும். வேகமாகச் சுற்றும் பம்பரத்தை உறங்குகிறது என்று சொல்வது மரபு. அதே போல, அண்டமுற நிமிர்ந்து ஆடும் ஐயன் திருநடனம் கற்பனைக் கெட்டாத வேகத்தில் நடைபெறுவதால், அவன் சலிப்பே (அசைவு) இல்லாமல் ஆடுகிறான் என்பதை, ஒரு குறிப்பிட்ட நிலையில் நடராஜ வடிவம் நமக்குத் தெரிவிக்கிறது. இந்த வடிவமும் இந்தக் கற்பனையும் மிகப் பழங்காலந்தொட்டே தமிழகத்தில் மட்டுமே தோன்றி வளர்ந்த சிறப்புடைய தத்துவமாகும்.

# 4. திருவாசகங் காட்டும் திருநெறி

இன்று உலகாயதத்தில் ஆழ்ந்துள்ள மேலைநாடு மட்டுமே சிறிது கடவுளுணர்ச்சியுடைய பாடல்களையும், அவற்றை இயற்றிய புலவர்களையும் கண்டு போற்றல் கூடும். விலங்கு வலிமையின்முன்னர் அடி பணியும் ஒரு நாகரிகம் இப்புது நூல்களைப் போற்றுவதில் வியப்பொன் றும் இல்லை. ஆனால், இறையுணர்வு பாலோடுசேர்த்து ஊட்டப்பெற்று வளர்ந்த தமிழ்நாட்டார் இப்புதுப்பாடல் களிடத்து எத்துணைப் புதுமையுங் காணப்பெறார். இனி, எத்துணைக்காலம் நாம் முன்னேறிச் செல்லினும் அக்கால ஆராய்ச்சி அறிவினாலுங்கூடக் கண்டு வியக்கத்தக்க அரும் பொருள்களைப் பல பெரியோர்கள் இந்நாட்டில் இயற்றிப் போயினர். அத்தகைய காலதேச வர்த்தமானங் கடந்த கருவூலங்களுள் தலை சிறந்தது திருவாசகமாம்.

இத்தகைய அரியதொரு நூலை இவ்வுலகிற்கீந்த பெரியார் மாணிக்கவாசகப் பெருமானார் எனப்படுவர்.

இத்திருநூல் உலகிடைப் பிறந்து, பிறப்பு, பிணி, மூப்பு, இறப்புத் துன்பங்களால் வருந்தும் உயிர்க்கு அவற்றி னின்றும் விடுபெற்று வீடு பெறுதற்குரியதோர் திருநெறி காட்டியருளுகின்றது. இராமகிருஷ்ண பரமஹம்சர் கூறியதே போன்று மணிவாசகனார் போன்ற பெரியார்கள் புகையிரதத் தொடரின் இயந்திரங்களாவர். அவ்வியந்திரம் தானேயுமன்றித் தன்னைத் தொடர்ந்த ஊர்திகளையும் குறித்தவிடத்திற்கு இழுத்துச் செல்வதே போன்று இப் பெரியார்களும் தாமேயுமன்றித் தம்மைத் தொடர்ந்த அடியார்களையும் வீடுபேற்றிற்கு உய்த்துச் செல்லும் பேராற்றல் படைத்தவராயிருக்கின்றனர். இத்தகைய

பெரியார் பாய்திரை ஞாலத்தின் பற்பல விடங்களில் பற்பல காலங்களில் தோன்றி மறைந்தனர். கிறிஸ்து பெருமான், புத்தபெருமான், நபிநாயகம் போன்றவர்களும் இவ்வகுப்பைச் சேர்ந்தோரேயாவர். இப் பெரியோர் ஒவ்வொருவரும் அவ்வக் காலத்திற்கேற்ப அறவுரைகள் ஈந்து போயினர். மேலைநாட்டில் இயேசுநாதர் அறிவுறுத்திய பிழைக்கு இரங்கி அழுது வீடுபெறும் நெறியினைப் பெரிதும் போற்றி இந் நாட்டிடை அதனைக் கூறிய பெருமை மணிவாசகப் பெருமானுக்கே உரியதாம். தன்பிழையை நினைந்து உருகி அழுது அதற்கு மன்னிப்புப் பெறுதல் என்பது அன்பு நெறியிற் செல்கின்ற அடியவர்க்கே உரியதாம். அதனாலேயே போலும் மணிவாசகப்பெருந்தகையார் "அழுது அடி அடைந்த அன்பர்'' என ஒரு பெயரும் பெற்றனர்.

திருவாசகத்தில் பிழைக்கிரங்கி அழும் இடங்கள் பரக்கக் கிடக்கின்றன. ஒன்றிரண்டு காணல் வேண்டு மாயின் இவ்வடிகளை உற்று நோக்குவோமாக: **"என் பிழைக்கே குழைந்து வேசறுவேனை விடுதி கண்டாய்'',** (திருவா: 6,50) "ஆனால் வினையேன் அழுதா உன்னைப் பெறலாமே'', (திருவா:9,10) "பொறுப்பரன்றே பெரியோர் சிறுநாய்கள் தம்பொய்யினையே''.

இனி, இவ்வரிய நூல் காட்டும் அறநெறிதான் யாது? இதனுள் உயிர் வீடுபேற்றினை அவாவவேண்டியதன் இன்றியமையாமையும், அதற்குரிய வழிகளும் அவ்வழி களிலுள்ள இடையூறுகளும், அவற்றை நீக்குமாறும், நீக்குங்கால் வேண்டப்படும் துணைவனும், அத்துணை வனின் வலிமையும், அவ்வாறு அவ்வீட்டை அடையின் அதன் கண் உண்டாம் இன்பமும் கூறப்பட்டுள்ளன.

உலகிடைப் பிறந்த எல்லா உயிர்களும் ஏதோ ஒரு பொருளை நாடி அலைகின்றன. யானை முதல் எறும்பு ஈறாய உயிர்கள் கேவலம் உணவு ஒன்றை மட்டும் நாடி அலைகின்றனவோ? இனி அவற்றினும் மேம்பட்ட

ஆறறிவுடைய மனிதன் தேடியலைவது வயிறு வளர்ப்பது ஒன்றைத்தானோ! அஃதுண்மை ஆயின் அவ்வாறு வயிறு நிரம்புதற்குரிய பல நலன்களும் உடையார் யாரும் சுகமடைந்திருந்தார் என்பதை யாண்டும் கேட்டிலேம் ஆதலால் மனிதன் இவற்றினும் மேம்பட்ட ஒரு பொருளைத் தேடியே வருந்துகின்றானென்பது அங்கை நெல்லிக்கனியாம். அத்தகைய பொருள் மன அமைதி யென்ற ஒன்றேயன்றோ! இதனை உட்கொண்டேயன்றோ 'Man does not live by bread alone, but by every word of God!' என்ற மூதுரையும் எழாநின்றது. ஆதலின், இவ்வமைதியை நாடுவதே உயிர்களின் நோக்கம் என்பது தேற்றமாயின் அவ் அமைதியை அடைந்து பின்னர் மற்றையோர்க்கு அவ்வழியை எடுத்துக் கூறும் பெரியோரை பின்பற்றுவதில் பிழையென்ன? அத்தகைய அமைதியைத் தரும் பொருள் இறைவனேயன்றோ! அதனையே நமது பெருமான்

"தந்த(து) உன்தன்னைக் கொண்ட(து) என்தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்?
அந்த மொன்(று) இல்லா ஆனந்தம் பெற்றேன் யான்"
(திருவா:22–10)

என்று கூறுகிறார். எனவே, அத்தகைய பொருளை அடைய வேண்டுவது யாவர்க்கும் இன்றியமையாதது ஆகின்றது.

அவ்வாறு முழு முதலைத் தேடி அடையப் புறப்படும் உயிர் அவ் எண்ணம் தன்பால் வரப்பெறு முன் அடையும் இன்னல்கள் ஒன்றா இரண்டா? அளவற்ற இன்னல் களுக்கு ஆட்பட்ட பின்னரே தெய்வம் என்பதோர் சித்தமேனும் உண்டாகின்றது. அதனையும் நமது மணி மொழியார் எடுத்து விளக்கினார். கருவிடைத் தோன்றும் உயிர் பத்துத் திங்களிலும் உண்டாம் இன்னல்களில் பிழைத்துப் பிறந்து ஓரளவு வளர்ந்த பின்னர் மீண்டும் அடைகின்ற இன்னல்கள் எத்தனை!

"மாதர்தம் கூர்த்த நயனக் கொள்ளையில்
பிழைத்தும், பித்த உலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்தும்
கல்வியென்னும் பல்கடற் பிழைத்தும்,
செல்வம் என்னும் அல்லலில்
பிழைத்தும், நல்குரளென்னும் தொல்விடம்
பிழைத்தும்"
(திருவா:4,34)

*இறுதியில் தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகின்றது. ஒருவாறு இச்சித்தம் உண்டாகியும் அவ்ஆன்மா அடையும் இன்னல்கள் தீர்ந்ததோ! பின்னரும் ஆறுகோடி மாயாசக்திகள் வேலை தொடங்குகின்றன. நாத்திகமும், சமயவாதிகளும், மாயாவாதமும் சேர்ந்து தொல்லை விளைவிக்கின்றன.*

*இவ்வின்னல்களினிடையே ஆன்மா எவ்வாறு இறைவனைத் தேடல்வேண்டும் என்று, தலைவனைக் கண்ணுற் கண்ட தலைவர் கூறுகின்றார்.*

"தப்பாமே தாம்பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகது போலத்
தொழுதுளமுருகி, உழுதுடல் கம்பித்து,
ஆடியும், அலறியும், பாடியும், பரவியும்,
கொடிறும் பேதையும் கொண்டது விடா'தெனும்
படியேயாகி, நல்லிடையறா அன்பில்
பசுமரத்தாணி அறைந்தாற் போல"
(திருவா:4.59–64)

*தலைவனை வழிபடல் வேண்டும். அவ்வாறு வழிபடத் தொடங்கியவுடன் பல இன்னல்கள் தோன்றுகின்றன. முதன்மையாக, பிறர் வழிபடுவோனைக் கண்டு எள்ளிக் கூறும் மொழிகளாம். உலகிடை இன்பமே சிறந்தது என்று நினைக்கும் பிறர் அத்தகைய அன்பனைக் கண்டு 'பித்தன்' எனப் பேச முற்படுகின்றனர். காரைக்கால் அம்மையார்*

*பேய் வடிவெடுத்துச் செல்லுங்கால் பிறர் அவ் வடிவத்தை உள்ளவாறு கூறக்கேட்டு யாது கூறினார்?*

"அண்டர் நாயகனார் என்னை அறிவரேல்
அறியா வாய்மை எண்திசை மாக்களுக்கு
யான் எவ்வுருவாய் என்?" (பெ.பு–1775)

*என்று கூறினாரன்றோ! அதே நிலைமையை ஒவ்வொரு அன்பனுமடைகின்றான். இதனை ஆசிரியர், "சகம் பேய் என்று தம்மைச் சிரிப்ப" என்றும், "நாடவர் பழித்துரை பூண் அதுவாகக் கோணுதலின்றி" என்றும் தொண்டர்கள் வாழ வேண்டிய வழி எத்தன்மைத்து என்றும் விளக்குகிறார்.*

*இத்தனை இன்னல்களையும் உயிர் மீறிச் செல்ல வேண்டுமானால் அவ்வாறு சென்று அடையும் பொருள் மிகவும் உயர்ந்ததாய் இருத்தல் வேண்டு மன்றோ! அப்பொருள் எத்தன்மைத்து? இன்னல்களைப் பொறுத் தார்க்குத் தக்க இன்பம் தரக்கூடியது, இறையேயாகும். அவ்வாறாயின் இறைவனை இத் தன்மையன் என்று கூறஇயலுமோ? மனநினைவிற்கு அப்பாற்பட்டதாய் இருந்தால் தானே அதனை மனிதனைவிடச் சிறந்தது என்று கூற இயலும். இதனை, நினைக்க இயலாததாய் எத்தன்மைத்து என்று விளக்குகிறார்:*

*"பூதங்கள் தோறும் நின்றாயெனின் அல்லால் போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர் கீதங்கள் பாடுதலல்லாற் கேட்டறியோம் உனைக் கண்டறிவாரை" என்றும்,*

"விச்சது இன்றியே விளைவு செய்குவாய், விண்ணும்
மண்ணகம் முழுதும் யாவையும் வைச்சு வாங்குவாய்"
(திருவாய்:10,6)

*என்றும், "கனவேயும் தேவர்கள் காண்பரிய கனைகழலோன்" (திருவா:11,10) என்றும் கூறுகிறார்.*

விஞ்ஞான அறிவு முதிர்ந்த இக்காலத்திற்கூட மறுக்க முடியாதபடி இறைவனை வருணிக்கின்றார். "ஞாலமே, விசும்பே, இவை வந்துபோம் காலமே உனையென்று கொல் காண்பதே" (திருவா:5,3) என்றும், "சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாய்" "(நின்ற நின்தன்மை)" என்றும் கூறுகிறார். இவ்வடிகளில் அவன் தன்மை, காலம் என்றும் அணு என்றும் குறிக்கப் பட்டிருத்தல் கருதற்பாலது. உலகம் முழுதும் மின் அணு (Electron), பரமாணு (Proton) வடிவாய் இலங்குகின்றது என்று அறிவியல் நூலால் முடிபு கொண்டுள்ளனரன்றோ. மேலும், அணுக்கள் தாம் ஓயாது சலித்துக் கொண்டிருக் கின்றன என்பதும் அவற்றை அவை நிறுத்துமாயின் உலகம் அழிந்து விடும் என்பதும் அன்னார் கொள்கையன்றோ! அதனையேதான் நடராசப் பெருமான் ஓயாது நடனம் செய்து கொண்டிருக்கின்றான் என்றும், அவன் ஆட்டத்தை நிறுத்துவானாயின் உலகம் அழியுமென்றுங் கூறுவர். மணிமொழியார், "தாயும்இலி தந்தைஇலி தான் தனியன் ஆயிடினும் காயில் உலகனைத்தும் கற்பொடிகாண் சாழலோ" (திருவா: 12,) என்று கூறுவது அதனையே வலியுறுத்தும்.

உயிர் அடையவேண்டிய இலக்கு இஃதென்பதையும் அதன் பெருமையையும் உணர்த்திய பின்னர் அதனை அடையும் ஆற்றை உணர்த்துகின்றார் ஆசிரியர். இத் துணைப் பெருந்தலைவனை மனம்மொழி மெய்யென்ற மூன்றாலும் வேண்டல் வேண்டுமன்றோ! அதனையே ஆசிரியர்,

"சிந்தனை நின் தனக்காக்கி, நாயினேன்றன்
கண்ணிணை நின் திருப்பாதப் போதுக்காக்கி,
வந்தனையும் அம் மலர்க்கே யாக்கி, வாக்கு உன்
மணிவார்த்தைக்கு ஆக்கி" (திருவா:(3.6)

வழிபட வேண்டும் என்று மொழிகின்றார்.

*தலைவன் சக்தியுடையவனாய் இருத்தல் தெளிந் தனம். எனினும் அவற்கு நம்மாட்டு அருளுண்டோ? நம் குறை முடிக்குந் தன்மை உடையனோ? என்ற ஐயங் கொண்டார்க்கு அதனைக் களையுமாற்றால் ஆசிரியர் கூறுகிறார்: இறைவன் "பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிந்து'' உயிர்க்கு அருள் செய்கின்றானென்றும், "குன்றே யனைய குற்றங்கள் குணமாமென்றே கொள்பவ னென்றும்'' கூறுகிறார். இத்தகைய பரங்கருணைத் தடங்கடலாதலின் உறுதியாக வேண்டுவார் வேண்டுவதே ஈவான் என்பது கருத்து.*

*வீடுபேறும் வேண்டுமென்றும் அதனை அடைய வேண்டுவது இன்றியமையாததென்றும், அதனைத் தருந் தலைவன் தரத்தக்க வன்மையுடையவன் என்றும், தருதற்குத் தடையின்றி அருளொடு நிறைந்திருப்பவ னென்றும் கேட்டபின்னர் மனமொன்றிக் கேட்பது ஒன்றே வேண்டற்பாலது. அவ்வாறு வேண்டுதற்கும் மனம் தானே முன்வருவதில்லை. மனமெனுங் குரங்கொன்று உடனிருத் தலின் அதனையடக்கி ஆளுதல் மனிதனுக்கு இயலாததா கின்றது. "ஒரு கணமேனுங் கண்மூடி மௌனியாயிருக்க வென்றால் இப் பாழ்த்த கன்பங்கள் போராடுதே!'' என்று தாயுமான அடிகளும் கரைந்தாரன்றோ! ஆதலால், அம்மனத்தை அடக்கி வீடுபேற்றிற்குரிய வழியிற் செலுத்துதற்கும் அவனருளே வேண்டற் பாலதாகின்றது. அத்துணை வேண்டாது தானே அவ்வேலையில் ஈடுபடுவது எனப் புகுந்தால் ஆண்டு ஆணவ இருள் படரலின் மேற்செல்லல் இயலாதா கின்றது. ஆதலின், மணிமொழிப் பெருமான் "அவனருளாலே அவன் தாள் வணங்கி'' என்று கட்டளை இடுகின்றார். இதனையே தாயுமான அடிகளும்,*

"அருளாலெவையும் பார் என்றான் அதனை
அறியாதெனறிவாலே சுட்டிப் பார்த்தேன்;

இருளான பொருள் கண்டதல்லாற் கண்ட
என்னையுங் கண்டிலேன்—என்னையடி தோழி''

*என்றும்,*

"பாழான என் மனம் கனியவொரு தந்திரம் பண்ணுவ
துனக் கருமையோ''

*என்றும் வினவுகிறார். அவ்வாறு அவனருளையே வேண்டிப் பெற்றாலொழிய பிறவியின் மாட்டு விடாது வந்த பற்று விடாதாகும். இக் கருத்தே பற்றியன்றோ*

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றை— பற்றுக
பற்று விடற்கு'' குறள்—350

*எனப் பொய்யாமொழியும் எழுந்தது.*

*இறுதியாக அடிகள் கூறுகின்றார்: அவ்வாறு அவனருளே துணையாகக்கொண்டு, தோன்றும் இன்னல் களை யெல்லாம் வென்று, இறுதியில் அவனைப் பெற்றால் அடைகின்ற இன்பம் எத்தன்மையது? "நினைத் தொறும், காண்டொறும், பேசுந்தொறும், எப்போதும் அனைத்தெலும்பு உள்நெக ஆனந்தத் தேன் சொரியக்'' கூடியதாம். உலகிடை இன்பம் துன்பத்தையே பிற்பயக்கும். ஆனால், இவ்விறை இன்பம் "அந்தமொன்றில்லா ஆனந்தம்'' தரக்கூடியதாம்.*

*இதுகாறுங் கண்டவற்றால் மணிமொழியாரின் திருவாசகம், பிறவிப் பெருங்கடல் நீந்தவேண்டுமென்றிருப் பார்க்கு எவ்வாறு வழிகாட்டியாயிருப்ப தென்பதும் அஃதும் அப்பேற்றை அடைந்தா ரொருவர் கூறிய தென்பதும், எக்காலத்தும் எச்சமயத்தார்க்கும் விளக்கா யுள்ள தென்பதும் இந்நூல் யாவரும் விரும்பிக் கற்றற்குரிய தென்பதும் ஒருவாற்றான் பெறப்படுகின்றதன்றோ?*

# 5. திருவாசகத்தில் விஞ்ஞானம்

'திருவாசகத்தில் உருகாதார் ஒரு வாசகத்திலும் உருகார்' என்பது இன்றும் வழங்கும் பழமொழி ஆகும். மனிதன் பெற்றுள்ள பேறுகளுள் சிறந்த ஒன்று அவன் எப்பொழுதாவது பெறும் மன உருக்கமாகும். வெறும் அறிவைமட்டும் துணை கொண்டு வாழ வேண்டும் என்று மனிதன் என்றைக்கு நினைத்தானோ, அன்று தொடங்கிற்று உலகிற்குக் கேடுகாலம். விலங்கினங்களும் கூடத் தம் குட்டிகளிடத்து அன்பு செலுத்துகின்றன; அவற்றைப் பிரிய நேரும் பொழுது மனம் வருந்தி உருகுகின்றன. ஆனால், மனிதன் மட்டும் இவ் விதிக்கு விலக்காக இருக்கவேண்டும் என்று மனிதருள் சிலர் நினைக்கத் தொடங்கி விட்டனர். உருகும் இந்த இயல்புதான் மனிதனை மனிதனாகச் செய்யும் பண்பாடு என்பதை ஏனோ உலகம் மறக்க முற்பட்டு விட்டது! மனித மனம் உருக வேண்டுமானால் அதற்குத் துணைபுரியக் கருவிகள் சில வேண்டும். அழிந்துபோகும் பொருள்களை நினைந்து பயனற்ற முறையில் உருகாமல், பயனுடைய முறையில் இவ்வுருக்கம் தோன்றல் வேண்டும். இது கருதியே நம் பெரியவர்கள் தம்முடைய மனம் சென்று பற்றவும், உருக்கம் கிடைக்கவும் கடவுளைக் கொண்டனர். கடவுள் இடத்தில் கொண்ட ஈடுபாடும் உருக்கமும் உலகிலும் அவர்கள் செம்மையாக வாழப் பயன்பட்டன. கடவுளிடத்தில் அன்பு செய்து, உருகிப் பழகிய அவர்கள் மனம் பிறர் துயரம் கண்ட வழியுங்கூட அனலிடை இட்ட மெழுகென உருகலாயிற்று. கடவுள்மாட்டு அவர்கள் கொண்ட உருக்கத்தால், சிலர்

நினைப்பது போலப் பிறர் துயரத்தைக் காணாக் குருடர்களாகவும், கேளாச் செவிடர்களாகவும் அவர்கள் இருக்கவில்லை. அதற்கு மறுதலையாக அனைத்துயிர் களிடத்தும் அன்பு செலுத்தும் மன நிலையை அவர்கள் பெற்றிருந்தனர்.

இவ்வகை மனநிலையை அடிப்படையிற் கொண்டு அவர்கள் பாடல்கள் இயற்றியமையால்தான் அப் பாடல்களைப் படிக்கும் அனைவருக்கும் சிறந்த முறையில் மன உருக்கத்தை அவை தந்தன. இவ்வகைப் பாடல் கட்குத் 'திருவாசகம்' சிறந்த ஓர் எடுத்துக்காட்டாகும் 'திருவாசகம் இங்கு ஒருகால் ஓதின், கருங்கல் மனமும் கரைந்துருகக் கண்கள் தொடுமணற் கேணியின் சுரந்து நீர் பாய அன்பராகுநர் அன்றி மன்பதை உலகில் மற்றையர் இலரே' என்று சிவப்பிரகாச அடிகளார் அருளிச் செய்ததில் நிறைந்த கருத்தாழம் உளது. திருவாசகம் உருகி உருகிப் பாடிய ஒரு பெரியாரின் அனுபவமே ஆகும். எனவே, அதைப் படிக்குந்தோறும் அப்பெரியார் அப் பாடல்களில் பெய்து வைத்துள்ள அனுபவம் நம்மையும் பற்றிக்கொள்கிறது.

இவ்வரும் பெரும் நூலின் உருக்கும் இயல்பைப் பற்றிக் கூற வரவில்லை இக்கட்டுரை. ஆனால், இத்தகைய அரிய 'பக்திப் பாடல்'களை இயற்றிய பெரியாரின் விஞ்ஞான அறிவைப்பற்றி ஓரளவு காண்பதே நோக்கம். 'பக்திமான் கண்டது பிரசாதம்' என்று கண்மூடித்தனமாகக் கதறும் இற்றை நாள் தமிழர்கள் அறிய வேண்டியது ஒன்றுண்டு. தமிழ்நாட்டில் தோன்றிய பக்திமான்கள் இவ் 'அறிவாளிகள்' நினைப்பதுபோல் கல்வி வாசனை அற்றவர்கள் அல்லர். உதாரணமாக மாணிக்கவாசகர் ஒரு பெரிய அரசின் அமைச்சராக இருந்தவர் என்பதே சாலும்.

கையெழுத்து நாட்ட அறியாதவர்களும் தேர்தலுக்கு நின்று, தம்மை ஒத்த அறிவாளிகளின் வாக்குரிமையை மிகுதி யாகப் பெற்று விட்ட ஒரே காரணத்தால் அமைச்சராக வந்துவிடும் இயல்பு அறிவு வளர்ந்த இற்றை நாளில் காணப்பெறும் இயல்பு. இவர்கள் நினைப்பதுபோல 'அறிவாளிகள்' குறைந்த அந்த நாட்களில் விமானமும் நீர்மூழ்கிக் கப்பலும் அறியப்படாத அந்த நாளில், வாக்குரிமை பெற்று யாரும் அமைச்சராக வந்ததில்லை. தம் கல்வி, அனுபவம், அறிவு என்ற இவற்றையே துணையாகக் கொண்டு அவர்கள் அமைச்சர் பதவியை அடைந்தனர். எனவே, மணிவாசகர் அவரே கூறுவது போன்று 'கல்வி' என்னும் பல்கடல் பிழைத்து' வந்தவர் என்பதில் எள்ளளவும் ஐயத்திற்கிடமில்லை.

அடுத்துக் காண வேண்டிய உண்மையும் ஒன்றுண்டு. விஞ்ஞான அறிவு மெல்லக் கடவுள் உணர்ச்சியை மாய்த்துவிடும் என்று நம்மில் பலரும் மனப்பால் குடிக் கிறோம். இற்றை நாளில் விஞ்ஞானத்தின் தந்தையராக விளங்கும் பேராசிரியர் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன், ராபர்ட் ஏ. மில்லிகன் போன்ற இரும்புத் தலைவர்கள் அனைவரும் ஒப்பற்ற பக்திமான்களாக விளங்கியதோடு தற்கால விஞ்ஞானம் சமய வாழ்க்கைக்குப் பெரிய அரணாக விளங்குகிறதென்ற கருத்தும் உடையவர்கள். ஆனால், விஞ்ஞானம் என்ற சொல்லின் எழுத்தைக் கூடக் கூட்டத் தெரியாத நம் ஊர் அறிவுவாதி மட்டுமே 'விஞ்ஞானம் சமயத்தையும் கடவுளையும் பொய்ப்பிக்கத் தோன்றிய மந்திரக் கோல்' என்று நினைக்கிறான்; வாய்கூசாது பேசுகிறான். இது நிற்க, நம் நாட்டில் பழங்காலத்தில் வாழ்ந்த மணிவாசகர் போன்ற பெரியவர்களும் அற்றைநாள் வளர்ச்சிக்கு ஏற்ற முறையில் விஞ்ஞான அறிவைப் பெற்றுத் திகழ்ந்தனர். அவர்களுடைய இந்த

அறிவு அவர்களுடைய பக்திக்கும் உருக்கத்திற்கும் தடையாக அமையவில்லை என்பது மட்டுமன்று, அரணாகவும் அமைந்ததைத் திருவாசகம் போன்ற நூல்கள் எடுத்துக் காட்டுகின்றன. மணிவாசகப் பெருமான் பெற்றிருந்த விஞ்ஞான அறிவு அவருடைய பக்திக்கு இடையூறாக அமையவில்லை. இதோ ஓர் உதாரணம். 'திரு அண்டப் பகுதி' என்பது திருவாசகத்தில் உள்ள மூன்றாவது அகவல். இப் பாடலினுக்கு விளக்கம் தர வந்த இடைக்காலப் பெரியோர்கள் 'சிவனது தூல சூக்குமத்தை வியந்தது' என்று கூறினார்கள். இப் பாடலின் முதல் ஐந்து வரிகள் மட்டும் கீழே தரப்படுகின்றன.

'அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக்கு ஒன்று நின்றஎழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இல்நுழை கதிரின் துன்அணுப் புரையச்
சிறிய ஆகப் பெரியோன்.... ''

திருவா–3:1

இதன் பொருள்: 'அண்டமாகிய பேருலகின் பகுதிகளின் உருண்டை வடிவமான பெருக்கம் அளத்தற்கரிய தன்மை யுடையனவாய், வளமிக்க காட்சியுடையனவாய், ஒன்றை யொன்று அடுத்து நிற்கும் நிலையினை அளவிட்டுக் கூறப் புகுந்தால் நூறுகோடியின் மேம்பட்டனவாகும். இத் துணைப் பெரிய அண்டம் முழுவதும், வீட்டினுள் இருளில் நுழையும் சூரியகிரணங்களில் காணப்பெறும் சிறிய அணுக்கள்போல உள்ளது என்று கூறும்படி அவ்வளவு பெரியோனாக விரிந்தும் பரந்தும் உள்ளான் இறைவன்.'

இப்பாடலில் காணப்பெறும் சில விஞ்ஞான உண்மை களை மட்டும் எடுத்துக்கொண்டு அவை தற்கால

விஞ்ஞானப் புதுமைகளுடன் எவ்வளவு ஒத்துள்ளன எனக் காண்போம். 'அண்டப்பகுதி' என்று பெருமான் கூறியதை இற்றை நாளில் `Universe' என்று கூறுகிறோம். அதில் உள்ள 'உண்டைப்பிறக்கம்' என்பதனை Galaxies' என்று கூறுகிறோம். 'நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன' என்பதனை `Expanding Universe' என்கிறோம். 'அண்டமாகிய பெரும் பகுதியில் நூறு கோடியின் மேலாக உண்டைகள் பெருக்க முற்று விரிந்தன' என்கிறார் பெருமான். பக்தர் ஒருவர் பக்தி மேலீட்டால் கண்ணை மூடிக்கொண்டு 'அளந்தவை'யல்ல இவை என்பதை நன்கு மனத்தில் பதித்துக்கொண்டு கீழ்வரும் விஞ்ஞானிகள் கூறும் கூற்றைச் சற்றுக் காணவேண்டும்.

ஐன்ஸ்டீனின் கணக்கின்படி இவ்வண்டத்தின் அரைவிட்டம் (radius) 35 கோடி ஒளி வருடங்கள். இதனை நாமறிந்த மைல் கணக்கில் 210—ன் பிறகு 21 பூஜ்யங்கள் எழுதவேண்டும்; அதனைப் படிக்கக் கூடியவர்கள் படித்துப் பார்க்கட்டும். ஒரு வினாடிக்கு 186,000 மைல்கள் வேகம் செல்லக்கூடிய சூரிய ஒளியானது அண்டத்தில் ஓரிடத்தில் புறப்பட்டு அதனைச் சுற்றிக்கொண்டு மீட்டும் புறப்பட்ட இடத்திற்குவர 200 கோடி மானிட வருடங்கள் ஆகும்.[1] மணிவாசகப் பெருமான் கூறியபடி 'அண்டப்

---

[1] Applied to Einstein's field equations this figure yields a positive value for the curvature of the universe, which in turn reveals that the radius of the universe is 35 billion light years or 210,000,000,000,000,000,000,000 miles. Einstein's universe, while not infinite,. is nevertheless sufficient by enormous to encompass billions of galaxies, each containing millions of flaming stars and incalculable quantities of rarefied gas, cold systems of iron and stone and cosmic dust . A sunbeam, setting out through space at

பகுதியில் உள்ள உண்டைகளின் பெருக்கம்' நூறு கோடியின் மேம்பட்டன என்பதை இற்றை நாள் வானநூலார் ஒப்புக்கொள்வது மட்டுமன்று; அவை எண்ணி மாளாதவை என்றே கூறுகிறார்கள். பெருமனும் 'நூற்றொரு கோடியின் மேற்பட' என்ற சொல்லால் அவை எண்ணி மாளாதன என்ற கருத்தையே வலியுறுத்துகிறார்.

மனத்திற்கு மயக்கந்தரும் இக்கணக்கு ஒருபுறம் நிற்க. அடிகள் பாடலின் நான்காவது அடியின் கடைசிச் சொல் நம் வியப்பை இன்னும் மிகுதிப்படுத்துகிறது. அச்சொல் 'விரிந்தன' என்ற ஆழமான பொருளையுடைய சொல். ஏனைய நாடுகளோடு மிகுதியும் தொடர்புடைய தமிழர்கள் அற்றை நாளில் வான நூற் புலமையுடையவர் களாக இருந்திருப்பர் என்றே நினையவேண்டி உளது, 'விரிந்தன' என்ற இந்த ஒரு சொல்லால், 'கோப்பர்நிகஸ்' (Copernicus) உலகம் உருண்டை வடிவானது என்று கூறுமுன்பே இத்தமிழர் அண்டத்தில் உலவும் உலகங்கள் அனைத்தும் உருண்டை வடிவம் உடையன என்று கூறியதைக் கண்டோம். அதனினும் பார்க்க வியப்பான தாகும் 'அவ்வுண்டைகள் விரிந்தன' என்று கூறியது. இற்றைநாள் வான் நூலாரும் அண்டம் விரிந்து கொண்டே செல்கிறதென்ற முடிவுக்கு வந்துள்ளனர்.

"அண்டத்தில் அரைவிட்டம் ஒளி அலைகளை விட வேகமாகப் பெருகிக் கொண்டே செல்லுகிறது; இன்னும் வேகமாகப் பெருக ஏதுவும் உண்டு. இப்பொழுதுகூட ஓரிடத்திலிருந்து புறப்பட்ட ஓர் ஒளி அலை

---

the rate of 185,000 miles a second would in this universe, describe a great cosmic circle and return to its source after a little more than 200 billion terrestrial years.:- '**Universe & Dr. Einstein**' by Lincoln Barnett, Page 105.

அண்டத்தைச் சுற்றிவர இயலாதபடி அதன் பரிதி வட்டம் மிகுந்துகொண்டே செல்கிறது.''[2] இங்குப் பேசப்பெற்ற விரிவின் வேகத்தைக் கணக்கிட்டு ஒருவாறு தருகிறார் ஐன்ஸ்டீன்.

"விண்மீன் மண்டலத்தின் உள்ளே இயங்கும் நமது சூரிய மண்டலம் வினாடிக்கு 13 மைல் வேகத்திலும், இவ் விண்மீன் மண்டலம் பால் வெளிக்குள் (Milky Way) வினாடிக்கு 200 மைல் வேகத்திலும் இப் பால் வெளி இன்னும் தூரத்துள்ள மண்டலங்களை நோக்க வினாடிக்கு 100 மைல் வேகத்திலும் போகின்றன; இவை அனைத்தும் வெவ்வேறு திசைகளில் செல்லுகின்றன என்பதே விந்தை.[3]

"அண்டத்திற்குப் பரிமாணம் என்பதில்லை; ஏன் எனில் அது விரிந்துகொண்டே செல்கிறது. சில

---

2 It is probable that the radius of space is already increasing faster than the velocity of light, and this rate of expansion will grow greater. Already it would be impossible for a ray of light to go all round the world, for the circumference of the world is growing faster than light could overtake it. - J.W.N. Sullivan in ``**Limitations of Science**'', Page 21.

3 The entire solar system, moreover, is moving within the local star system at the rate of 13 miles a second; the local star system is moving within the Milky Way at the rate of 200 miles a second; and the Milky Way is drifting with respect to the remote external galaxies at the rate of 100 miles a second -- and all in different directions! ``A distant universe in the constellation of Bootes has been found to be receding with a velocity of 24,300 miles a second." -- `**The Universe & Dr. Einstein'**, Page 44 & `**Life in Other Words'**, Page 19.

ஆண்டுகளாகவே இவ்விரிவை விஞ்ஞானிகள் அறிந்துள்ளனர். இவைகளின் விரிவு வேகத்தைக் கணக்கிட்டே அண்டத்தின் விரிவை அறிகிறோம்".[4]

அண்டம், அதிலுள்ள உண்டைகள், அவற்றின் விரியும் இயல்பு என்பவைபற்றி மணிவாசகனார் கூறியன போக இன்னும் எத்தனையோ உண்மைகளும் கூறப்படுகின்றன. பருமைக்கு உதாரணமாக இவ்வண்டத்தைக் கூறி இறைவன் இதனைவிடப் பெரியோன் ஆகலின் அவன் பெருமையை நோக்கக் கற்பனைக் கடங்காத இவ் வண்டமும் துன் அணுவை ஒப்பச் சிறியதாய்விட்டது என்கிறார். அண்டத்தைப்பற்றி அவர் அறிந்திருந்தது போலவே அணுவைப்பற்றியும் அறிந்திருந்தார். இவ் விடத்தில் அணுவுக்குத் 'துன் அணு' என்ற அடைமொழி தரப்பட்டுள்ளது. இனி மற்றொரு பாடலில் அணுவும் பிரிந்து சிறிதாம் தன்மை பேசப்படுகிறது. 'இன்று எனக் கருளி' என்று தொடங்கும் 'கோயில் திருப்பதிகம்' ஏழாம் பாட்டில்

**'சென்று சென்று அணுவாய்த்**
**தேய்ந்து தேய்ந்து ஒன்றாம்'**

என்று பாடிச் செல்கிறார். மேலும்

**'அணுத்தரு தன்மையில் ஐயோன் காண்க'**

(அண்டப் பகுதி—45) என்றும் பேசுகிறார். ஒரு காலத்தில் சிறந்த விஞ்ஞானியாகிய டால்டன் (Hugh Dalton) என்பார்,

---

[4] 'Space has no definite volume, for it is continually expanding.' 'It has been known for some years that they are scattering apart rather rapidly and we accept their measured rate of recession as a determination of the rate of expansion of the world.' --**Limitations of Science**, Page 12.

'உடைக்க முடியாதது' என்ற பொருள்பட இதற்கு அணு (atom) என்று பெயரிட்டார். ஆனால், இற்றை நாளில் இவ் அணுவை உடைத்து இதனுள் ஓர் உலகமே இயங்குகிறது எனக் கூறுகிறார்கள். அணுவினுள் அடங்கி இருக்கும் இவ்வியத்தகு தன்மையைத்தான் அடிகள் 'அணுத்தரு தன்மையில் ஐயோன்' என்று கூறினார் போலும். 'ஐயோன்' என்ற சொல்லுக்கு 'மிகச் சிறியவன் என்பது ஒரு பொருள். 'ஐ வியப்பாகும்' என்ற தொல்காப்பியனார் கருத்துப்படி அணுவினுள் வியத்தகு முறையில் மின் அணுவாய், (Electron) பரமாணுவாய் (Proton), நியூட்ரானாய் (Neotron), பாசிட்ரானாய் (Positron) விளங்கும் சக்தி வடிவங்களைத் தான் அடிகளார் குறிப்பிட்டாரோ, ஏதோ அறியோம்!

இனி முக்கூட்டுப் பரிமாணம் உடைய உலகத்தையும் (எல்லா உலகங்களும் இச் சொல்லால் குறிக்கப் பெறுகின்றன ) அவ்வுலகம் தோன்றி அழிய இடந்தருகின்ற விசும்பையும் ஆசிரியர் அறிந்திருந்தது வியப்பன்று. 'காலம்' என்று கூறப்பெறும் ஒன்றை இம் மூன்று பரிமாண முடைய உலகத்தோடு தொடர்புபடுத்திக் கூறுவதுதான் வியப்பினும் வியப்பாகும்! திருவாசகத்தில் 47ஆவது பாடலாக வரும் இப் பாடலைச் சற்றுக் கூர்ந்து கவனிக்க வேண்டும்.

"மேலை வானவ ரும்அறி யாத(து)ஓர்
கோல மேஎனை ஆட்கொண்ட கூத்தனே!
ஞால மே!விசும் பே!இவை வந்துபோம்
கால மே! உனை என்றுகொல் காண்பதே?"

திருவா–5 : 47

"ஞாலமாகவும், விசும்பாகவும், இவை இரண்டும் தோன்றி மறைதற்குக் காரணமாகவும் நிலைக்களமாகவும் உள்ள

காலமே! உன்னை என்று காண முடியும்?' என்று பெருமான் கூறும்பொழுது கொஞ்சம் வியப்படையத்தான் வேண்டியிருக்கிறது. இறைவனைக் காலம் கடந்தவன், 'காலகாலன்' என்றெல்லாம் கூறுவது மரபு. ஆனால், ஞாலமும் விசும்பும் வந்துபோதற்குரிய 'காலம்' என்று கூறுவது புதுமை என்பது மட்டுமன்று; ஐன்ஸ்டீனுக்கு ஆயிரம் ஆண்டுகள் முன்னரே அவர் கண்ட கனவைக் கண்டதுபோல் அல்லவா இருக்கிறது? என்றும் உள்ளவனாகிய இறைவனை என்றும் உள்ளதாகிய காலம் என்று குறிப்பிடுவது எவ்வளவு பொருத்த முடையது?

ஐன்ஸ்டீன் கண்ட காட்சியில் காலத்தில் வந்து போம் ஞாலம் காட்சியளிக்கிறது. விஞ்ஞானி தனது 'தொலை நோக்கி'யின் மூலம் கற்பனைக்கு அடங்காத தூரத்தில் இருப்பதாகக் கூறப்படும் ஓர் உலகைக் காணும்பொழுது இன்று இவ்வுலகம் இருக்கும் நிலையைக் காணவில்லை; காணவும் முடியாது. அவனுடைய ஒப்புயர்வற்ற அந்தத் தொலைநோக்கி 50 கோடி ஒளி ஆண்டுகட்கு முன் செல்கிறது. அன்று அந்த உலகம் எவ்வாறு இருந்ததோ அதையன்றோ இன்று காணுகிறது; காட்டுகிறது. உலகில் கல்தோன்றி மண் தோன்றாத அந்த நாளில் அத்தூர உலகில் இருந்து புறப்பட்ட ஒளியன்றோ இன்று விஞ்ஞானியின் தொலை நோக்கியில் பிரதிபலிக்கிறது. பன்னூறு ஆண்டுகளின் பின்னர் அவ்வுலகம் அழிந்து கூட இருக்கலாம். ஆனால், அவ்வழிவை நாம் அறிய இன்னும் எத்தனை ஆயிரம் ஆண்டுகள் ஆகும்?[5]

---

[5] When the astronomer peers through his telescope he looks not only outward in space but backward in time. His sensitive cameras can detect the glimmer of island

*இவற்றை எல்லாம் ஓரளவு உணர்ந்த அடிகளார் அன்று திருவாசகத்தில்,*

வண்ணந்தான் சேய(து) அன்று வெளிதே அன்றுஅ
நேகன்ஏகன் அணுஅணுவில் இறந்தாய் என்(று)
அங்(கு)
எண்ணந்தான் தடுமாறி இமையோர் கூட்டம்
எய்துமா(று) அறியாத எந்தாய்! ...... திருவா– 5 : 29

*என்று பாடிச் செல்வதை மொழிபெயர்த்தது போல உலகப் பேரறிவாளியான ஐன்ஸ்டீன் கூறும் மொழி களுடன் இதனை முடிப்போம்:*

'My religion consists of a humble admiration of the illimitable superior spirit who reveals himself in the slight details we are able to perceive with our frail and feeble minds. That deeply emotional conviction of the presence of a superior reasoning power, which is revealed in the incomprehensible universe, forms my idea of God'. The Cosmic religious experience is the strongest and noblest mainspring of scientific research.

---

universes 500 million light years away--faint gleams that began their journey at a period of terrestrial time when the first vertebrates were starting to crawl from warm paleozoic seas onto the young continents of Earth. His spectroscope tells him, moreover, that these huge outer systems are hurtling into limbo, away from our own galaxy, at incredible velocities ranging upto 35,000 miles a second. Or more precisely they **were** receding from us 500 million years ago. Where they are '**now**', or whether they even '**exist now**' no one can say. --'The Universe & Dr. Einstein', Page 78.

'He to whom this mystical experience is a stranger, who can no longer wonder and stand rapt in awe, is as good as dead. To know that what is impenetrable to us really exists, manifesting itself as the highest wisdom and the most radiant beauty which our dull faculties can comprehend only in their most primitive forms this knowledge, this feeling is at the centre of true religiousness.'



# 6. நம்மாழ்வார்

இப்பரந்த உலகைத் தோற்றுவித்த இறைவன் அதனுடன் நில்லாமல் உயிர்களையும் தோற்றுவித்தான். புல், பூண்டில் தொடங்கி மனிதனில் முடியும் இவ்வுயிர்க்குலம் முழுவதும் ஒரு தொடர்பு கொண்டே நிலைபெற்று வருகிறது. இத்தொடர்பை நன்கு அறிந்த நம் பெரியோர்கள் புல், பூண்டு முதலியவற்றை ஓரறிவுயிர் என்றும், மனிதனை ஆறறிவுயிர் என்றும் பிரித்து, இடைநின்றவற்றை ஒவ்வோர் அறிவை முறையே அதிகம் பெற்றவை என்றும் கூறிப்போயினர். இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டவராகிய தொல்காப்பியனார் இந்த உயிர் பகுப்பு முறையை எவ்வளவு அழகாகத் தம் இலக்கணத்தில் கூறிப் போயினார் என்பதை அறியும் பொழுது நாம் அடையும் வியப்பிற்கு அளவே இல்லை. இதோ அவர் கூறும் உயிர்பகுப்பு முறை,

**"ஒன்று அறிவதுவே உற்று அறிவதுவே;**
**இரண்டு அறிவதுவே அதனொடு நாவே;**
**மூன்று அறிவதுவே அவற்றொடு மூக்கே;**
**நான்கு அறிவதுவே அவற்றொடு கண்ணே;**
**ஐந்து அறிவதுவே அவற்றொடு செவியே;**
**ஆறு அறிவதுவே அவற்றொடு மனனே;–**
**நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே.''**

**(தொல்:பொருள்–மரபு–27)**

இப்பகுப்பு முறையை மரபியல் என்ற தலைப்பின் கீழ் அவர் கூறியதிலிருந்து ஒன்றை அறிந்து கொள்ள

முடிகிறது. இப்பகுப்பு முறையை ஆசிரியர் தொல்காப்பியனார் தாமே ஆய்ந்து கூறினார் அல்லர் என்பதும் பெறப்படும். ஒரு மொழிபேசும் இனத்தவரிடையே பன்னூறு ஆண்டுகளாக மாறாமல் வழங்கி வரும் சிலவற்றை 'மரபு' என்று கூறுகிறோம். எனவே, இப்பகுப்பு முறையை மரபியலில் கூறினார் என்பதாலேயே அவர் காலத்திற்குப் பன்னூறு ஆண்டுகட்கு முன்பே தமிழர் இப்பிரிவினையைக் கண்டிருந்தனர் என்பது, அதனை விடாமல் போற்றிப் பாதுகாத்தனர் என்பதும் நன்கு அறியப்படும்.

மனிதனுக்குரிய தனிச் சிறப்பு, ஒரு பொருளைப் பற்றி புறத்தே நின்று ஆராயவும், சிந்திக்கவும் கூடிய இயல்பைப் பெற்றுள்ளமையே ஆகும். உற்றறிவு முதலியவற்றைப் பெற்றுள்ள பிற உயிர்கள் பொருளையும் தன்னையும் பிரித்து ஆயும் இயல்பு பெற்றவையல்ல. ஆதலால் அவை 'நான் யார்? என் உள்ளம் யார்? ஞானங்கள் யார்?' (திருவாசகம்) என்ற வினாக்களை எழுப்பவும் இவ்வினாக்கட்கு விடை கூறவும் வல்லவை அல்ல.

விலங்குகட்கும், மக்கட்பிறப்பில் இழிந்த மாக்கட்கும் இயலாத இக்காரியத்தைச் செய்யும், உயிர்களே பிறப்பில் உயர்ந்துள்ள மக்கள் பிறப்பாகும், நம் போன்றவர்கள் மனத்தில் இத்தகைய வினாக்கள் தோன்றுவது கடினம், ஒரோவழித் தோன்றினாலும் நின்று நிதானித்து விடை காணும் அளவுக்கு நாம் பொறுமையும், அறிவும் பெற்றிருக்கவில்லை. ஆனால் இவ்வினாக்கட்கு விடை காணும் ஆற்றலுடையவர்களையே உலகம் பெரியார்கள் என்றும், ஞானிகள் என்றும், அடியார்கள் என்றும், ஆழ்வார்கள் என்றும் கூறிச் செல்கிறது.

இந்த வினாக்களை எழுப்பி விடை காண்பவர்களும் இருவகைப்படுவர். அறிவு ஒன்றின் துணைகொண்டு மட்டும் விடை காண்பார் ஒரு வகையினர், அறிவின் துணையுடன் மெய்ப்பொருளை அறிந்துபெறும் அனுபவத்தையும் உடன்கொண்டு அவற்றின் பயனாக விடை காண்பவர் பிறிதொரு வகையினர். இவ்விரண்டாவது வகையைச் சேர்ந்தவர்களை இத்தமிழ் நாட்டார் அடியார்கள், நாயன்மார்கள், ஆழ்வார்கள் என்ற பெயரால் அழைத்தனர். ஒருவன் ஓர் உண்மையைக் கூற வேண்டுமாயின் அதற்குரிய தகுதி அவனிடம் இருத்தல் வேண்டும். தகுதி இல்லாதவன் சொல்லுக்குச் செம்மையான மதிப்பு இருப்பதில்லை. ஆழ்வார்கள், நாயன்மார்கள் என்ற இவர்கட்கு எத்தகைய தகுதி அல்லது உரிமை இருந்தது என்பதனை முதலிற் காண வேண்டும்.

மனிதன் யார் என்பது பற்றியும் உயிர்கட்குத் தலைவனாக உள்ள இறைவன் பற்றியும் பலரும் பேசியுள்ளனர். என்றாலும் அப்பலரும் பேசிய பேச்சிற்கும் இப்பெரியார்கள் பேசிய பேச்சிற்கும் வேறுபாடு நிரம்ப உண்டு. இவர்கள் தங்களை உள்ளவாறு கண்டு, பரம்பொருளையும் கண்டு, அறிந்து, தெளிந்து, உணர்ந்து பாடி இருக்கின்றனர். இங்குக் கூறப்பெற்ற அறிதல், தெளிதல், உணர்தல் என்ற மூன்றும் முதலாவதாகக் கூறப்பெற்ற காட்சி இல்லாமலும் பெறுதல் கூடும். அனுமான அறிவின் துணைகொண்டு பொருளை ஆராய்ந்து அறியலாம்; ஓரளவு தெளியவும் செய்யலாம். ஆனால் உணர்தல் என்பது கடினம். இங்குக் கூறப்பெற்ற உணர்தல் என்பதன் பொருளை அறிந்து கொண்டால் ஆழ்வார்களும் நாயன்மார்களும் ஏனையோரைவிட எவ்விதத்தில் வேறுபட்டவர்கள் என்பதை அறிய முடியும்.

நம் நண்பர் ஒருவரைப் பற்றி நாம் நன்கு தெரிந்திருக்கலாம், அறிந்தும் இருக்கலாம். அவருடைய பண்புகளைத் தெரிந்தும் இருக்கலாம். ஆனால் அவருடைய பெயரைக் கேட்டமாத்திரத்தில் நம்முடைய மனத்தில் ஓர் உணர்ச்சி தோன்ற வேண்டுமாயின் அது வேறு விஷயம். இங்ஙனம் உணர்ச்சி தோன்றுதல் என்பது அத்துணை எளிதான காரியமன்று. அவருடன் நெருங்கி நேரிடையாகத் தொடர்பு கொண்டிருந்தாலொழிய உணர்ச்சி தோன்றுதல் என்பது இயலாத காரியம். ஒரு பொருளிடமோ, அன்றி ஒருவரிடமோ உணர்ச்சி தோன்ற வேண்டுமாயின் அப்பொருளைக் கண்டு, பலகாலும் பழகி அப்பொருளினிடம் ஈடுபாடு கொண்டிருந்தால்தான் முடியும். மேலே சொன்ன இந்த இலக்கணத்தை நன்கு அறிந்த பிறகுதான் ஆழ்வார்கள் இறைவனிடம் கொண்ட ஈடுபாட்டை ஓரளவு நாம் அறிய முடிகிறது.

**'கண்ணால் யானும் கண்டேன் காண்க'**

**(திருமுறை: 8, 3, 58)**

என்றும்,

**'கரந்ததோர் உருவே, களித்தனன் உன்னைக்**
**கண்ணுறக் கண்டு கொண்டு இன்றே'**

**(திருமுறை: 8, 22, 6)**

என்றும் பாடுகிறார் மாணிக்கவாசகப் பெருமான். கண்ணால் என்ற சொல்லில் உள்ள 'ஆல்' உருபும், யானும் என்பதிலுள்ள 'உம்' என்ற இடைச் சொல்லும் ஆழ்ந்து கவனிக்கத்தக்கவை. இறைவன் குறி குணம் ஒன்றும் இல்லாதவன்; கற்பனை கடந்து நிற்பவன். அத்தகைய ஒருவனைக் கருத்தால் காண்டலே முடியும். ஆனால் யான் கண்ணாலும் கண்டேன் என்று கூறுகிறார். கண்ணாலும்

*என்று கூறிவிட்டமையின் கருத்தால் கண்டமை பெறப்பட்டு விட்டது. இனி அடுத்து யானும் என்பதில் உள்ள இழிவு சிறப்பும்மை காணப்பட்ட பொருளின் இறப்ப உயர்ந்த நிலையையும் கண்டவருடைய இறப்ப இழிந்த நிலையையும் விளக்கி நிற்கக் காண்கிறோம்.*

*இதே கருத்தைத்தான் நம்மாழ்வாரும்,*

**"கார்முகில் போல் வண்ணன் என்**
**கண்ணனை நான் கண்டேனே''**

**(நாலா: 2280)**

*என்றும்,*

**'........................ எல்லாப் பொருட்கும்**
**அருவாகிய ஆதியைத் தேவர்கட்கு எல்லாம்**
**கருவாகிய கண்ணனைக் கண்டு கொண்டேனே'**

**(நாலா: 3004)**

*என்றும் பாடுகிறார். இறைவனுடைய வண்ணத்தை முதலிற் கூறுவது அறியத்தக்கதாகும். சாதாரண மக்கட் காட்சிக்கும், கடவுட் காட்சிக்கும் உள்ள வேறுபாட்டை அறிவுறுத்துகின்றது இந்த அடி. மக்கட் காட்சியில் முதலில் தோன்றுவது வடிவமேயாகும். இன்னும் அருகில் செல்லும் பொழுதுதான் வண்ணம் அல்லது நிறம் தெரியும். அதையும் அடுத்து, நெருங்கிச் செல்கையில்தான் உருவம் தெரியும். ஆனால் இறைவனைக் காணும் காட்சியில் முதலில் தெரிவது வண்ணம் அல்லது நிறமேயாகும். இதை மனத்துட் கொண்டுதான் ஆழ்வார்,* **'கார்முகில் போல் வண்ணன் . . கண்டேனே'** *என்று பாடுகிறார். மணிவாசகப் பெருமானும் இத்தகைய காட்சியைக் கூறுமிடத்து,*

**'வண்ணந்தான் அதுகாட்டி, வடிவுகாட்டி**
**மலர்க்கழல்கள் அவை காட்டி'**

**(திருமுறை: 8, 3–5)**

என்று பாடிச் செல்கிறார்.

இவ்வாறு கூறினவுடன் வடிவத்தைக் காண்கின்ற அளவில் இவர்கள் ஆற்றல் முடிந்துவிடுகிறதா என்று ஐயுறத் தேவையில்லை. இது கருதியே போலும் ஆழ்வார் அடுத்தபடியாக 'எல்லாப் பொருட்கும், தேவர்கட்கு எல்லாம் கருவாகிய கண்ணனை' என்றும் கூறுகிறார். பொருட்கும் என்ற சொல்லால் அஃறிணைப் பொருள்கள் அனைத்தையும் குறிப்பிட்ட பின்னர் உயர்திணைத் தொகுதியில் தேவர்களைக் குறிப்பிடுவதால் மக்களையும் உடன் சேர்த்துக் கொள்கிறார். எனவே சர அசரம் ஆகிய அனைத்திற்கும் கருவாய் இருப்பவன் இறைவன் என்ற பேருண்மையைக் கூறியவாறாயிற்று. உருவுடைப் பொருள் கள் அனைத்திற்கும் கரு என்ற கூறினமையின் அக்கருவும் உருவுடையதோ என்று ஐயுறுவோரின் ஐயத்தைப் போக்கு முறையில் 'அருவாகிய ஆதியை' என்று கூறினார்.

உருவிலாது கருவாகிய இறைவனை உருவுடைய நான் கண்டேன் என்றும், கருவாக இருக்கின்ற இறைவனைக் கருவில் தோன்றிய தான் கண்டேன் என்றும் ஆழ்வார் கூறுவது ஆய்தற்குரியது. முரண் பாட்டில் முழுதலைக் கண்ட பெருமை இப்பெரியாருக்கு உரியதாகும். **'தோற்றம், கேடு அவை இல்லவன்; உடையான்'** (நாலாயிரம் 3, 6—6) என்பது **'துயரமே தரு துன்ப, இன்ப வினைகளாய், அவை அல்லனாய்'**(3, 6—8) என்பது முதலான அடிகள் இம் முரண்பாட்டைப் பற்றிக் கூறுவனவேயாம். இது பற்றிப் பின்னருங் காணலாம்.

*அவ்வாறாயின உருவில்லாத அப்பொருளை உருவுடைய இவர் எங்ஙனம் கண்டார் என்ற வினாத் தோன்றும். காண்டல் இருவகைப்படும். ஒன்று கருத்தாற் காண்டல், ஏனையது கண்ணாற் காண்டல். இப்பெருமான் கண்ணாலுங் கண்டதாகக் கூறினமையின் கருத்தாற் கண்டது சொல்ல வேண்டா. இனிக் கண்ணாற் காண்பதற்குரிய வாய்ப்பு எவ்வாறு கிடைத்தது என்பார்க்கு விடை கூறுவார் போன்று ஆழ்வார்,*

**"துயரில் சுடரொளி தன்னுடைச் சோதி**
**நின்ற வண்ணம் நிற்கவே,**
**துயரில் மலியும் மனிசர் பிறவியில்**
**தோன்றிக்கண் காண வந்து**
**துயரங்கள் செய்து, தன் தெய்வநிலை உலகில்**
**புக உய்க்கும் அம்மான். . .**

**(நாலா:2408)**

*என்று பாடிச் செல்கிறார். அடியார்கள் அன்புடன் வேண்டும்பொழுது இறைவன் தன்னுடைய பரம கருணையின் காரணமாக மானுட வடிவந்தாங்கி வந்து காட்சி நல்குகிறான். இதே போன்று மணிவாசகரும்,*

**'வான்பழித்து இம்மண் புகுந்து**
**மனிதரை ஆட்கொண்ட வள்ளல்'**

**(திருமுறை: 8, 18, 4)**

*என்று கூறுவார். அவ்வாறு இறைவன் மானுட வடிவந்தாங்கி வருதல் என்பது நம்முடைய தகுதி நோக்கி அன்று என்றும் அவனுடைய கருணை காரணமாகவே என்றும் கூற வந்த பெரியார் 'ஆட்கொண்ட வள்ளல்' என்ற சொற்களால் அக்கருத்தைப் பேசுகிறார்.*

பெறுகின்றவனுடைய தகுதி நோக்காமல், தருபவனே வள்ளல் என்று கூறப் பெறுவான்.

இறைவனைப் புறக்கண்களாலும் கண்டு அவனுடைய அருள் வெள்ளத்துள் துளையமாடிய இப்பெரியார்கள் கூறும் சொற்கள் இறைவனுடைய சொற்களேயாம் என்பது இப்பெரியார்களின் கருத்து ஆகும். இறைவனைத் தம் உள்ளத்தே நிறுத்திவிட்டமையின் இவர்களுடைய செயல்கள், உரைகள் ஆகிய அனைத்தும் இறைவனுடையவை என்பதை இப்பெரியோர்கள் வலியுறுத்திக் கூறியுள்ளனர். அடியார்களின் பெருமையை உள்ளவாறு உணர்ந்து கூறும் வன்மையுடைய மணிவாசகர் இக்கருத்தைச் சொல்ல வந்தவிடத்து,

**"சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்**
**அத்தன்"**

என்று கூறுகிறார். நம்மாழ்வாரைப் போலவே ஓதாதுணர்ந்த 'சிறிய பெருந்தைகையா'ராகிய ஞானசம்பந்தர்,

**'எனது உரை தனது உரையாக'**

**(திருமுறை:1, 76, 1)**

எனக் கூறுவார்.

இக்கருத்தை இன்னும் விரிவுபடக் கூறுகிறார் நம்மாழ்வார். பேசுகின்ற தானும், தன் வாயும் கருவிகளே என்றும் பேசுவிக்கும் கர்த்தாவாக இறைவனே உள்ளான் என்பதையும் கூற வந்த பெரியார், ஒருபடி மேலே சென்று பேசுவிப்பவனாகிய இறைவன் என்று கூறாமல் பேசுகிறவன் என்றே கூறிவிடுகிறார்.

**'என்னைத் தன்னாக்கி, என்னால் தன்னை**
**இன்தமிழ் பாடிய ஈசனை'**

**(நாலா: 2832)**

*என்று கூறும்பொழுது வேதிக்கல்பட்ட இரும்பு பொன்னானது போல் அவன் திருவருள் பெற்று மானுடமாகிய தான் அவனாகவே ஆயின வரலாற்றைப் பேசுகிறார், 'என்னைத் தன்னாக்கி' என்ற சொற்களால் எப்பொழுது 'தான்' என்ற ஒரு பொருள் முற்றிலும் அற்று 'அவனாக' ஆகி விட்டதோ அப்பொழுதே இரண்டு பொருள் அற்று ஒன்றாகிவிட்ட நிலை எய்தி விடுகிறது. எனவே 'பாடினவன்' 'பாடுவித்தவன்' என்ற இருவர்க்கு இடமின்மை அறியப்படும். இது கருதியே பெரியார் 'தன்னை இன்தமிழ் பாடுவித்த ஈசன்' என்று கூறாமல் 'இன்தமிழ் பாடிய ஈசன்' என்று தன்வினை வாய்ப் பாட்டில் கூறுகிறார்.*

*இறைவன் உள்ளே புகுந்து இவரை விழுங்கி, தானாகவே ஆகிவிடினும் அந்நிலையிலிருந்து மாறிய பின்னர் இப்பெரியோர்கள் தங்களது சிறுமையையும் தங்களை மாற்றிப் பணிகொண்ட அப்பெரியோனது பரம கருணையையும் நினைந்து நினைந்து வியப்படைகின்றனர். தம்மைக் காட்டிலும் பன்மடங்கு உயர்ந்தவர்கள் இவ் வுலகிடை இருப்பதை இப்பெரியோர்கள் நினைத்துப் பார்க்கின்றனர். அப்படி இருந்தும் அவர்களை எல்லாம் ஒதுக்கிவிட்டுத் தங்களை இறைவன் தேடிப் பிடித்து ஆட் கொள்ள வேண்டிய காரணம் எதுவாக இருக்கும் என்ற ஆராய்ச்சியில் ஈடுபடுகின்றனர்.*

**'இன்கவி பாடும் பரம கவிகளால்**
**தன்கவி தான்தன்னைப் பாடுவியாது இன்று**
**நன்கு வந்து என்னுடனாக்கி என்னால் தன்னை**
**வன்கவி பாடும் என் வைகுந்தன். . .'** **(நாலா: 2837)**

**'மறப்பு இலா என்னைத் தன்னாக்கி, என்னால் தன்னை**
**உறப்பல இன்கவி சொன்ன உதவிக்கே? '**

**(நாலா: 2840)**

**'என் நெஞ்சத்து உள்ளிருந்து, இங்கு இருந்தமிழ்**
**நூல் இவை மொழிந்து**
**வன் நெஞ்சத்து இரணியனை மார்பு இடந்த**
**வாட்டாற்றான்' ''**

**(நாலா: 3132)**

*இனிய கவிகள் பாடும் பரம கவிகள் பலரும் இருக்க என்னை ஏன் வந்து ஆட்கொண்டான் என்று அதிசயிக் கின்றார் ஆழ்வார். அவ்வாறு இறைவன் வந்து ஆட் கொள்வதற்குரிய காரணம் கூறுவார் போன்று அடுத்துக் காட்டப் பெற்ற பாடலில் 'மறப்பு இல என்னை' என்று கூறுகிறார். இறைவனை என்றும் மறவாமல் மனத்துட் பதித்திருந்தமையின் அவன் வந்து ஆட்கொள்ளவும் ஒரு வாய்ப்பு ஏற்பட்டது போலும். அப்பெருமானும் ஒரு தனிச் சிறப்புடையவன் என்பதை மூன்றாவது எடுத்துக் காட்டு விளக்குகின்றது. ஒருவனை நெஞ்சத்து (ஆழ்வார்) உள்புகுந்து தன்னைத்தானே கவி பாடினானாம். மற்றொருவன் நெஞ்சத்து உட்புக மறுத்து அவன் மார்பைப் பிளந்தானாம். இதனால் ஒருவன் நெஞ்சந் திறந்திருப்பின் அதன்வழி உட்புகுந்து அவனுக்கு அருள் செய்கின்ற பெருமான் அந்நெஞ்சு திறவாமல் அடை பட்டபொழுதும் விட்டு விடுவதில்லையாம். அடைப்பட்ட அதனைப் பிளந்து சென்றும் அருள் செய்கின்றானாம். முதலது அறக் கருணையின்பாற்படுதலும் பின்னது மறக் கருணையின்பாற்படுதலும் அறியற்பாலன.*

*பிறரை விட்டுத் தம்மை மட்டும் இறைவன் ஆட்கொண்டதை ஆழ்வார் கூறி வியப்படைவதுபோலவே மணிவாசகரும் கூறி வியப்படைகின்றார்.*

**'வெள்ளந்தாழ் விரிசடையாய்! விடையாய்! விண்ணோர்**
**பெருமானே! எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்**
**பள்ளந்தாழ் உறுபுனலில் கீழ்மேலாகப்**
**பதைத்து உருகும் அவர்நிற்க, என்னை ஆண்டாய்க்கு**
**உள்ளந்தாள் நின்றுச்சி அளவும் நெஞ்சாய்**
**உருகாதால் உடம்பெல்லாம் கண்ணாய் அண்ணா**
**வெள்ளம்தான் பாயாதால் நெஞ்சம் கல்லாம்**
**கண்ணிணையும் மரமாம் தீ வினையினேற்கே'**
**(திருமுறை: 8, 3, 1)**

*இறைவன் பெயரைக் கேட்ட மாத்திரையில் உருகுகிறவர் களை விட்டு விட்டு என்னை வந்து ஆண்டாயே! அதை நினைந்து நன்றிப் பெருக்கால் என் உடம்பெல்லாம் நெஞ்சாயிருந்து உருக வேண்டாவா? உடம்பு முழுவதும் கண்ணாய் இருந்து கண்ணீர் பெருக வேண்டாவா? என்று பேசுகிறார். மேலும் அந்த வியப்பு அடங்காமையின்,*

**'கனவேயும் தேவர்கள் காண்பரிய கனைகழலோன்**
**. . . . . . . . . . . . . . . . . . . . . . . .**
**நனவே எனைப் பிடித்து ஆட் கொண்டவா'**
**(திருமுறை: 8, 11, 10)**

*என்றும் பேசுகிறார் மணிவாசகர். அன்றியும்,*

**'தந்தது உன்தன்னைக் கொண்டது என்தன்னைச்**
**சங்கரா ஆர்கொலோ சதுரர்' (திருமுறை: 8, 22, 10)**

*என மணிவாசகரும்,*

**'எனது ஆவி யார்? யான் ஆர்?**
**தந்த நீ கொண்டாக்கினையே'** **(நாலா: 2217)**

*என்று நம்மாழ்வாரும் பேசி இத்தகைய அருளுக்குச் செய்ய வேண்டிய கைம்மாறு யாது எனத் தெரியாமல் மயங்கி நிற்கின்றனர் இவ்விருவரும்.*

**"எந்தையே ஈசா உடலிடம் கொண்டாய்!**
**யான் இதற்கு இலன் ஓர் கைம்மாறே,"**
**(திருமுறை: 8, 22, 10)**

**'நம்மையும் ஓர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த அம்மை**
**(திருமுறை: 8, 51, 9)**

*என்று மணிவாசகர் பேசுவதும், நம்மாழ்வார்,*

**'கருளப் புள்கொடி, சக்கரப்படை, வானநாட!**
**என்கார் முகில் வண்ணா!**
**பொருளல்லாத என்னைப் பொருளாக்கி**
**அடிமை கொண்டாய்!**
**தெருள்கொள் நான்மறை வல்லவர் பலர்வாழ்**
**சிரீவர மங்கல நகர்க்கு**
**அருள்செய்து அங்கு இருந்தாய்! அறியேன்**
**ஒரு கைம்மாறே!**

**(நாலா: 2592)**

*என்று பேசுவதும் இறைவன் இன்னருளுக்குக் கைம்மாறு இல்லை என்று கவல்வதினாலேயாம்.*

*இங்ஙனம் இவர்களை வந்து ஆட்கொள்ளுகின்ற இறைவன் பிறர் அறியா நிலையில், ஏன், இவர்களே அறியா நிலையில் உட்புகுந்துவிடுகிறான். புகுந்த பின்னர் ஏற்படும் அனுபவ உணர்வாலேயே அவன் புகுந்ததை அறிகின்றனர் இப்பெரியார். இறைவன் வர வேண்டும்*

*என்று காத்து நிற்கையில் அவன் வரவில்லையாம். பல சமயங்களில் வருவதுபோலக் காட்டி வாரா தொழிந்தானாம்.*

'தாமரைக் கண்ணா! ஓ! தனியேன் தனி ஆளா! ஓ!
தாமரைக் கையா! ஓ! உன்னை என்று கொல்
சார்வதுவே!
(நாலா: 2799)

*இனி அவனைக் காணவேண்டும் என்ற ஆர்வமும் எல்லையற்றுச் செல்கையால் பிறர் கண்டு ஐயோ! பாவம் என்று கூறத் தக்க நிலையும் ஏற்படுகிறதாம்.*

'கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்
கண்ண நீர் கைகளால் இறைக்கும்
. . . . . .
. . . . . .
எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்டு என்னும்
இருநிலம் கைதுழா இருக்கும்
செங்கயல் பாய் நீர்த் திருவரங்கத்தாய்!
இவள் திறந்து என் செய்கின்றாயோ?
(நாலா: 2755)

. . . . . . . .
அழும்; தொழும்; ஆவி அனல் எவ்வுயிர்க்கும்
அஞ்சன வண்ணனே! என்னும்
எழுந்து, மேல் நோக்கி, இமைப்பிலன் இருக்கும்,
எங்ஙனே நோக்குகேன்? என்னும்'

(நாலா: 2762)

'ஆறா அன்பில் அடியேன் உன் அடிசேர் வண்ணம்
அருளாயே'
(நாலா: 2734)

*என்றும்*

**'பூவார் கழல்கள் அருவினையேன் பொருந்துமாறு புணராயே'**
**(நாலா: 2736)**

*'என்றும்,*

**'எந்தாள் உன் அடிக்கண் அடியேன் மேவதே?**
**(நாலா: 2738)**

*என்றும்,*

**'உன்பாதம் காண நோலாது ஆற்றேனே'**
**(நாலா: 2739)**

*என்றும் கதறும் நிலை ஏற்படுகின்றது. இத்துணைக் கதறலுக்குப் பிறகு அவன் வருவது போன்று தெரிகின்ற தாம். வந்துவிட்டான் என்று மகிழும் நேரத்தில், அவன் இன்னும் வரவில்லை என்று தெரின்றது. இது எவ்வாறு தெரிகின்றது? உள்ளத்துள்ளே இறைவன் புகுந்தால் ஏற்படக் கூடிய இன்பம் அல்லது நிறைவு ஏற்படவில்லை போலும்! என்றாலும் எடுத்துக் கொண்ட முயற்சிக்கு ஏற்ப ஏற்பட்ட இன்ப உணர்வு அவன் வந்து தன்னுள் நிறைந்துவிட்டானோ என்று ஐயுறத்தக்க ஒரு நிலையை உண்டாக்கிவிட்டது. எனினும் அந்த இன்பம் முழுத் தன்மை பெறவில்லையாகலின் வருவதுபோல அவன் வாராதொழிந்தான் என்பதை ஆழ்வார் அறிகின்றார்.*

**'நோலாது ஆற்றேன் உன் பாதம்**
**காண என்று . . . . .**
**. . . . . . . . .**
**மாலாய் மயக்கி, அடியேன்பால்**
**வந்தாய் போலே வாராயே'**

**(நாலா: 2740)**

வருவதுபோன்று காட்சி தந்த மாயன் வாராதிருந்து விட்டானாம். ஆனால் சற்றும் எதிர்பாராத நேரத்தில் 'இனி எங்கே வரப் போகின்றான்?' என்று அயர்ந்து இருக்கும் நேரத்தில் திடீரென்று வந்து விடுகிறானாம். இதனையும் பெரியார்,

**'வந்தாய் போலே வாராதாய்!**
**வாராதாய் போல் வருவானே!'** (நாலா: 2741)

என்ற அடிகளாற் குறிப்பிடுகின்றார்.

எதிர்பார்த்திருக்கையில் வாராதிருத்தலும், எதிர்பாரா நேரத்தில் அற்றம் பார்த்து உள்ளுழைதலும் யாருடைய செய்கை? கள்வர்க்குரிய செயலன்றோ? அரியபொருளைத் திருட வரும் கள்வர் எதிர்பாரா நேரத்தில் அற்றம் பார்த்து நுழைதல் போல அரியப் பொருளாகிய ஆன்மாவை நாடிவரும் இறைவனும் எதிர்பாரா நேரத்தில் வருகின்றானாம்.

ஆழ்வார் தமக்கு ஏற்பட்ட இத்தகைய அனுபவத்தை மிக அழகாகவும் விளக்கமாகவும் கூறுகிறார். எதனிடத்து நமக்கு ஈடுபாடு அதிகமோ அதனைக் கவரவே கள்வர் புகுவர் என்பது பழைய வசனம். அப்பொழுது ஈடு பாட்டின் காரணமாக வருவது யார் என்பதை அறியாமல் விட்டுவிடும் சூழ்நிலை ஏற்படுமன்றோ? ஆழ்வாருக்குக் கவிதையில் ஈடுபாடு உண்டாம். கலைஞருள் தலையாய கலைஞராய ஆழ்வாருக்குக் கலைகளுள் தலை சிறந்ததாய கவிதைக் கலையில் ஈடுபாடு ஏற்படுவதில் வியப்பொன்றும் இல்லையன்றோ. எனவே தம்மை மறந்து சிறந்த கவிதை களில் ஈடுபட்டாராம். என்ன அதிசயம்? ஒரு நாள் மாயக் கவியாய் வந்து இறைவன் உள்புகுந்தானாம். புகுந்தவன் யாரென்று அறியாமலேயே ஆழ்வார் கவிதை இன்பத்தில் ஈடுபடலாயினார். அந்த இன்பத்தை இவர் அனுபவிக்கத்

தொடங்கிய சிறிது நேரத்திற்கெல்லாம் அது இவரை அனுபவிக்கத் தொடங்கிவிட்டதாம். மருந்தை நாம் உண்பதற்குப் பதிலாக மருந்து நம்மை உண்ணும் நிலை தோன்றி விட்டது.

ஒரு சில காலம் இப்போராட்டம் நிகழ்ந்தது. மாயக் கவியாய் வந்தவன் ஆழ்வாரின் உட்புகுந்து கொஞ்சங் கொஞ்சமாக அவர் நெஞ்சின் உட்கலந்தான். தம்முடைய நெஞ்சில் பிறர் கலக்கிறார்கள் என்ற நினைவு ஆழ்வாரில் தோன்றிக் கொஞ்ச காலத்திற்கெல்லாம் தம் உயிரிலும் அம்மாயக் கவிஞன் கலத்தலை உணரத் தொடங்கினார் ஆழ்வார். தனியாக நின்ற தம்முன் அவன் வந்து கலப்பதைக் கண்டும் அதனைத் தடை செய்ய முடியாத நிலையில் இருந்தாராம் பெரியார். ஆனால் அவருள் இத்தகைய ஒரு கலப்பு ஏற்பட்டு அதனால் அவர் வேறுபாடு அடைவதை யாரும் அறியவில்லையாம்.

இது வியப்பிலும் வியப்பு! தம்மிடம் நிகழ்கின்ற மாற்றத்தைக் காட்டிலும் தம் பக்கத்தில் இருப்பவர் மாற்றத்தை அறிந்து அதுபற்றிச் சுவையுடன் பேசும் இத்தமிழ்ச் சமுதாயத்தில், பெருமானிடம் தோன்றிய இப்பெருமாற்றத்தை அறிவார் ஒருவரும் இல்லாமற் போனது வியப்பிலும் வியப்பேயாகும். பிறர் விஷயத்தில் அலர் பேசுவதையும் அம்பல் தூற்றுவதையும் பிறப்புரிமை யாக கொண்ட சமுதாயத்தில் ஆழ்வாருக்கு நேர்ந்த இப்பெருமாற்றத்தை அறிவார் ஒருவரும் இல்லாமற் போனார்கள். அம்மாயக் கள்வன் 'நின்றார் அறியா வண்ணம் ஆழ்வாரின் நெஞ்சினும் உயிரினும் உள் கலந்து' விட்டானாம்.

தத்தம் காரியங்களில் ஈடுபட்டு வேகமாக ஓடிக் கொண்டிருக்கும் நேரத்திலுங்கூட, தூரத்தில் யாரோ ஒருவருக்கு நிகழ்கின்றதைக் குறிப்பாகக் கண்டு குறை

பேசும் மக்கட் சமுதாயத்தில், ஓடாமல் நின்று கொண்டிருப்பவர்கள், தமக்கு மிகச் சமீபத்தில் நடை பெற்ற இந்தக் காரியத்தைக் கவனிக்கத் தவறிவிட்டார் களாம். 'நின்றார் அறியாவண்ணம்' என்ற சொற்களால் இந்தப் புதுமையைத்தான் ஆழ்வார் பேசுகின்றார். இவ்வாறு கூறுவதால் அம்மாயக் கள்வனுடைய மாயை யின் சிறப்பைக் கூறியவாறாயிற்று. பக்கத்தில் நின்று கொண்டிருப்பவர்கள்கூட அறியாவண்ணம் ஆழ்வாரின் உள் புகுந்தானாம் அக்கள்வன் என்பன அவன் மாயம் இருந்தவாறு.

அவன் உள் நுழைந்ததைத் தான் அறியவில்லை என்றாலும் ஆழ்வாரின் உள் புகுந்த அவன் விளைத்த செயல்களையாவது அறிந்தார்களா என்றால் அதுவும் இல்லையாம். ஆழ்வாரின் நெஞ்சும் உயிரும் அதுவரை தனித்தன்மையோடு இருந்திருக்குமாம்! அவற்றுடன் நன்கு பழகிய அயல் நின்றவர்கள் இப்பொழுது அந்த உயிரும் நெஞ்சும் அடைந்த மாற்றத்தையேனும் கண்டார்களா! வந்தவன் நெஞ்சு, உயிர் என்ற இரண்டினிடத்தும் உள் கலந்து விட்டானாமே. அவ்வாறு கலந்த பின்னர் எவ்வளவுதான் உள்ளே கலந்தாலும் கலக்கப் பெற்ற பிறகு அந்த நெஞ்சும் உயிரும் பிறிதொரு தன்மையை அடைந்திருக்குமே அதையாவது அயல் நின்றார் கண்டார்களா? காணவில்லை என்றே பெரியார் பேசுகிறார். அதுவும் அம்மாயக் கள்வனின் சிறப்புக்கு ஓர் எடுத்துக் காட்டாகும்.

வஞ்சக் கள்வனும் மாமாயனுமாகிய அவன் நம் நெஞ்சிலும் உயிரிலும் உள் கலக்கிறான் என்பதை அறிந்தும், அவ்வாறு அவன் கலப்பதைப் பிறர் அறிய வில்லை என்பதை அறிந்தும் இருக்கட்டும் பார்த்துக் கொள்ளலாம் என்றுதான் ஆழ்வார் இருந்துவிட்டார்.

ஆனால் என்ன அதிசயம்? உள்ளே கலக்கத் தொடங்கிய அவன் கொஞ்சங் கொஞ்சமாக அந்த நெஞ்சையும் உயிரையும் உண்ணத் தொடங்கி விட்டானாம் என்ற கருத்தைப் பின்வரும் பாடலில் கூறுகிறார்.

**"செஞ்சொல் கவிகாள்! உயிர் காத்து ஆட்**
**செய்ம்மின் திருமாலிருஞ்சோலை**
**வஞ்சக் கள்வன், மாமாயன்**
**மாயக் கவியாய் வந்து, என்**
**நெஞ்சும் உயிரும் உள் கலந்து,**
**நின்றார் அறியாவண்ணம் என்**
**நெஞ்சும் உயிரும் அவை உண்டு,**
**தானேயாகி நிறைந்தானே!**

**(நாலா: 3140)**

உள்ளே கலந்திருக்கும் வரை, நெஞ்சுக்கும் உயிருக்கும் தனித்தன்மை உண்டு. அவற்றில் அவன் கலந்திருந்தான் என்றாலும் அவை வேறு அவன் வேறு என்ற தனித் தன்மையை இழவாமல் இருந்தன அவருடைய நெஞ்சும் உயிரும். ஆனால், கலந்த அவன், தான் வந்து அடைந்த நெஞ்சையும் உயிரையும் உண்ணத் தொடங்கி ஒரு வழியாக முற்றிலும் உண்டேவிட்டான். கலந்து நிற்கையில் நெஞ்சு, உயிர், கள்வன் என மூன்றாக இருந்த பொருள்கள் அவன் உண்டு முடிந்தவுடன் அவன் மட்டுமாகவே எஞ்சிவிட்டன. அவனால் உண்ணப் பெற்ற நெஞ்சும், உயிரும் அவனுள் இரண்டறக் கலந்து விட்டன. உள் கலந்து வேகமும், நெஞ்சையும் உயிரையும் உண்ட வேகமும் வியத்தகு தன்மையுடையன. பொருள் கிடைத் தால் வைத்திருந்து கொஞ்சங் கொஞ்சமாக உண்பவன் அல்லன் இம்மாயக் கள்வன். உலகம் முழுவதையும் புட்டு உண்ணாமல் முழுசாக உண்டவனுக்கு ஒரு நெஞ்சும்

உயிரும் எம்மாத்திரம்? எனவே நேரடியாக உண்டு தானாகி நிறைந்துவிட்டானாம்.

தானே ஆகி நின்றுவிட்ட அம்மாயக் கள்வன் மற்றொரு மாயமும் செய்தானாம். இரண்டு பொருள்கள் (நெஞ்சும் உயிரும்) இருந்தவிடத்தில் அவை இல்லாமற் போய்விட்டால் அந்த இடம் காலியாக வெற்றிடமாக இருக்குமன்றோ? அந்த வெற்றிடத்தைப் பிறர் கண்டால் பொருள் இருந்து மறைந்ததை நினைவிற் கொண்டு தேடத் தொடங்குவர் எனக் கருதிய அக்கள்வன் தனக்கே உரிய ஒரு மாயத்தைச் செய்துவிட்டானாம். அது என்ன மாயம்? அவை இரண்டையும் உண்டுவிட்டு அவை இருந்த இடத்தையும் வெற்றிடமாகச் செய்யாமல் அந்த இடத்திலும் தானே நிறைந்து விட்டானாம்.

பிறர் அறியாமல் ஆழ்வாரின் உட்புகுந்து, அம் மாயக் கள்வன் அவர் நெஞ்சிலும் உயிரிலும் உள் கலப்பவனைப் போலக் கலந்து, பின்னர் அந்த நெஞ்சையும் உயிரையும் உண்டுவிட்டு அவை இருந்த இடத்திலும் தானே நிறைந்துவிட்டானாம்.

இதனைக் கூறவந்த பெருமான் ஏனைய கவிஞர்களை விளித்து, 'ஐயன்மீர்'! நீங்கள் மிகவும் விழிப்புடன் இருத்தல் வேண்டும். மாயக் கள்வனின் செய்கை இருந்தவாறு இது! நீங்கள் உங்கள் தற்போதத்தை இழக்காமல் இருக்க விரும்பினால் அம் மாயக் கள்வன் உம்முள் புகாமல் காத்துக் கொள்ளுங்கள்! இல்லையேல் பிறர் அறியாமல் என்னுள் புகுந்து நெஞ்சிலும் உயிரிலும் கலந்து பிறகு அவற்றை உண்டு தானேயாகி நிறைந்தது போல உங்களையும் உண்டு நிறைந்து விடுவான் என்று மேலே காட்டிய "செஞ்சொல்'' என்ற பாடலில் பேசியும் இருக்கிறார்.

*இத்தகைய முறையில் ஆழ்வார் ஒருவரிடம் மட்டும் நிறைந்தானா என்றால் அனைத்துயிர்களிடமும் இவ்விதமே நிறைகின்றானாம். ஆனால், அதை அறிவார் இலாத குறை யால் அவன் அனைத்துயிர்களிடமும் அந்தர்யாமியாய் இருத்தலை உயிர்கள் அறிவதில்லை. உயிர்கள் யான் என்று பேசும்போது அறியாமை காரணமாகத் தான் என்று ஒரு பொருள் இருப்பதாக நினைக்கின்றனவே தவிர உண்மை யில் 'தான்' என்ற ஒன்று இல்லை. அதனை உணர வல்லார்கட்கு, அவன் உள்ளே கலந்து உயிருண்டு கலந்து நிற்றல் எவ்வாறு இருக்கும் எனப் பெரியார் இதோ கூறுகிறார்.*

**"தானே யாகி, நிறைந்து, எல்லா**
**உலகும் உயிரும் தானே ஆய்**
**தானே யான் என்பான் ஆகி. . . ."**

**(நாலா: 3141)**

*என்ற அடிகளில் பிறர் அறியாத இந்த உண்மையைக் கூறிவிட்டு, அறிந்தவர்கட்கு அக்கலப்பு எவ்வாறு இருக்கும் என்பதையும் இதோ கூறுகிறார்.*

**"தானும் யானும் எல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம்**
**தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதும் ஒத்தே"**
**(நாலா: 2214)**

*இந்நிலையில் ஆழ்வார் என்ற ஒரு பொருளும் அவரால் வழிபடப்படுகின்ற இறைவன் என்ற ஒரு பொருளும் இடை நின்ற பக்தி என்ற ஒரு பொருளும் ஆக மூன்றாக இருந்த நிலைபோக எஞ்சியது ஒன்றேயாம். பாலும் நெய்யும் கலந்தது போல் கலந்தொழிந்தோம் என்கிறார் ஆழ்வார்.*

இதனை நன்கு விளங்கிக் கொண்டால்தான் இறைவன் என்னுட் கலந்து தன்னைத் தானே இன்தமிழ் பாடினான் என்று கூறுவதன் உட்பொருள் விளங்கும்.

**'என்நெஞ்சத்து உள் இருந்து இங்கு இருந்தமிழ் நூல் இவை மொழிந்து'**

**(நாலா: 3132)**

என்று கூறியது உபசார வழக்கன்று, உண்மை வழக்கே என்பது நன்கு விளங்கும். அன்றியும் ஞானசம்பந்தர், நம்மாழ்வார் போன்ற பெரியோர்கள் தம் பதிகங்களின் இறுதிப்பாடல்களில், இப்பதிகங்களை பாடுவதால் இன்ன பயன் விளையும் என்று கூறியுள்ளதன் உட்பொருளையும் அறிதல் வேண்டும்.

எத்துணைப் பெரியவராயினும் ஒருவர் தம் பாடல்களைப் பாடினால் இன்ன பயன் விளையும் என்று கூறுவது பொருத்தமா? அது அவர்களுடைய அகங் காரத்தை அல்லவா வெளியிடுகிறது? அங்ஙனம் இருக்க இவர்களைப் பெரியோர்கள் என்று குறிப்பிடுவது பொருந்துமா என்பன போன்ற வினாக்கள் சிலருடைய மனத்திலாவது தோன்றத்தான் செய்யும். இவற்றிற்கு விடைகாணு முன்னர் அகங்காரம் மமகாரம் ஆகிய இரண்டையும் அறிதல் வேண்டும். 'நான்' என்ற முனைப்பு அகங்காரம் என்றும் 'எனது' என்ற 'பற்று' மமகாரம் என்றும் பேசப்படுகிறது. நான் என்ற ஒரு பொருள் பிறவற்றின் கலப்பில்லாமல் இருக்கும் பொழுது அதனை அகங்கார ஸ்வரூபம் என்று கூறுகிறோம். ஆனால் நான் என்ற தனிப்பொருள் இறைவன் என்ற பெரும் பொருளில் கரைந்துவிடுமேயானால் அங்கே 'நான்' என்ற பொருள் இல்லை. தண்ணீரில் கலந்து உப்பு எங்கும் பரந்து நிற்பது

போல் இந்த அகங்காரமும் அந்தப் பரம்பொருளில் கரைந்து விடுகிறது.

இங்ஙனம் கரைந்து நிற்கும் நிலையைத்தான் ஆழ்வார் 'பாலும் தேனும் நெய்யும் போலக் கரைந்தொழிந்தோம்' என்று பேசுகின்றார். யார் யார் கலந்தனர் என்பதற்கு விடை கூறுவார் போன்று 'தானும், யானும், எல்லாம், தன்னுள்ளே கலந்தொழிந்தோம்' என்றும் பேசுகிறார். இங்கு நின்று ஆராயத்தக்கது ஒன்றுண்டு. கலத்தலிலும் இருவகை உண்டு. 'நான்' என்ற பொருளை 'அவன்' என்ற பொருளில் கரைப்பது ஒரு முறை இதன் மறுதலையாக 'அவன்' என்ற பொருளையே 'நான்' என்ற பொருளில் கரைப்பது மற்றோர் முறை.

இங்கு 'அவன்' என்பது முழுமுதற்பொருளையும் அவனால் படைக்கப்பெற்ற இந்த அண்ட சராசரங்கள் அனைத்தையுமே குறிக்கும். ஆழ்வார்களும் நாயன்மார் களும் 'நான்' என்ற பொருளை இதில் கரைத்தவர்கள் தாம். இதன் எதிரே இராவணன், இரணியன் போன்றவர் களும் 'நான்' என்ற பொருளைக் கரைத்தவர்கள்தாம். இது என்ன புதுமை? ஆழ்வார்களோடு ஒருங்கு வைத்து இரணியன் முதலாயினோரை எண்ணலாமா என்று திடுக்கிடுபவர்கள் இருக்கலாம். ஒரு சிறு வேற்றுமையை அறிந்து கொண்டால் அடிப்படை விளங்கிவிடும்.

ஆழ்வார்களும் நாயன்மார்களும் தம்மை (அவர்களுடைய 'நான்' என்ற பொருளை) 'அவன்' என்ற பரம்பொருளில் கரைத்துக் கொண்டவர்கள் **'தானும் யானும் எல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம்' 'தானேயாகி நிறைந்து . . . . தானே யான் என்பான் ஆகி,' 'என் நெஞ்சும் உயிரும் அவை உண்டு தானே ஆகி நிறைந்தானே'** என்பனபோன்ற ஆழ்வார் வாக்குகள் இவர்கள் தம்மை அவனில் கரைத்துக் கொண்டவர்கள் என்பதை நன்கு

விளக்கும். ஆதலால்தான் எங்கும், எவ்விடத்தும், எல்லாக் காலத்தும், எப்பொருளிலும் இறைவனையே கண்டனர் இப்பெரியோர்.

'மண்ணை இருந்து துழாவி
வாமனன் மண் இது என்னும்
விண்ணைத் தொழுது, அவன்மேவு
வைகுந்தம் என்று,'

(நாலா: 2447)

'அறியும் செந்தீயைத் தழுவி
அச்சுதன் என்னும் மெய் வேவாள்'
'எறியும் தண் காற்றைத் தழுவி
என்னுடைக் கோவிந்தன் என்னும்'

(நாலா: 2449)

'கோமள ஆன் கன்றைப் புல்கிக்
கோவிந்தன் மேய்த்தன என்னும்
போம்இள நாகத்தின் பின்போய்
அவன் கிடக்கை ஈது என்னும்'

(நாலா: 2451)

நான் என்ற பொருளை முற்றிலும் அவன் என்ற பொருளில் கரைத்து விட்டவர்கள் மனநிலைக்கு ஓர் எடுத்துக் காட்டாகும் இப்பாடல்கள். ஆனால் இந்த நிலையை அடைவதற்கு இப்பெருமக்கள் மேற்கொண்ட வழியை எடுத்துக்கூறுவது போன்றுள்ளது திருநாவுக்கரச ருடைய ஒரு பாடல்.

"முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவன் இருக்கும் வண்ணம்கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்

**தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள்**
**தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே''**
**(திருமுறை: 6, 25, 7)**

இங்குக் கூறப்பெற்ற நிலைகளையெல்லாம் கடந்து இறுதி யடியில் கூறப்பெற்ற 'தலைப்பட்டாள் தலைவன் தாளே' என்ற நிலையை அடையும் பொழுதுதான் 'தானும் யானும் எல்லாம் ஒன்றாய் கலந்தொழியும் நிலை' ஏற்படுகிறது. மேலும், தன்னை மறத்தலானும் தன்னாமம் கெடுதலானும் அகங்காரம் என்று கூறத்தக்கது எதுவுமே அங்கு எஞ்சுவதில்லை. இறைவன் உறையும் கோயிலாகவே இப்பெரு மக்களுடைய உடலும் அமைந்து விடுகிறது.

**'என்ஆகம் உள்புகுந்து ஆண்டு கொண்டான்'**
**(திருமுறை: 8, 13, 17)**

**'நான் ஆர், அடி அணைவான்? ஒரு**
**நாய்க்குத் தவசிட்டு இங்கு**
**ஊன்ஆர் உடல் புகுந்தான், உயிர்**
**கலந்தான், உளம் பிரியான்'**
**(திருமுறை: 8, 34, 1)**

என்ற அடிகளில் இறைவன் தம் உடலை இடமாகக் கொண்டதை மணிவாசகர் பேசுகிறார். இதே கருத்தை ஆழ்வார் கூறும் பொழுது நானாக அவனை என்னுள் இருத்துவன் என்றுகூட முற்படவில்லை. (அவ்வாறாயின் அதுவும் ஓரளவு அகங்காரத்தின் பாற்படும்.) தானே வந்து என்னையும் மீறி என்னுட் புகுந்து என் உடலைத் தன்னிருப்பிடமாகக் கொண்டான் என்ற கருத்தில்,

**'யான் எட்டி என்னுள் இருத்துவம் என்றிலன்**
**தான் எட்டி வந்து, என்தனி நெஞ்சை வஞ்சித்து**
**ஊன் எட்டி நின்று, என் உயிரில் கலந்து, இயல்**
**வான் எட்டுமோ இனி என்னை நெகிழ்க்கவே?'**
**(நாலா: 2154)**

இங்ஙனம் பிறர் கண்டு வியக்கும் முறையில் இறைவன் இவர்களிடையே வந்து தங்கிவிடுதலின் இவர்கள் செயலெல்லாம் இறைவன் செயலென்றும், இவர்கள் பேச்செல்லாம் இறைவன் சொற்களென்றும் கூறுகிறார்கள். அவ்வாறு கூறுவதில் தவறு ஒன்றும் இல்லையன்றோ? இந்த அடிப்படையில்தான் ஞானசம்பந்தர் தம் பாடலைப் பாடினார். **'வானில் அரசாள்வர் ஆணை நமதே'** என்றும், நம்மாழ்வார் **'ஈத்த பத்தியை ஒத்த வல்லார்க்கு இடர் கெடுமே'** *(10, 1, 11)* என்றும் **'வடிவமை ஆயிரத்து இப்பத்தினால் சன்மம், முடிவு எய்தி நாசங் கண்டீர்கள் எம் கானலே'** *(9, 6, 11)* என்றும் கூறிச் சென்றனர்.

இனி இராவணன், இரணியன் போன்றவர்களும் 'நான்' என்ற பொருளைக் கரைத்தவர்களே என்று கூறினோமன்றோ? ஆனால் ஆழ்வார்கள் 'நான்' என்ற அகங்காரத்தை 'அவன்' என்ற பரமாத்மாவில் கரைத்த வர்கள் என்று கூறினோம். இரணியன் போன்றவர்கள் அண்ட சராசரம், இறைவன் ஆகிய அனைத்தையும் தம்முடைய 'நான்' என்ற அகங்காரத்தில் கரைத்தவர் களாம். இரணியன் உடைய 'நான்' என்ற அகங்காரம் அண்ட பிண்ட சராசரம், முழுமுதற்பொருள் ஆகிய அனைத்தையும் தன்னுள் அடக்க முயல்கின்ற ஒரு பேரகங்காரமாகும். நம்மைப் போன்ற சாதாரண மனிதர் களுடைய அகங்காரம் மிகச் சிறியதாகும். அந்தச் சிறிய அகங்காரம் ஓரளவு விரிந்து 'மமகார'மாக (என்னுடையது) விரிகின்றது. பின்னர் அந்த மமகாரம் தொடர்புடையா ரிடத்து அன்பாகப் பரிணமிக்கிறது.

ஆனால் இரணியனுடைய அகங்காரம் மிகமிகப் பெரியது. அது மேலும் விரிவதற்கு இடனின்றி விரிந்துள்ளது. மமகாரமாகிய என்னுடையது என்று கூறுவதற்குக் கூட இடமில்லாமல் விரிந்து அனைத்தையும்

அடைத்துக் கொண்டிருக்கின்ற பெரிய அகங்காரமாகும் (Super Ego) அது. எனவே அதில் நாடு, மக்கள், பிறஉயிர், தன்மனைவி, மகன் என்ற எந்தப் பாசத்திற்கோ அன்பிற்கோ இடமே இல்லை. அனைத்தையும் உண்டுவிட்டுப் பரம்பொருள் போல் எங்கும் வியாபித்து நிற்கின்ற பேரகங்காரமாகும் அது. பரம்பொருள்போல் எங்கும் வியாபித்து நிற்பது இந்தப் பேரகங்காரம் எனில் பரம்பொருளுக்கும் இதற்கும் வேற்றுமை இல்லையோ என நினைக்கலாம். வேற்றுமை உண்டு. அது ஒளிக்கும் இருளுக்கும் இடையே உள்ள வேற்றுமையேயாகும். ஒளி புகாத இடமில்லை; ஆனால் ஒளிபுகாத நேரத்தில் இருள்தானே அந்த இடத்தை ஆக்ரமித்துக் கொள்ளுகிறது. அதுபோல இறைவன் அருள் இல்லாத காரணத்தால் இரணியனுடைய அகங்காரம் சர்வமும் நானே என்று வியாபித்து நிற்கிறது.

நம்மிடம் உள்ள அகங்காரம் சிறியது ஆகையாலும் அன்பு முதலியவை வளர்வதாலும் ஓரளவு குறைந்து கொண்டே வருகிறது. அந்த அன்பு மிகுதியும் வளர்ந்து அருளாகப் பரிணமிக்கும் பொழுது இந்த அகங்காரம் ஏறத்தாழ மறைந்து விடுகிறது. எனவே அகங்காரம் நம்மைப்போல் சிறியதாக இருக்கின்றபொழுது அதனை அழிக்க அன்பு, அருள், கருணை முதலிய ஆயுதங்கள் போதுமானவையாகும்.

ஆனால் சர்வத்தையும் தன்னுள் அடக்கிக் கொண்டு அண்டமுற நிமிர்ந்த அகங்காரத்தை அழிப்பது மிகமிகக் கடினமான காரியமாகும். தன்னையன்றி வேறு ஒரு பொருளையோ, உயிரையோ இந்தப் பேரகங்காரம் மதிப்பதில்லை; ஏற்றுக் கொள்வதுமில்லை. உலகில் உள்ள எந்தப் பொருளும் தன்னைப் போற்றி ஏற்றஞ் செய்யவே படைக்கப்பட்டன என்று கருதும் அளவிற்கு வளர்ந்து விட்டது இந்தப் பேரகங்காரம்.

தன்னையன்றிப் பிறிதொரு பொருள் இல்லை என்று வந்துவிட்டமையின் 'சொல்லடா? நீ சொன்ன அரி யாண்டுளன்?' என்று கேட்கும் அளவிற்கு வளர்ந்து விட்டான் இரணியன். இராவணன், சூரபதுமன் முதலிய அனைவரும் இதே குணத்தைப் பெற்றவர்களேயாவர். இத்தகைய மாபெரும் அகங்காரத்தைச் சாதாரணமான அன்பு, அறம், அருள் முதலியவை வெல்ல முடியாதென முன்னர்க் குறிப்பிட்டோமன்றோ. அப்படியானால் இந்தப் பேரகங்காரம் அழிவது எப்படி? முழுமுதற் பொருள் அதாவது பேரொளி நேரே வந்தால்தான் இந்தப் பேரிருளைப் போக்க முடியும். பேரகங்காரம் என்பது பேரிருள். எனவே இதனை அழிக்கக் கூடிய பொருள் பேரொளியாகிய முழுமுதற் பொருளே ஆகும்.

இதில் வியப்பு என்னவெனில் இந்தப் பேரகங்காரம் இறுதிவரைப் போராடி இறுதியில் அழிக்கப் பெறுமே தவிர இடையில் தன் பிழையை உணர்ந்து திருந்துவதோ மாறுவதோ இல்லை பிற உயிர்கள் போல் அன்போ, அன்றித் தன்னிடமே கூட அன்போ கொள்ளாத ஒரு பெரிய அகங்காரமாதலின் தான் வாழவேண்டும் என்பதற் காகக் கூட விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை இல்லை.

இத்தகைய பேரகங்காரத்தின் மறுதலையான ஆழ்வார் கள், நாயன்மார்கள் பற்றி மறுபடியும் ஆயத் தொடங்கும் பொழுது மற்றோர் ஐயம் தோன்றி விடுகிறது. முழுமுதற் பொருள் இப்பெருமக்களிடம் குடிகொண்டு இவர்களைக் கருவியாக்கிப் பேசும் பேச்சுக்கள் நம்போன்ற எளியவர் கட்குப் பயன்படுமா? நம்மை ஒத்த நிலையில் உள்ளவர் கள் தம் அனுபவத்தைக் கூறினால் நாமும் அதில் பங்கு கொள்ளமுடியும். நம்முடைய நிலையில் இருந்து கற்பனைக்கெட்டாத உயரத்தில் உள்ள இப்பெரு மக்கள் கூறும் அறவுரைகள் நமக்கு எங்கே பயன்படப்

போகின்றன என்று நினைத்தால் அந்த நினைவில் ஓரளவு நியாயம் உண்டு. முதல் வகுப்புப் படிக்கும் இளங் குழந்தைக்குக் கணக்குப் பயிற்சி தர வேண்டுமானால் அவன் புரிந்து கொள்ளும் முறையில் சிறிய சிறிய கூட்டல் முதலிய கணக்குகளைக் கற்றுத்தர வேண்டுமே தவிர கணக்கு என்ற பொதுப் பெயருள் அடங்கும் என்ற காரணத்திற்காக முதுநிலை படிக்கும் மாணவர் பயிலும் கணக்கை அக்குழந்தைக்குச் சொல்வதால் பயனில்லை தான்.

இப்பெருமக்கள் அருளிய பாடல்களைப் பொறுத்த வரை இந்த உவமை செல்லாது. இப் பெரியோர்கட்கும் நமக்கும் உள்ள வேறுபாடு அளவால் தானே தவிரத் தன்மையால் அன்று. இவர்கள் வாழ்வில் என்றோ ஒரு நாள் ஒரு வினாடி நேரம் தாமஸ குணத்தில் ஈடுபடுதல் உண்டு. மானிட உடம்பு எடுத்தமையின் அதற்குரிய சில இயல்புகள் இல்லாமல் போவதில்லை. நம்மைப் பொறுத்த வரை வாழ்நாளில் என்றோ ஒரு நாள் ஒரு வினாடி நேரம் சத்துவ குணத்தைப் பெறுகிறோம். அவர்களைப் பொறுத்த மட்டில் வாழ்நாளில் ஒரு வினாடி தாமஸ குணமும் நம்மைப் பொறுத்தவரை ஒரு வினாடி சத்துவ குணமும் வெளிப்படக் காண்கிறோம்.

மானிட உடம்பெடுத்த யாரும் அதனுடைய தொல்லைகளிலிருந்து முற்றிலும் விடுதலை பெற்று விடுதல் என்பது இயலாத காரியம்; அது இயற்கையும் அன்று. முழுமுதற் பொருளும் உயிர்கள்மாட்டுக் கொண்ட பரம கருணையின் காரணமாக மானிட வடிவு தாங்கி அவர்கட்கு அருள் செய்ய வருங் காலத்திற்கூடத் தான் எடுத்த மானிட உடம்பு காரணமாகச் சில தொல்லை களை ஏற்றுக் கொள்கிறது. இறைவன் தொல்லைகளை ஏற்றுக் கொள்கிறான் என்றுதான் கூற வேண்டுமே தவிர அத்தொல்லைகளை நம்மைப் போன்று அவனும்

அனுபவிக்கிறான் என்று கூறுதல் தவறு. அத் தொல்லைகளை அவனும் ஏற்றுக் கொள்வதன் மூலம் இந்த உலக நியதிக்குத் தன்னை கட்டுப்படுத்திக் கொள்கிறான். இதனையே ஆழ்வார்,

**'துயர்இல் சுடர்ஒளி தன்னுடைச் சோதி**
**நின்ற வண்ணம் நிற்கவே**
**துயரில் மலியும் மனிசர் பிறவியில்**
**தோன்றிக்கண் காணவந்து,**
**துயரங்கள் செய்து தன் தெய்வநிலை உலகில்**
**புக உய்க்கும் அம்மான்**

**(நாலா: 2408)**

என்று பாடிச் செல்கின்றார்.

வைணவ சமய ஆழ்வார்கள், சைவ சமய நாயன்மார்கள் ஆகிய அனைவருடைய வாழ்வையும் எடுத்துக் கொண்டு பார்த்தால் நம்மாழ்வார், ஞானசம்பந்தர் இருவரும் தனியே ஒரு தொகுப்பில் அடங்கக் காணலாம். ஏனையோர் அனைவரும் ஒரு தொகுப்பில் அடங்கக் காணலாம். ஆழ்வார்கள், நாயன்மார்களிடையே வேறு பாட்டைக் கற்பித்து உயர்வு தாழ்வு கூறுவதாக யாரும் கருதிவிட வேண்டா. இந்த இரண்டு பெருமக்களும் ஆண்டால் இளையவர்கள். இருவரும் ஓதாதுணர்ந்தவர்கள்; ஏனையோர்போல முயன்று இறைவன் திருவருளைப் பெறாமல் அத்திருவருள் தானே வந்து அமையப் பெற்றவர்கள். மிக இளமையிலேயே மெய்ப்பொருள் அறிவு பெற்று, மெய்ஞ்ஞானம் கைவரப் பெற்றவர்கள். காலத்தாலும் ஏழாம் நூற்றாண்டில் முன் பின்னாகக் வாழ்ந்தவர்கள்.

இவர்களுடைய பாடல்களைப் படிப்போர் ஒரு முக்கியமான செய்தியை அறியாமல் இருக்க முடியாது.

மக்கள் வாழ்க்கையில் ஏற்படுகின்ற துயரம் பற்றியும், பொறிபுலன்களால் ஏற்படும் அல்லல் பற்றியும் இவர்களுடைய பாடல்களில் அதிகங்காண இயலாது. நாயன்மார்களுள் அதிகமான பாடல்கள் பாடியவர் ஞானசம்பந்தர். எனினும், பிற ஆழ்வார்கள், நாயன்மார்கள் பாடல்களிற் காணப்பெறும் மானிட வாழ்வின் துயரம்பற்றிய கருத்துக்களை இவ்விருபெரியோர்களின் பாடல்களிற் காண இயலாது. அதற்குறிய பல்வேறு காரணங்களுள் அவர்களுடைய இளைமையும் ஒரு முக்கியமான காாரணம் ஆகும் என்பதை மறத்தல் கூடாது.

அப்படியானால் பொறிபுலன்களால் ஏற்படும் துன்பங்கள் இவர்களைப் பாதிக்கவே இல்லையா என்ற வினாத் தோன்றும். அதற்கு விடை கூறும் முறையில் ஒரு சில பாடல்கள் அமைந்துள்ளன. இப்பாடல்களைப் பார்த்த மாத்திரத்தில் இவர்கட்கும் பொறிபுலன்களால் இத்துணைத் துன்பம் ஏற்பட்டதோ என்று யாரும் ஐயுற வேண்டா. இப் பொறிபுலன்கள் தாம் இருப்பதை என்றோ ஒரு நாள் இவர்கட்கு நினைவூட்டின போலும். பெரியோர் ஆகலின் இச்சிறு துன்பத்தைப் பெரிதென நினைத்து உடனே இத்துயரைப் போக்க வேண்டும் என்று இறைவனிடம் முறையிடலாயினர்.

**1. "உள்நிலாவிய ஐவரால் குமை**
**தீற்றி, என்னை உன் பாதபங்கயம்**
**நண்ணிலா வகையே நலிவான்,**
**இன்னம் எண்ணுகின்றாய்''**

**(நாலா: 2744)**

**2. "என்னை ஆளும் வன்கோ ஓர் ஐந்து இவை**
**பெய்து இராப்பகல் மோது வித்திட்டு**
**உன்னை நான் அணுகாவகை**
**செய்து போதி கண்டாய்''**

**(நாலா: 2745)**

3. “வேதியா நிற்கும் ஐவரால் வினையேனை
மோதுவித்து, உன் திருவடிச்
சாதியாவகை நீ தடுத்து, என் பெறுதி? அந்தோ”
(நாலா: 2746)

4. “தீர்மருந்து இன்றி, ஐந்துநோடும்
செக்கில் இட்டுத் திரிக்கும் ஐவரை”
(நாலா: 2748)

5. “ஒன்று சொல்லி, ஒருத்தினில் நிற்கிலாத
ஓர் ஐவர் வன்கயவரை
என்று யான் வெல்கிற்பன் உன்திருவருள்
இல்லயேல்”
(நாலா: 2750)

6. “விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும்
செரும் ஐம்புலன் இவை
மண்ணுள் என்னைப் பெற்றால்,
என்செய்யா மற்று நீயும் விட்டால்?”
(நாலா: 2749)

7. “வன்பரங்கள் எடுத்து ஐவர் திசை திசை
வலித்து எற்றுகின்றனர்”
(நாலா: 2753)

இங்குக் காட்டப்பெற்ற பாடல்கள் அனைத்தும் ஏழாம் பத்தின் முதற்பத்துப் பாடல்களாகும். முதல் மூன்று எடுத்துக் காட்டுகளும் பொறிகளின் அல்லலால் இறைவன் திருவடியை நினைப்பதற்கு ஏற்படும் இடையூறு பேசப் படுகிறது. நான்காவது ஏழாவது எடுத்துக் காட்டுக்களில் அப்பொறிகள் தரும் துன்பத்தின் அளவு இயல்பும் பேசப் படுகின்றன. மறுபடியும் ஐந்தாவது எடுத்துக் காட்டில் அவன் திருவருள் இல்லையேல் இப்பொறிகளை வெல்ல முடியாது என்பதை அறிவிக்கின்றார். ஆறாவது எடுத்துக் காட்டில் தேவர்களையும் துன்புறுத்தும் வன்மைபெற்றவை என்பதை மீட்டுங்கூறி மற்றோர் கருத்தையும் பேசுகிறார்.

இதேபோன்று ஞானசம்பந்தரும் திருவலிவலப் பதிகத்தில் பொறி, புலன்களின் தொல்லைபற்றிப் பேசுவார்.

தாயுநீயே தந்தைநீயே சங்கரனே அடியேன்
ஆயுநின் பால்அன்பு செய்வான் ஆதரிக்கின்றது உள்ளம்
ஆயமாய் காயம் தன்னுள் ஐவர் நின்று ஒன்றல் ஒட்டார்
மாயமே என்று அஞ்சுகின்றேன் வலிவல மேயவனே
(திருமுறை: 1, 50, 7)

சடகோபருடைய ஏழாம்பத்துப் பாடல்கள் மானிட சமுதாயத்திற்கு ஒரு படிப்பினையைக் கற்றுத் தருவதாகும். முதலாவது பொறிகளின் துயரத்திற்கு ஏன் இப்பெரியார்கள் அஞ்சுகின்றார்கள் என்பதை அறிவுறுத்துகிறது. மனிதன் தன் விருப்பம்போல் எதனையும் செய்ய முடியாமல் தடுப்பவை யாவை? இந்தப் பொறிகள் தாமே? ஆனால் ஆழ்வார் என்ன சொல்லி வருந்துகிறார்? 'உன் பாதபங்கயம் நண்ணிலா வகையே நலிகின்றன' என்றும் 'உன்னை நான் அணுகாவகை செய்கின்றன' என்றும் 'உன் அடிப்போது நான் அணுகாவகை செய்கின்றன' என்றும் வருந்துகிறார். பொறிகளின் சேட்டையால் இறைவன் திருவடியைச் சிந்திக்க முடியவில்லையே என்பதுதான் அவருடைய வருத்தத்திற்குக் காரணம்.

நம்முடைய விருப்பம்போல் வாழ முடியாமல் இப்பொறிகள் தடைசெய்கின்றனவே என்று வருந்துகிறோம் நாம். அவை நல்ல முறையில் பணிபுரியும்போது இறைவனை நினைக்கவும் எண்ணுவதில்லை நாம். ஆனால் இப்பெரியோர்கள் இறைவனை நோக்கி 'உன் அடிப்போது அணுகாவகை செய்கின்றன' என்று வருந்துகிறார்கள். இப்பெரியோர்களும் பொறிகளின் சேட்டையை நினைந்து வருந்துகிறார்கள். நாமும் வருந்துகிறோம்.

வருத்தத்தின் காரணம் மட்டும் வேறாக அமைந்து விடுகிறது.

இனி அவர்கட்கும் நமக்கும் உள்ள மற்றொரு வேற்றுமையையும் அறிய வேண்டும். பொறிகளால் துன்பம் நேர்கையில் நாம் அவற்றைப் போக்கிக்கொள்ள நம்முடைய முயற்சியையே எதிர்பார்க்கிறோம். காடுகள் சென்று, கனசடை வைத்து, காற்றைப் பிடித்து அடைத்து, யோகப் பயிற்சிகள் மூலமும், உணவு வகைகளை பற்றி உதிர் சருகு தந்த மூலங்களேனும் அள்ளிப் புசித்து, மௌனம் மேற்கொண்டு பொறிகளை அடக்கப் பார்க்கின் றோம். 'ஐந்தையும் அடக்க வேண்டும், அடக்க வேண்டும்' என்று ஓயாது கூவியும் முன்னர்க் கூறிய முயற்சிகளை செய்தும் நம் எண்ணத்தை ஈடேற்றிக் கொள்ள முயல் கிறோம். ஆனால் பயன் யாது என்பது ஆராய்ச்சிக் குரியதே யாகும்.

இதன் எதிராக இப்பெரியார்கள் மேற்கொள்ளும் வழியையும் சற்றுக் காண்டல் வேண்டும். ஒருவன் தன் பகையினை அழிக்க வேண்டுமாயின் அதற்குரிய வழிகளைக் கூறவந்த வள்ளுவனார்,

**"வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்**
**துணைவலியுந் தூக்கிச் செயல்."**

**(குறள் – 471)**

என்று கூறுகிறார்.

இடுக்கண் செய்யும் பொறி புலன்களை வெல்லக் கருதிய ஒருவன் முதலாவது செய்ய வேண்டியது யாது? தன் பகையாகிய அப்பொறி புலன்களின் வன்மையையும் தன் வன்மையையும் அளவிட்டு அறிதல் வேண்டும்.

பொறிகளின் வன்மை உலகறிந்த ஒன்று. அவற்றின் வன்மையை எடுத்துக் கூறவந்த பெரியார், 'விண்ணுளார் பெருமானுக்கு அடிமை செய்வாரையும் செறும் ஐம்புலன் இவை' என்று கூறுகிறார். தேவர்கள் என்று போற்றப் படும் சிறப்புடையவர்கள் அவர்கள். அதுமட்டுமன்று; தேவருலகத்திலிருந்தும் வீணே தம் புண்ணியப் பயனை அனுபவியாது பெருமானுக்கு அடிமை செய்ய வேண்டும், அதுவே இப்பிறப்பின் பயன் என்று உண்மையை அறிந்து பணி செய்கின்றார்களாம். அவர்களைக் கூட இப் புலன்கள் விடுவதில்லையாம். அவர்களையும் 'செறும்' (கோபித்துத் துன்புறுத்தும்) என்று பேசுகிறார். 'திருமாலுக்கு அடிமை பூண்ட தேவரையும் கோபித்துத் துன்புறுத்தும் இயல்புடைய இப்பொறி புலன்கள் மண்ணிடை வாழும் என்னை என்னதான் செய்யமாட்டா?' என்று ஏங்குகிறார் பெருமான்.

இத்துணை வலிமையுடைய இப்பொறி புலன்கள் எவ்வாறு துன்புறுத்துகின்றன என்றும் விளக்கமாகப் பேசுகிறார் பெரியார். 'வன்பரங்கள் எடுத்து ஐவர் திசை வலித்து ஏற்றுகின்றனர்' என்று பேசுவார் பத்தாம் பாடலில் (ஐந்து புலன்களும் வலிமையுடைய பாரத்தை எளிதாகப் பற்றி எடுத்து திசை திசை ஏற்றுகின்றனவாம். அப்படிப்பட்ட வலிமையும் கொடுமை செய்யும் இயல்பும் உடைய ஐவர்க்கு நாம் எம்மாத்திரம் என்ற பொருள்படப் பாடிச் செல்கிறார் பெரியார்.

அப்படியானால் இத்துணைக் கொடுமை செய்யும் இப் பொறி புலன்களை வெல்லும் வழி யாது? பொறி களைத் தனியே நம்மால் வெல்ல முடியாது என்பது உறுதி. என்றால் துணைசேர்த்துக் கொண்டு வெல்ல முயல வேண்டும். பொறிகளின் இடைப்பட்டு அல்லலுறும் நாம் நம்மைப் போலவே பொறிகளிடைப்பட்டு அவதியுறும்

பிறர் தயவை நாடின் அந்த உதவியால் பயனே இல்லை.. எனவே பொறிபுலன்களின் சேட்டையிலிருந்து விடுபட்ட ஆழ்வார் போன்றவர்களின் துணை வேண்டும்.

ஆனால் நம்மால் துணைக்கு அழைக்கப்படும் ஆழ்வார் போன்ற பெருமக்கள் பொறிகளால் தமக்கு அல்லல் நேரும் பொழுது முழுதற் பொருளின் துணையையே நாடுகின்றனர்.

**"ஓர் ஐவர் வன்கயரை என்று நான் வெல்கிற்பன்**
**உன் திருவருள் இல்லையேல்'**

**(நாலா: 2747)**

என்றும்

**...... ஐவரால் வினையேனை**
**மோதுவித்து உன் திருவடிச்**
**சாதியாவகை நீ தடுத்து என்பெறுதி? அந்தோ !**

**(நாலா: 2746)**

என்றும்

**'வன் குழியினில் வீழ்க்கும் ஐவரை**
**வலம் முதல் கெடுக்கும் வரமே தந்தருள் கண்டாய்'**

**(நாலா: 2752)**

என்றும், பாடி அருளியது பொறிகளிலிருந்து விடுபட்ட இப்பெருமக்கள் யாருடைய உதவியை நாடி நின்றனர் என்பதை நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

இனி இப்பொறி புலன்களை என்ன செய்தனர் இப்பெரியார்கள். பிறநாட்டில் தோன்றிய பிற சமயத் தார்கள் பொறிபுலன்களை அடக்கவும் ஒடுக்கவும் முயன்று பெருந்தோல்வி அடைந்தனர். இந்நாட்டில் தோன்றிய சைவ வைணவப் பெரியார்கள் இப்

பொறிகளின் வன்மை உலகறிந்த ஒன்று. அவற்றின் வன்மையை எடுத்துக் கூறவந்த பெரியார், 'விண்ணுளார் பெருமானுக்கு அடிமை செய்வாரையும் செறும் ஐம்புலன் இவை' என்று கூறுகிறார். தேவர்கள் என்று போற்றப் படும் சிறப்புடையவர்கள் அவர்கள். அதுமட்டுமன்று; தேவருலகத்திலிருந்தும் வீணே தம் புண்ணியப் பயனை அனுபவியாது பெருமானுக்கு அடிமை செய்ய வேண்டும், அதுவே இப்பிறப்பின் பயன் என்று உண்மையை அறிந்து பணி செய்கின்றார்களாம். அவர்களைக் கூட இப் புலன்கள் விடுவதில்லையாம். அவர்களையும் 'செறும்' (கோபித்துத் துன்புறுத்தும்) என்று பேசுகிறார். 'திருமாலுக்கு அடிமை பூண்ட தேவரையும் கோபித்துத் துன்புறுத்தும் இயல்புடைய இப்பொறி புலன்கள் மண்ணிடை வாழும் என்னை என்னதான் செய்யமாட்டா?' என்று ஏங்குகிறார் பெருமான்.

இத்துணை வலிமையுடைய இப்பொறி புலன்கள் எவ்வாறு துன்புறுத்துகின்றன என்றும் விளக்கமாகப் பேசுகிறார் பெரியார். 'வன்பரங்கள் எடுத்து ஐவர் திசை வலித்து ஏற்றுகின்றனர்' என்று பேசுவார் பத்தாம் பாடலில் (ஐந்து புலன்களும் வலிமையுடைய பாரத்தை எளிதாகப் பற்றி எடுத்து திசை திசை ஏற்றுகின்றனவாம். அப்படிப்பட்ட வலிமையும் கொடுமை செய்யும் இயல்பும் உடைய ஐவர்க்கு நாம் எம்மாத்திரம் என்ற பொருள்படப் பாடிச் செல்கிறார் பெரியார்.

அப்படியானால் இத்துணைக் கொடுமை செய்யும் இப் பொறி புலன்களை வெல்லும் வழி யாது? பொறி களைத் தனியே நம்மால் வெல்ல முடியாது என்பது உறுதி. என்றால் துணைசேர்த்துக் கொண்டு வெல்ல முயல வேண்டும். பொறிகளின் இடைப்பட்டு அல்லலுறும் நாம் நம்மைப் போலவே பொறிகளிடைப்பட்டு அவதியுறும்

பிறர் தயவை நாடின் அந்த உதவியால் பயனே இல்லை.. எனவே பொறிபுலன்களின் சேட்டையிலிருந்து விடுபட்ட ஆழ்வார் போன்றவர்களின் துணை வேண்டும்.

ஆனால் நம்மால் துணைக்கு அழைக்கப்படும் ஆழ்வார் போன்ற பெருமக்கள் பொறிகளால் தமக்கு அல்லல் நேரும் பொழுது முழுதற் பொருளின் துணையையே நாடுகின்றனர்.

**"ஓர் ஐவர் வன்கயரை என்று நான் வெல்கிற்பன்**
**உன் திருவருள் இல்லையேல்'**
**(நாலா: 2747)**

என்றும்

**..... ஐவரால் வினையேனை**
**மோதுவித்து உன் திருவடிச்**
**சாதியாவகை நீ தடுத்து என்பெறுதி? அந்தோ!**
**(நாலா: 2746)**

என்றும்

**'வன் குழியினில் வீழ்க்கும் ஐவரை**
**வலம் முதல் கெடுக்கும் வரமே தந்தருள் கண்டாய்'**
**(நாலா: 2752)**

என்றும், பாடி அருளியது பொறிகளிலிருந்து விடுபட்ட இப்பெருமக்கள் யாருடைய உதவியை நாடி நின்றனர் என்பதை நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

இனி இப்பொறி புலன்களை என்ன செய்தனர் இப்பெரியார்கள். பிறநாட்டில் தோன்றிய பிற சமயத் தார்கள் பொறிபுலன்களை அடக்கவும் ஒடுக்கவும் முயன்று பெருந்தோல்வி அடைந்தனர். இந்நாட்டில் தோன்றிய சைவ வைணவப் பெரியார்கள் இப்

பொறிகளையும் அவற்றால் அனுபவிக்கப்படும் புலன்களையும் அழிக்க முடியாது என்பதை நன்குணர்ந்து இருந்தனர். மேலும் இவை அழிக்கப்பட வேண்டுமாயின் இறைவன் ஏன் இவற்றைப் படைக்க வேண்டும். தேவையற்ற ஒன்றை நமக்குத் துன்பந்தர வேண்டும் என்ற காரணத்திற்காக இறைவன் படைத்திருப்பானா? நிச்சயமாக இருக்க முடியாது. பரம கருணாமூர்த்தியாகிய அவன் தேவை இல்லாத பொறிபுலன்களை படைத்து நம்மிடம் ஏன் ஒப்படைக்க வேண்டும்?

உண்மையாகவே இவை அழிக்கப்பட வேண்டும் எனில், இப்படிப்பட்ட பொறிபுலன்களைப் படைத்தவன் கருணையற்றவனாக இருத்தல் வேண்டும். அவனோ கருணையின் கடல் போன்றவன்; அவன் இவற்றைப் படைத்தும் உள்ளான் எனில், அதன் உட்பொருளை அறிந்து கொள்ள வேண்டியது நம் கடமையாகும். அழகு நிறைந்த இந்தப் பெரிய உலகையும் அதனை அனுபவிப் பதற்குரிய பொறி, புலன்களையும் இறைவன் படைத்தான் எனில் இந்த அழகைப் பொறிகளின் மூலம் அனுபவிக்க வேண்டும் என்பதே இறைவனுடைய கருத்தாக இருத்தல் வேண்டும்.

அன்றியும் இவ்வுலகமாய் அதில் நிறைந்த பொருள் களாய் இருப்பவன் இறைவன் ஒருவனே என்பதையும் நம் பெரியோர் நன்கு அறிந்திருந்தனர்.

**'மண்ணை இருந்து துழாவி 'வாமனன் மண் இது'**
**என்னும்'**

**'செய்யாது ஓர் ஞாயிற்றைக் காட்டிச் 'சிரீதரன் மூர்த்தி'**
**ஈதென்னும்'**

**'அறியும் செந்தீயைத் தழுவி 'அச்சுதன்' என்னும்**

'எறியும் தண் காற்றைத் தழுலி 'என்னுடைக்
கோவிந்தன்' என்னும்'

'நின்ற குன்றத்தினை நோக்கி 'நெடுமாலே'! வா என்று
கூவும்'
நன்று பெய்யும் மழை காணில் 'நாரணன் வந்தான்'
என்றாலும்'
'போம் இள நாகத்தின் பின்போய் 'அவன் கிடக்கை'
ஈதென்னும்'
'கூத்தர் குடம் எடுத்து ஆடில் 'கோவிந்தனாம்' எனா
ஓடும்'
'வாய்த்த குழல் ஓசை கேட்கில் 'மாயவன்'
என்று மையாக்கும்'
'உருஉடை வண்ணங்கள் யகாணில் 'உலகளந்தான்'
என்று துள்ளும்'
'நாறு துழாய் மலர் கநாணில் 'நாரணன் கண்ணி'
ஈதென்னும்'
'ஆய்ச்சியர் வெண்ணெய்கள் காணில் 'அவன் உடை
வெண்ணெய்' ஈதென்னும்'
(நாலா: 2447–2454)

*இவ்வெடுத்துக் காட்டுகள் ஓர் உண்மையை நமக்கு அறிவுறுத்துகின்றன. மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளிலும் அனுபவிக்கப்படும் பொருள்கள் இங்குக் காட்டப்பெற்றுள்ளன. இவை அனைத்தையும் இறைவன் வடிவமாகவும் அவனுடைய பொருள்களாகவும் காண்கிறார் ஆழ்வார். கண்ணுகிய பொறியை வெறுத்து மூடிக்கொண்டிருப்பின், 'கரும் பெரும் மேகங்களைக் கண்டும், உருவுடை வண்ணங்களைக் கண்டும் கண்ணன்*

என்று ஏறப் பறக்கும்' நிலை ஏற்பட்டிராது. செவிகளாகிய பொறியை வெறுத்து அடைத்துக் கொண்டிருப்பின் 'வாய்த்த குழல் ஓசையைக் கேட்டு மாயவன் என்று மையாத்திருத்தல்' இயலாது. எனவே பொறிபுலன்களை ஆழ்வார் வெறுத்து அடக்கி அழிக்க வேண்டும் என்று நினைப்பவர் அல்லர்.

மேலும் எல்லாப் பொருளும் அவனே என்று கண்ட பின்னர் எதனை வெறுப்பது? எதனை ஒதுக்குவது?

**'திட விசும்பு, எரி, வளி, நீர், நிலம் இவைமிசைப்**
**படர் பொருள் முழுவதுமாய் அவை அவைதொறும்**
**உடல்மிசை உயிர் எனக் கரந்து, எங்கும் பரந்துளன்**
**சுடர்மிகு சுருதியுள் இவை உண்ட சுரனே'**

**(நாலா: 2088)**

முக்கூட்டுப் பரிமாணமுடைய இவ்வண்டங்களும் (Three dimension) அவற்றிற் காணப்பெறும் பொருள்களும் இறைவனுடைய வடிவம் என்றார் பெரியார். இனி விஞ்ஞானி ஐன்ஸ்டீன் கூற்றுப்படி நான்காவதாக உள்ள ஒரு பரிமாணமும் உண்டு. அதுவே காலம் என்ற பரிமாணமாகும். (Fourth dimension) காலமாகிய அந்த நான்காவது பரிமாணமும் இறைவனே என்ற கருத்தையும் நம் பெரியோர் கூறிப்போயினர். காலம் என்பது ஒன்றே யாயினும் நம் வசதிக்கேற்ப அதனை மூன்றாகவும், நம்மிற் சிலர் இரண்டாகவும் பிரித்துக் கூறுவர். (பௌத்தர்கள் காலம் என்பது இரண்டே என்றும் அவை எதிர்காலம், இறந்தகாலம் என்பவையே என்று கூறுவர்) இதனையும் உள்ளத்திற் கொண்ட ஆழ்வார்,

**"போகின்ற காலங்கள், போய காலங்கள்,**
**போகு காலங்கள், தாய், தந்தை, உயிர்**
**ஆகின்றாய்! . . . . .** **(நாலா: 2256)**

'. . . . சென்று செல்லாதன முன்னிலாம்
காலமே! உன்னை எந்நாள் கண்டு கொள்வனே?'
(நாலா: 2388)

காலத் தத்துவமும் அவனே என்று பேசுகிறார். மணிவாசகரும் இதே கருத்தை,

'. . . . . .
ஞாலமே! விசும்பே! இவை வந்துபோன்
காலமே! உனை என்று கொல் காண்பதே!'
(திருமுறை: 8, 5, 43)

என்று பாடிச் செல்வதைக் காண்கிறோம். இவற்றை நன்கு அறிந்தவர்கள் இறைவன் வடிவமாக அமைந்து உள்ள இப்பொருள்களையும் இவற்றை அனுபவிப்பதற்குக் கருவியாக அமைந்த பொறி புலன்களையும் வெறுக்கவோ அழிக்கவோ விரும்புவதில்லை.

அப்படியானால் பொறிபுலன்களால் அலைப்புறுவதாகப் பாடிய பாடல்களின் உட்கருத்தென்ன? ஆழ்ந்து சிந்தித்தால் உண்மை விளங்காமற் போகாது. நெருப்பு இருக்கிறது. அதன் இயல்பை அறிந்து கவனத்துடன் பயன்படுத்தினால் இனிய உணவைச் சமைப்பதற்கும், குளிரைப் போக்கிக் கொள்வதற்கும் அதே நெருப்புப் பயன்படும். ஆனால் அதனைப் பயன்படுத்தும் வகையறியாது விட்டுவிட்டால் எந்த உடம்பின் குளிரைப் போக்கப் பயன்படுமோ அதே உடம்பை எரித்தும் ஊறு செய்யும். பொறிபுலன்கள் நெருப்பைப் போன்றவை. நாம் தலைவராக நின்று அவற்றை அடக்கிப் பயன்படுத்தினால் ஒப்பற்ற நன்மைகளை அடையலாம். அவை கட்டு மீறிச் செல்கையில் அவற்றை அடக்க வேண்டும். நல்வழியில் திருப்பி விட வேண்டும். நம்மால் அவற்றை அடக்கி

நல்வழியில் திருப்ப முடியாத சூழ்நிலை ஏற்படும்பொழுது பிறருடைய உதவியை நாட வேண்டும்.

தொண்டரடிப்பொடி ஆழ்வார் பாடியபடி,

**"கங்கையில் புனிதமாய காவிரி நடுஉ பாட்டு,**
**பொங்குநீர் பரந்து பாயும் பூம்பொழில் அரங்கந்தன்னுள்**
**எங்கள்மால் இறைவன்ஈசன் கிடந்ததோர்**
**கிடக்கை கண்டும்**
**எங்ஙனம் மறந்து வாழ்கேன்? ஏழையேன் ஏழையேனே!"**
**(நாலா: 894)**

என்ற நிலையில் கண்கள் இரண்டும் அவன் கழல் கண்டு களிக்கும் வரைக் கண்களை வெறுப்பதில்லை. ஆனால் வேறுபொருள்களின் நாட்டங்கொண்டு கண்கள் அவற்றின் மேல் செல்கையில் கண்களை வெறுக்கின்றனர்.

**'உன் பாதபங்கயம் நண்ணிலாவகையே நலிவான்'**
**(நாலா: 2744)**
**'உன் அடிப்போது நான் அணுகாவகை செய்து போதி**
**கண்டாய்'**
**(நாலா : 2747)**

என்ற நிலையில் புலன்கள் துன்பஞ் செய்யும் பொழுது தான் இறைவனை வேண்டி அவனருளால் இவற்றைத் திசை திருப்ப முயல்கின்றனர்.

இதே பொறிபுலன்கள் இப்பெரியோர்களின் எண்ணத் திற்குக் கட்டுப்பட்டு அவர்கள் ஏவல்வழி நிற்கையில் அப்பொறிப்புலன்களையே வாழ்த்துகின்றனர்; அங்ஙனம் அடங்கிப் பணி செய்யும் அவற்றைத் தமக்குத் தந்த இறைவனின் கருணையையும் எண்ணி நன்றி பாராட்டு கின்றனர்.

'திரிவிக்கிரமன், செந்தாமரைக்கண் எம்மான்,
என்செங்கனிவாய்
உருவில் பொலிந்த வெள்ளைப் பளிங்கு நிறத்தனன்
பரவிப் பணிந்து பல்ஊழி ஊழி நின் பாதபங்கயமே
மருவித்தொழும் மனமே தந்தாய்: வல்லைகாண் என்
வாமனனே!
(நாலா : 2264)

'சிறப்பில் வீடு சுவர்க்கம் நரகம்
இறப்பில் எய்துக, எய்தற்க யானும்
பிறப்பில் பல்பிறவிப் பெருமானை
மறப்பி ஒன்றின்றி, என்றும் மகிழ்வனே'
(நாலா: 2286)

*இதே கருத்தைத் திருநாவுக்கரசரும்,*

'வாழ்த்த வாயும் நினைக்க மட நெஞ்சும்
தாழ்த்த சென்னியும் தந்த தலைவனை'
(திருமுறை: 5, 90, 7)

*என்று பாடிச் செல்கிறார். மணிவாசகரும்,*

'சிந்தனை நின்தனக்கு ஆக்கி நாயினேன்தன்
கண்ணிணை நின்திருப்பாதப் போதுக்காக்கி
வந்தனையும் அம்மலக்கே ஆக்கி வாக்குஉன்
மணிவார்த்தைக்கு ஆக்கி ஐம்புலன்கள் ஆர
வந்து, எனை ஆட்கொண்டு உள்ளே புகுந்து விச்சை
மால் அமுதப் பெருங்கடலே! . . . . . .
(திருமுறை: 8, 5, 26)

*இத்துணையுங் கூறியவற்றால் ஆழ்வார்கள் பொறி புலன்களை வெறுத்து ஒதுக்கவில்லை என்றும் அவற்றை வைத்துப் பணி கொள்ளவே விரும்பினார்கள், என்றும் அறிகிறோம். இப்பொறி புலன்களால் அவர்கள் பெறும்*

பயன் யாது? திருக்கோயில்களில் நாம் காணும் கடவுள் வடிவிற்கும் அவர்கள் கண்ட கடவுள் வடிவிற்கும் வேறுபாடு உண்டு. நாம் காண்பது விக்ரகங்களையே யாகும். ஆயின் இப்பெரியோர் படிமங்களைக் காணாமல் பரம் பொருளை நேரே கண்டனர். இல்லாவிடின் 'எங்கள் மால் இறைவன் ஈசன் கிடந்ததோர் கிடக்கை கண்டும் எங்ஙனம் மறந்து வாழ்கேன்? என்று பாட மாட்டார்கள். நாம் நினைப்பதுபோல் படிமத்தையே இவர்களும் அர்ச்சாவதாரமாக கண்டார்களெனில் அதனை ஓயாமல் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் என்று கருதவோ கூறவோ மாட்டார்கள். நம் அன்புக்குப் பாத்திரமானவர் களை நேரே இருக்கும் பொழுது விட்டுப்பிரிய விரும்ப மாட்டோம். ஆனால் அவர்கட்குப் பதிலாக அவர் களுடைய படத்தை வைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்று யாரேனும் கட்டளை இட்டால் அது நடை பெறாத காரியம் என்று கூறத் தேவையில்லை.

எனவே, பொருளை விடாது பார்த்துக்கொண்டும் பொறிபுலன்களால் அனுபவித்துக் கொண்டும் இருக்க விரும்பினால் அது வெறும் படிமமாக அல்லது விக்கிரகமாக இருப்பின் யாரும் அதனை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். அவ்வாறு உண்மையில் விரும்பினார்கள் எனின் அப்பொருள் நேரிடையாக அவர்கள் அனுபவிக் கும் முறையில் உயிர்பெற்றுள்ளது என்பதே கருத்தாம். இவ்வாறு இல்லாவிடின்,

**'பச்சைமா மலைபோல் மேனிப்**
**பவளவாய் கமலச் செங்கண்**
**அச்சுதா! அமரர் ஏறே!'** **(நாலா: 873)**

என்றும்,

**'குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி**
**வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை நோக்கி**
**கடல்நிறக் கடவுள் எந்தை அரவணைத் துயிலுமா கண்டு**
**உடல் எனக்கு உருகுமாலோ! என் செய்கேன்**
**உலகத்தீரே!'**
**(நாலா: 890)**

*என்றும் பிறந்த பாடல்கள் படிமத்தை மட்டும் கண்டு பாடப்பட்டவை அல்ல!*

*இவ்வுலகத்தில் மானிடராய்ப் பிறந்ததன் அருமை யாதெனில் பொறிகளையும் அவற்றின் பற்றுக் கோடாய புலன்களையும் இவை இரண்டையும் அனுபவிக்கும் மனத்தையும், அதனின் அப்பாற்பட்டு நிற்கும் அந்தக் காரணங்களாய் சித்தம், புத்தி, அகங்காரம் என்பவற்றையும் பெற்றிருத்தலேயாம்.*

*இவற்றின் உதவி கொண்டு நிகழ்வதே அனுபவம் எனப்பெறும். எனவே அனுபவத்தைப் பெறுதற்கு உறுதுணையாகவுள்ள இக்கருவி கரணங்களுடன் உள்ள மானிடப் பிறப்பை இப்பெருமக்கள் பெரிதும் விரும்பினர். தாங்கள் கருதியபடி பொறி புலன்கள் பணி செய்தால் மானிடப் பிறப்பைவிடச் சிறப்புடையது எதுவுமில்லை எனக்கருதினர்; பாடவும் செய்தனர்.*

**'இச் சுவை தவிர யான்போய் இந்திர லோகம் ஆளும்**
**அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே'**
**(நாலா: 873)**

*என்றும்,*

**'தேனார்பூஞ் சோலைத் திருவேங்கடச் சுனையில்**
**மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவனே'**

**(நாலா: 678)**

**'எம்பெருமான் ஈசன் எழில்வேங் கடமலைமேல்**
**தம்பகமாய் நிற்கும் தவமுடையேன் ஆவேனே'**

**(நாலா: 681)**

**'அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்**
**படியாய்க் கிடந்துஉன் பவளவாய் காண்பேனே'**

**(நாலா: 685)**

*என்றும் பாடிய பாடல்கள் இப்பொறிகளுடன் இருந்து அவனைக் கண்டு தொழுது பெறும் அனுபவத்தையே பாராட்டுவதால் தோன்றியவையாகும்.*

*இதே கருத்தைத் தான் நம்மாழ்வார்,*

**'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி**
**வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்**
**தெழிகுரல் அருவித் திருவேங்கடத்து**
**எழில்கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கே'**

**(நாலா: 2326)**

**'எக்காலத்து எந்தையாய் என்னுள் மன்னில், மற்று**
**எக்காலத்திலும் யாதொன்றும் வேண்டேன்'**

**(நாலா: 2289)**

*என்றும் பாடியுள்ளார்.*

*இக்கருத்தை நன்கு விளங்கிக் கொண்ட சேக்கிழார் அடியார்களின் இலக்கணம் கூறவந்த இடத்து,*

**'கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி**
**வீடும் வேண்டா விறலின் விளங்கினார்'**

**(பெ. பு: 143)**

என்று கூறுகிறார். மேலும் நம்பியாரூர் (சுந்தர மூர்த்தி நாயனார்) சிதம்பரத்தில் சென்று இறைவனுடைய தாண்டவ தரிசனத்தைக் கண்டார் என்று கூறும் இடத்தில்,

**'தெண்ணிலா மலர்ந்த வேணியாய்! உன்தன்**
**திருநடம் கும்பிடப்பெற்ற**
**மண்ணிலே வந்த பிறவியே எனக்கு**
**வாலிதாம் இன்பமாம் என்று**
**கண்ணில் ஆனந்த அருவிநீர் சொரியத் தொருத்தார்'**
**(பெ.பு: 253)**

பணிந்தார் என்றும் கூறுகிறார்.

இதுகாறுங் கூறியவற்றால் ஆழ்வார்களும், நாயன் மார்களும் பிற சமயத்தாரைப் போல், பொறிபுலன்களை வெறுத்து ஒதுக்கி, அடக்கி நிறுத்த முயலாமல் அவற்றின் துணை கொண்டே இறைவனை வழிபடவும் அவன் திருவருளைப் பெறவும் முயன்றார்கள் என்பது வெளிப் படும்.

இத்துணைப் பாடுபட்டும் பொறிபுலன்களை இறைவனிடம் செலுத்துவது அத்துணை எளிதன்று. பெரிதும் முயன்று செலுத்தினாலும் திருவருள் உடனே கைகூடிவிடும் என்றும் சொல்வதற்கில்லை. எத்துணைப் பாடுபட்டு இப்பெருமக்கள் திருவருளைப் பெற்றார்கள் என்று அறிவதும் நம் போன்றவர்கட்கு ஒரு படிப்பினை யாகும். ஒரு மாதம் கோயிலுக்குப் போய் அபிஷேகம், அர்ச்சனை முதலியன் செய்து விட்டு உடனே அதன் பயனை எதிர் பார்க்கிறோம் பயன் கிடைக்கவில்லை என்றாலோ அன்றி எதிர் பார்த்ததற்கு மாறாக ஏதேனும்

நடைபெற்றுவிட்டாலோ கடவுளை ஏசவும் பேசவும் தயாராகி விடுகிறோம்.

உலகியல் பயன் ஒன்றைக் கருதி இறைவனை வழிபடுவதை பெருந்தவறு என்று கூறுவர் நம் முன்னோர். கருணைக் கடலாகவும், அடியார் துயரங்களை களைப வனாகவும் உள்ள பெருமானிடம்சென்று நம் குறைகளைக் கூறிவருவது என்பது ஒன்று. நம் பெரியோர்களும் அதனைச் செய்துள்ளனர். ஆனால் ஒரு பயனை விரும்பிச் சென்று வேண்டுதல் என்பது தவறு; அதிலும் அற்பமான உலகியற் பயன்களை விரும்பிக் கோவிலுக்குப் போவதும் வழிபாடு செய்வதும் உண்மைப் பக்திக்கு முற்றிலும் புறம்பானதாகும். அனைத்தையும் படைத்து ஒவ்வொருவர் உயிருடன் கலந்து நிற்கும் பரம்பொருளிடம் ஒன்றை வேண்டுவது எவ்வாறு தவறாகும்? தாயினிடம் தமக்கு இன்னது வேண்டும் என்று குழந்தை கேட்பது இல்லையா? அதுபோல அனைவருக்கும் தாயான இறைவனிடம் கேட்பதில் என்ன தவறு என்ற ஐயம் சிலர் மனத்திலாவது தோன்றக்கூடும். கேட்பதில் தவறில்லை. ஆனால் எதனைக் கேட்பது என்பதில் தான் பிரச்சனை தோன்றுகிறது. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த நம் முன்னோரில் ஒருவராகிய கடுவன் இளவெயினனார் என்ற புலவர். இறைவனிடம் எதனைக் கேட்க வேண்டும் என்பதை மிக விளக்கமாக பரிபாடல் பாடலில் கூறுகிறார்.

ஐய நின்மட்டும்

அதாவது, நம்மைச் சுற்றியுள்ள மனிதர்களிடம் கேட்பதுபோல பொன்னைப் பொருளை, இன்பங்களை இறைவனிடம் சென்றுகேட்பது அறியாமையின் பாற்படும். அவனிடம் என்ன கேட்க வேண்டும்?

**'என்பு இழை கோப்பதுபோலப் பனிவாடை ஈர்கின்றது**
**என்பிழையே நினைந்தருளி அருளாத திருமாலார்க்கு**
**என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு என்று ஒருவாய்ச் சொல்**
**என் பிழை க்கும்? இளங்கிளியே! யான் வளர்த்த நீ அலையே?'**
**(நாலா: 2121)**

*இத்துணை தூரம் தம் பிழையை நினைந்து வருந்திய இப்பெருமக்கள் மறுபடியும் மறுபடியும் அவன் திருவருள் கிட்ட வேண்டும் என்ற ஒரே கருத்தினராய், ஏகாக்கிர சித்தத்துடன் பக்திசெய்கின்றனர். இவர்கள் பக்தியின் ஆழத்தையும் ஒருமைப்பாட்டையும் அறியமுடியாத உலகம் இவர்களைப் பித்தர்கள் என்று எள்ளி நகையாடுகிறது.*

*இதோ விடை கூறுகிறார் கவிஞர். 'அன்பு, அறம், அருள், என்ற மூன்றையும் தருக!' என்றுதான் இறைவனிடம் வேண்டவேண்டும். இன்றுகூட இறைவனிடம் பொன்னையும், பொருளையும், போகத்தையும் வேண்டும் நம்மிடையே இப்பரிபாடல் கலங்கரை விளக்கமாக நின்று வழிகாட்டுவதை உணர்ந்து பயனடைய வேண்டும்.*

*பயன் ஒன்றையும் கருதாமல் அவன் திருவருள் ஒன்றையே நாடி வழிபடும் இப்பெரியோர்கட்கு மட்டும் எளிதில் அவனருள் கிடைத்துவிட்டது என்று நினைப்பதும் சரியன்று. இதோபெருமான் பாடுகிறார்.*

**'காணா வாராய் என்று என்று, கண்ணும் வாயும் துவர்ந்து அடியேன்**
**நாணி, நல்நாட்டு அலமந்தால், இறங்கி, ஒருநாள்நீ அந்தோ!**

**காணவாராய்! கருஞாயிறு உதிக்கும் கருமா மாணிக்க**
**நாள் நல மலைபோல் சுடர்ச் சோதி முடிசேர் சென்னி**
**அம்மனே!'**
**(நாலா: 2899)**

*ஆழ்வார் பெருமானிடம் வேண்டியதுதான் யாது? அப்பெருமானைச் சென்று காண்டல் என்பது இயலாத காரியம் ஆகலின் அவனே அருள் கூர்ந்துதான் காணுமாறு வரவேண்டும் என்று வேண்டினாராம். எவ்வாறு என்று நினைக்கிறீர்கள்? 'கண்ணும் வாயும் துவர்த்து (சிவக்க)' வேண்டினாராம். மேலும் நாணி அலமந்து வேண்டி னாராம். இப்படி வேண்டிவிட்ட காரணத்தால் அவனை அழைப்பதற்கு உரிய தகுதி தன்பால் உள்ளதென்றோ, வரவேண்டிய கடப்பாடு அவனுடையதென்றோ கருத வில்லை. பின்னர் என்ன அடிப்படையில் வேண்டுகிறார்? ஐயோ பாவம்! கண்ணும் வாயும் சிவக்கின்ற அளவு அலமந்து வேண்டுகிறானே என்று இரங்கி, அந்த இரக்கத்தின் காரணமாக வரவேண்டுமாம். இறைவனை நேரே காணும் பேறுபெற்ற இந்தப் பெருமக்கள் தம் சிறுமையையும் அவனுடைய அளப்பரிய பெருமையையும் உணர்ந்து அவன் அருள்வது அவனுடைய கருணை யினாலேயே என்பதை உணர்ந்து நன்றி பாராட்டு கின்றனர்.*

*இதே கருத்தைத் திருநாவுக்கரசரும்,*

**'சிவன்எனும் நாமம்தனக்கே உடைய செம்மேனி எம்மான்**
**அவன்எனை ஆட்கொண்டு அளித்திடுமாகில் அவன்**
**தனையான்**
**பவன் எனுநாமம் பிடித்து பன்னாள் அழைத்தால் திரிந்து**
**இவன் எனைப் பன்னாள் அழைப்பு ஒழியான் என்று**
**எதிர்ப்படுமே'**
**(திருமுறை: 4, 112, 9)**

*என்று பாடுகிறார்.*

*இறைவனின் இறப்ப உயர்ந்த தன்மையை நன்கு அறிந்திருந்த இப்பெருமக்கள் தம் சிறுமையையும் ஓயாமல் அரற்றுவதோடு நில்லாமல் அவனைக் காண வேண்டும் என்னும் தம் தாபத்தையும் ஓயாமல் கூறிக் கொண்டிருந் தனர்.*

**'சீலம் இல்லாச் சிறயனேலும், செய்வினையோ பெரிதால்;**
**ஞாலம் உண்டாய்! ஞானமூர்த்தி! நாராயணா!**
**என்றுஎன்று**
**காலந்தோறும் யான் இருந்த, கைதலைப் பூசல் இட்டால்,**
**கோலமேனி காணவாராய்; கூவியும் கொள்ளாயே'**
**(நாலா: 2480)**

**'அடியேன் சிறிய ஞானத்தன்; அறிதல் யார்க்கும்**
**அரியானை,**
**கடிசேர் தண்ணந் துழாய்க் கண்ணி, புனைந்தான்**
**செடியார் ஆக்கை, அடியாரைச் சேர்தல் தீர்க்கும்**
**திருமாலை**
**அடியேன் காண்பான் அலற்றுவன்; இதனில் மிக்கு**
**ஓர் அயர்வுண்டே?'**
**(நாலா: 2132)**

*என்றெல்லாம் நம்மாழ்வார் பாடுகின்றமை கோயிலுக்குச் சென்று வந்தவுடன் நம் விருப்பம் எல்லாம் நிறைவேறி விட வேண்டும் என்று நினைக்கும் மந்த மதிகட்கு ஒரு நல்ல பாடமாகும்.*

*பல்காலும் அரற்றியும் இறைவன் திருவருள் கிட்டாதபொழுதும் இவர்கள் அவனையோ அவன் கருணையையோ குறை கூறுவதில்லை. அதன் மறுதலை யாகத் தம் பிழையையே நினைத்து வருந்துவார்கள்.*

*தம்முடைய தவறுகள் காரணமாகத்தான் இறைவன் அருள மறுக்கிறான் போலும் என்றே கருதித் தம் பிழையை நினைந்து கண்ணீர் விடுகின்றனர். அவ்வாறு பலகாலுஞ் செய்த பிறகு ஒவ்வொரு வேளைகளில் தம்மையும் அறியாமல் இறைவனிடம் வருத்தம் (சினம் அன்று) உண்டாகிறது. இறைவனை நோக்கியோ அன்றித் தம் அருகில் உள்ளாரை நோக்கியோ 'என் பிழைகளை மன்னித்து எனக்கு அருள் செய்யக் கூடாதா?' என்று கேட்பர்.*

'குன்றே அமைய குற்றங்கள் குணமாம் என்றே நீ

கொண்டால்
என்தான் கெட்டது இரங்கிடாய் எண்தோள் முக்கண்
எம்மானே!'
(திருமுறை: 8, 33, 3)

*என்றும்*

'என்பிழைக்கே குழைந்து வேசறுவேனை
விடுதிகண்டாய்'
(திருமுறை: 8, 6, 50)

*என்றும் மணிவாசகர் பேசுகின்றார். நம்மாழ்வார் அகத்துறையில் கிளியைத் தூதுவிடும் சூழ்நிலையில் இதே கருத்தைப் பேசுகின்றார்.*

++++++

# 7. திருவிளையாடலும், பரஞ்சோதியாரும்

இன்று பெரு வழக்காக இருப்பது பரஞ் சோதியாருடைய திருவிளையாடல்தான். பெரும்பற்றப் புலியூர் நம்பியின் திருவிளையாடல் அருகித் தான் படிக்கப்படுகிறது. இந்த இரண்டு திருவிளையாடல் களிலும் என்ன காரணத்தாலோ பல வேறுபாடுகள் இருக்கின்றன. பரஞ்சோதியார் திருவிளையாடலைப் பொறுத்தமட்டில் மூன்று காண்டங்களாக அமைந்து உள்ளது. திருவாலவாய்க் காண்டம்; கூடல் காண்டம்; மதுரைக் காண்டம் என்று மூன்று பகுதிகளாக அமைந்திருக்கிறது. 3363 விருத்தப்பாக்களை உடைய பரஞ்சோதியாருடைய திருவிளையாடலிலும் 64படலங்கள் தான் உள்ளன. ஆனால் பல திருவிளையாடல்கள் பரஞ்சோதியார் சொன்ன பெயரில் நம்பியால் சொல்லப் படவில்லை; அவர் சொன்ன பெயரில் இவரால் சொல்லப்படவில்லை. அதுமட்டுமல்ல. சில புதிய திருவிளையாடல்ளை பெரும்பற்றப் புலியூர் நம்பி பேசுகிறார். அவை பரஞ்சோதியின் திருவிளையாடலில் காணப்படவில்லை. இதற்கு என்ன காரண மென்று நம்மால் சொல்ல முடியவில்லை. முக்கியமாக, 'புலிமுலை புல் வாய்க்கு அருளினை போற்றி' என்று மாணிக்க வாசகப் பெருமான் தம்முடைய திருவாசகத்திலே கூறுகிறார். புலி முலையை மானுக்கு ஊட்டியதாக ஒரு திருவிளையாடல் கதை. இதைப் பரஞ்சோதியார் பாடவில்லை. ஆனால் நம்பி திருவிளையாடலில் இது காணப்படுகிறது. மூர்த்தியாருக்கு அரசளித்தது, காரியார்

மூன்று மன்னர்கள் பெயரிலும் பாடல் பாடியது போன்ற பல திருவிளையாடல்களை நம்பி சொல்லியிருந்தாலும், பரஞ்சோதியார் சொல்லவில்லை. ஆகவே இந்தத் திருவிளையாடலில் கூட காலாந்தரத்தில் மாறுபட்டக் கதைகள் தோன்றியிருக்க வேண்டுமென்று நினைக்கத் தோன்றுகிறது. ஆனால் ஏதோ பரஞ்சோதியார் காலத்திலோ, நம்பி காலத்திலோ இந்த வரலாறுகள் தோன்றின என்று நினைத்தால் அது தவறு. மிகப் பழங்காலந் தொட்டு இவைகள் இருந்திருக்கின்றன என்று நினைக்க வேண்டி இருக்கிறது. மிகப்பழமையானதான சிலப்பதிகாரத்தில், 'வெள்ளியம்பலத் திருக்கூத்தாடியது; கடல் சுவற வேல் விட்டது; இந்திரன் முடிமேல் வளை எறிந்தது' முதலிய திருவிளையாடல்கள் பேசப்படுகின்றன. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த சிலப்பதிகாரக் காரரே,

"அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி
வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள"

(சிலம்பு: 11, 17)

என்று பாடுவார். 'வடிவேல் எறிந்த வான் பகை' என்று மிக அழகாக, 'கடல் சுவற வேல் விட்ட படலம்' என்று பரஞ்சோதி அடிகளார் சொன்ன திருவிளையாடலை இளங்கோவடிகள் பேசுகிறார்.

"திங்கட் செல்வன் றிருக்குலம் விளங்கச்
செங்கணா யிரத்தோன் றிரல்விளங் காரம்
பொங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி"

(சிலம்பு: 11, 23)

என்று சொல்லுகின்ற பாடலிலே, இந்திரனுடைய ஆரத்தை உக்கிரகுமார பாண்டியன் வாங்கித் தரித்துக் கொண்டார் என்று திருவிளையாடலில் வருகிற கருத்தை, சிலப்பதிகாரத்திலே பேசுகிறார்.

இனி, இந்திரன் முடிமேல் வளை எறிந்த படலம் என்று பரஞ்சோதியார் சொல்வதையும் இளங்கோ வடிகள் குறிப்பிடுகிறார்.

"முடிவளை யுடைத்தோன் முதல்வன் சென்னியென்
றிடியுடைப் பெருமழை யெய்தா தேக"
(சிலம்பு : 11, 26)

தங்களுடைய தலைவனாகிய இந்திரன் இருக்கிறானே, அவனுடைய தலையிலே வளையினால் அடித்துவிட்டான் இந்த உக்கிரகுமார பாண்டியன் என்று மேகங்கள் எல்லாம் கோபித்துக் கொண்டு, மழை பெய்யாமலேயே இருந்தனவாம். உடனே உக்கிரகுமாரன் அந்த மேகங்களை யெல்லாம் பிடித்து, சிறை செய்து, மழை பெய்யும்படிச் செய்தான்.

"மழைபிணித் தாண்ட மன்னவன் வாழ்கென"
(சிலம்பு : 11,29)

என்று சிலப்பதிகாரம் பேசுகிறது. ஆக, திருவிளையாடல் கதைகள் தமிழ் நாட்டைப் பொறுத்தமட்டில் புதியனவல்ல என்பது நிச்சயமாகத் தெரிகிறது.

அடுத்து, 'இந்திரன் பழி தீர்த்தது' முதலான இருபது திருவிளையாடல்கள் கல்லாடத்திலும் காணப்படுகின்றன. கல்லாடத்தில் இடம் பெறுகின்றதென்றால், இரண்டாம் நூற்றாண்டைத் தாண்டி, ஏழு, எட்டு என்று கருதக் கூடிய பகுதிகளிலும் இருபது திருவிளையாடல்கள் பேசப் படுகின்றன. தேவாரத்திலும், திருவாசகத்திலும் பல

திருவிளையாடல்கள் பேசப்படுகின்றன என்பதிலே வியப்பு ஒன்றுமில்லை. ஆனால் வியக்கத்தகுந்த ஒரு காரியமும் உண்டு. நால்வர் பெருமக்கள் இந்த நாட்டிலே வாழ்ந்து, எத்தனையோ அரும்பெரும் பாடல்களை இயற்றியிருக்கிறார்கள். பின்னால் வந்த சோழர்கள் தேவாரப் பதிகங்கள் பாடுவதற்கு நிபந்தங்கள் விட்டு, எவ்வளவோ திருக்கோவில்களுக்குத் தொண்டு செய்திருக்கிறார்கள். ஆனால், இந்தப் பெருமக்கள் வாழ்ந்த காலத்திலே, இவர்கள் ஆற்றிய செயல்களைப் பற்றி கல்வெட்டிலே குறிப்பு ஒன்றும் கிடையாது என்பது உண்மை. எல்லாக் கல்வெட்டுகளும் இன்று கிடைக்கவில்லை. ஆகையால் மறைந்திருக்கலாமென்று நினைப்பதிலும் தவறில்லை. ஒன்று மட்டும் உறுதி. தளவாய்புரம் செப்பேடுகள் என்று 30 அல்லது 40 ஆண்டுகளுக்கு முன்னர் கண்டுபிடிக்கப் பட்டன. அந்தத் தளவாய்புரம் செப்பேடுகளில், மாணிக்க வாசகருடைய காலத்தை உறுதி செய்யக் கூடிய பல சான்றுகள் அதிலே உண்டு. இரண்டாவது வரகுணன் காலத்திலே கொடுக்கப்பட்ட செப்பேடுகள் அவை. அவனுடைய தம்பியாகிய அவனி நாராயணன் என்பவன் ஆட்சி செய்கிறான். அந்தத் தளவாய்புரம் செப்பேட்டில் திருவிளையாடல் குறிக்கப்பட்டிருக்கிறது. 98—வது வரியிலே, இந்திரன் மாலை அணிந்தது; இந்திரன் முடிமேல் வளை எறிந்தது; சங்கம் நிறுவியது ஆகிய மூன்று திருவிளையாடல்கள் பேசப்படுகின்றன என்றால் திருவிளையாடலைப் பொறுத்த மட்டிலே, இந்த நாட்டிலே சிலப்பதிகாரத்திலிருந்து பிற்காலம் வரையில் பலருடைய கவனத்தில் இருந்து வந்திருக்கிறது என்பதை அறிய முடிகிறது.

சங்கம் வளர்த்த மதுரை; தமிழ் வளர்த்த மதுரை; தமிழ்ச் சொக்கன் என்றே எல்லாப் புலவர்களாலும் பாடப்படுகின்ற சிறப்பு வாய்ந்தவர் சொக்கலிங்கப்

பெருமான். அப்படிப்பட்ட தமிழ் நாட்டின் தலைநகராகிய மதுரையிலே, தமிழ்க் கடவுளாகிய சொக்கனைப்பற்றிப் பாடிய பாடல்கள் முதன் முதலிலே தமிழில் வராமல் வேறொரு மொழியில் வந்திருக்குமென்று நினைப்பது அவ்வளவு பொருத்த முடையதல்ல. ஆனால் என்ன காரணத்தாலோ இடைக்காலத்திலே, எல்லாவற்றையும் வடமொழியில இருந்து வந்ததென்று சொல்வதிலே ஒரு பெருமை அடைந்திருக்கிறார்கள். அந்த முறையிலே திருவிளையாடல் புராணத்தைப் பார்த்து இயற்றப்பட்ட ஆலாசிய மகாத்மியம் என்ற நூல் ஒன்று உண்டு. அது, நம்பி திருவிளையாடலுக்கு ரொம்ப பிற்பட்ட ஒன்று. அந்த ஆலாசிய மான்மியத்திலிருந்து தான் பரஞ்சோதியார் திருவிளையாடலை இயற்றினார் என்று சொல்லி வருகிற நம்பிக்கைகளும், கதைகளும் எவ்வாறோ வளர்ந்துவிட்டன. வடமொழிப் பயிற்சி மிகுதியாக உடையவராகையால் பரஞ்சோதியார் அந்த வடமொழி அடிப்படையிலே மன்னர்களுடைய பெயர்களைச் சொல்லிக் கொண்டே வருகிறார். செல்லிநகர்ப் பெரும்பற்றப் புலியூர் நம்பி அப்படிச் சொல்வதேயில்லை. ஆனால் பரஞ்சோதியார், ஒவ்வொரு திருவிளையாடலைப் பொறுத்த மட்டிலும், இது இன்ன பாண்டியன் காலத்திலே நடைபெற்றது என்று சொல்லுவார். அப்படிச் சொல்லப் படுகின்ற பாண்டியர்கள் பலருடைய பெயர்கள் வடமொழிப் பெயர்களாக இருக்கின்றன. ஆகையால் பிற்காலத்துப் புலவராகிய அவர் காலத்தில் அப்படி வழங்கி வந்திருக்க வேண்டு மென்று நினைப்பது தவிர வேறு ஒன்றும் அதில் புதுமையில்லை. அவருடைய வரலாற்றைப் பற்றி நமக்கு அதிகமாக ஒன்றும் தெரியவில்லை. மதுரையில் தங்கி, இறைவனுடைய ஆணையை மேற்கொண்டு, இந்த அறிய நூலைப் பாடினார் என்று சொல்லுவதைத் தவிர, அவருடைய வரலாற்றைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை.

ஆனால் பரஞ்சோதி முனிவர் என்று வழங்கப்பட்ட காரணத்தாலே துறவியாக இருந்திருக்க வேண்டுமென்று நினைப்பதோடு சரி.

பொதுவாக தமிழ் இலக்கியத்தில் தோன்றிய எல்லா நூல்களும் கடவுள் வாழ்த்தோடுதான் தொடங்கும். சங்க காலத்துப் பாடல்களுக்கு கடவுள்வாழ்த்து இல்லையென்ற குறையைப் போக்குவதற்காக, பெருந்தேவனார் என்ற புலவர் எட்டுத் தொகையில் காணப்படும் சில நூல்களுக்குக் கடவுள் வாழ்த்து பாடி வைத்திருக்கிறார் பரஞ்சோதியைப் பொறுத்த மட்டில் அவருடைய கடவுள் வாழ்த்து தனிச் சிறப்பு வாய்ந்ததாக இருக்கிறது. சிவம், சக்தி, பரசிவம், பராசக்தி மீனாட்சி, கூத்தபிரான், தடாதகை, கால் மாறியாடிய பெருமான், நந்தி தேவர், நால்வர், அடியார்கள்—இத்தனை பேருக்கும் வாழ்த்து சொல்கிறார். அது கொஞ்சம் புதுமையானதுதான். அதனை அடுத்து அவை அடக்கம் என்ற பகுதி. அவை அடக்கம் சொல்வதும் தமிழ் நாட்டில் மரபுதான். 'ஆசைபற்றி அறையலுற்றேன்' என்று சொல்லுவான் கம்பன். அதற்கு உவமையும் சொல்லுவான். ஒரு பெரிய கடலை ஒரு பூனையானது நக்கிக் குடிக்க வேண்டு மென்று நினைப்பது எவ்வளவு அறியாமையோ, அவ்வளவு அறியாமையுடையது, இராகவன் புகழை நான் பாட வந்தது என்று கம்பன் சொல்லுவான். இது, தமிழ் நாட்டுப் பேரிலக்கியங்களின் மரபுதான். ஆகவே அந்த மரபைப் பின்பற்றித்தான் இவரும் அவை அடக்கம் பாடுகிறார். ஆனால் அந்த அவை அடக்கத்தில் ஓர் அழகு செய்கிறார். இறைவனுடைய திருவிளையாடலைப் பாடுகிறேன், அதனாலே மட்டும் இது சிறப்புடையதென்று கருதிட வேண்டாம்; வேறொரு காரணமும் உண்டு அது சிறப்படைவதற்கு; மதுரையிலே தமிழ் ஆராய்ந்த புலவர்

பெருமக்கள் நிறைய பேர்கள் இருக்கிறார்கள், அவர்கள் இந்தப் பாடல்களைக் கேட்டுவிட்டதாலே இது தூய்மை அடைந்து விட்டது என்று பேசுகிறார். இதற்கு ஓர் உவமை காட்டிப் பேசுகிறார். யாகம், யக்ஞம் செய்கின்ற இடத்திலே புலாலைத்தான் நெருப்பிலே போடுகிறார்கள்; புலால் கெட்டதாக இருக்கலாம்; ஆனால் அது அக்னி குண்டத்தில் வீழ்ந்துவிட்ட பிறகு தூய்மை அடைந்து, தேவர்களுக்கு உணவாகி விடுவதுபோல, என்னுடைய பாட்டு இந்தப் புலவர்கள் காதில் பட்டதால், தூய்மை அடைந்து விட்டதென்று சமத்காரமாகச் சொல்கிறார். "கனைக்கொ ழுந்தழ னாச்சுவை கண்டவூன்'' — நெருப்பினுடைய சுவையைப் பார்த்துவிட்ட ஊன்; "இமையோச் சுவைக்க வின்னமிழ் தாயின''—தேவர்கள் கூட விரும்பி உண்ணக்கூடிய உணவாக ஆகிவிட்டது போல; "துளக்கமில் சான்றோர் அவைக்க ளம்புகுந்து'' — கொஞ்சங்கூட மனக் கலக்கமில்லாத சான்றோர்கள் நிறைந்த சபையிலே புகுந்ததால்; "இனியவாய்''— என்னுடைய பாடல்கள் இனியவை ஆகிவிட்டன; "..........ஆலவா யுடையார் செவிக்க ளம்புகுந் தேறுவ சிறியனேன் பனுவல்'' — "சிறியவனாகிய என்னுடைய பனுவல்கூட இந்தப் புலவர்களுடைய திருச்செவியில் கேட்டதாலே இப்போது சோமசுந்தரப் பெருமான் செவிக்கும் அது பொருத்தமுடையதாகிவிட்டது" என்று பேசுவது மிக அழகாக இருக்கிறது.

அடுத்தபடியாக நாட்டு வளம் பேசுவார். எல்லா நூல்களுக்கும் அது இயல்புதான். அந்த இடங்களில் வழக்கமாகப் பேசப்படுகிற வளத்தைக் குறித்து இந்தப் புலவன் ஏதாவது புதுமையாகப் பேசியிருக்கிறானா என்று நாம் பார்ப்பது அவனுடைய தனிச்சிறப்பிற்குக் காரணமாக இருக்கிறது வேளாளர்களைப் பற்றிப்

பாடுகிறார்: இதில், மற்ற நூல்களில் இல்லாத புதுமை என்னவென்றால் 'சைவர்கள் வீதி' என்ற ஒன்றைப் பாடுவார். வணிகர், வேளாளர், அரசர், அந்தணர் என்று பாடுவது மரபு. சைவர்கள் வீதி என்ற ஒன்றை எடுத்துக் கொண்டு ,அங்கே எப்போது பார்த்தாலும் பூசையி னுடைய குரல் கேட்கிறதென்று சொல்லுவது புதுமை. அதற்குமேல், வேளாளர்கள் எப்படி தாங்கள் விளை விக்கின்றப் பொருள்களைப் பயன்படுத்துகிறார்களென் பதையும் ஒரு நுணுக்கத்தோடு பேசுகிறார். வள்ளுவன் இதைச் சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல்
தானென்றாங்கு
ஐம்புலத்தா றோம்பல் தலை'' (குறள்–43)

இது நம்முடைய சட்டம். தமிழர்களைப் பொறுத்த மட்டில், வேளாளன் என்பவன் இந்த ஐந்து பேரையும் உபசரிக்கக் கடப்பாடு உடையவன். இது வள்ளுவன் காலத்துச் சட்டம். ஏறத்தாழ 1500 ஆண்டுகள் கழித்து வருகிறார் பரஞ்சோதியார். அப்போது காலம் மாறிவிட்டது. ஆகவே, அதற்கேற்ப சில திருத்தங்களைச் செய்கிறார். மதுரையில் இருக்கிற வேளாளர்கள் என்ன செய்கிறார்களாம்? "தெய்வம், அற்றவர்க்கு அற்றவாறு ஈந்து''— என்று இரண்டு அதிகமாகச் சேர்க்கிறார். ஊர்த் தெய்வம் என்று ஒன்று இருக்கிறது. ஆனால் பின்னே வருகிறதே "தென் புலத்தார் தெய்வம்'' என்று. அங்கே ஒரு தெய்வம் வருகிறதே என்றால் நாம் இந்த வேறுபாட்டைக் கொஞ்சம் சிந்திக்க வேண்டும். பொதுவாக மக்கள் ஒரு தெய்வத்தை வழிபடுவது மரபு. அந்தந்த இனத்தார்கள் தங்களுக்கு உரிய கடவுளை அல்லாமல் எந்த ஊரில் குடியிருக்கிறார்களோ அந்த ஊர்க் காவல் தேவதையையும் பொதுவாக வணங்குவார்கள். இப்போதுகூட ஊர்க்

காவல் தெய்வம் என்று தமிழ் நாட்டு கிராமங்களிலே காணலாம். வேளாளர்கள் எந்த தெய்வத்தை வழிபடுபவர் களாக இருந்தாலும் — சைவர்களோ, வைணவர்களோ, ஜைனர்களோ — கிராம தேவதையைப் பொறுத்த மட்டில் பொதுவாக ஒன்றாக இருப்பார்கள். அந்த நுணுக்கத்தில் சொல்கிறார், "ஊர்க் காணித் தெய்வம் அற்றவர்க்கு ஈந்து" என்று. மேலும் ஒரு கூட்டத்தார் உண்டு. வள்ளுவன் சொன்னதில் இது வரவில்லை. "தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான்" — இந்த ஐந்திலும் வராத ஒரு கூட்டம் இருக்கிறது. அது பிச்சைக்கார கூட்டம். அதை வள்ளுவன் எதிர்பார்க்கவில்லை. ஆகவே சொல்லவில்லை. இங்கே என்ன சொல்கிறார், பரஞ்சோதியார், உற்றவர், சுற்றம், தெய்வம், விருந்தினர்க்கு ஊட்டி உண்பார். இதிலே திருக்குறளைப் பேசிவிட்டார். உற்றவர், சுற்றம், தெய்வம், விருந்தினர், 'இட்டு உண்பார்' என்றால் 'தான்' ஆக ஐந்து பேரையும் சொல்லி விட்டார். அப்படியானால் பிச்சைக் காரர்களைப் பற்றி எங்கே பேசுகிறார்? "அற்றவர்க்கு அற்றவாறு ஈந்து"—ஒன்றுமே இல்லாத பிச்சைக்காரர்கள் இருக்கிறார்களே அவர்களுக்கும் கொடுத்த பிறகு, "கொற்றவர் கடமை கொள்ள" — அரசனுக்குச் செலுத்த வேண்டிய வரியைச் செலுத்திவிட்டு "பண்டியிலே கொண்டு போய்"—வண்டியிலே சரக்கை ஏற்றி வீட்டிற்குக் கொண்டு போய், "தென்னாடுற்றவர், சுற்றம், தெய்வம், விருந்தினர்க்கு"க் கொடுக்க வேண்டு மென்று பேசுகிறார். தர்மத்தைச் செய்ய வேண்டும் என்ற எண்ணம் வந்தவுடன், அதை எந்தெந்த வகையில் குறைப்பதென்ற எண்ணம் ஊடாடிக் கொண்டே இருக்கும். "ஊர்க் காணித் தெய்வம், அற்றவர்க்கு அற்றவாறு ஈந்து" — இதை ஐந்தாகப் பிரித்து விட்டு, ஐந்திலே ஒரு பாகத்தை தர்மமாகச் செய்யவேண்டும் என்று நினைத்தார் போலும்.

ஊர்க் காவல் தெய்வத்திற்கும், பிச்சைக்காரர்களுக்கும் முதலில் கொடுத்துவிட வேண்டும். “அளவை கொண்டு” — அளக்கிறதுக்கு முன்னாலே அதைக் கொடுத்துவிட வேண்டுமென்று சொன்னார். ஏனென்றால் அளந்துவிட்ட பிற்பாடு, அது நூறு என்று வந்துவிட்டால் குறைக்க மனம் வராது. ஆகவே மனித மனோதத்துவத்தை அடிப் படையிலே வைத்து, நூறு என்று கண்டதற்குப் பிறகு கொடுக்க உனக்கு மனம் வராது. ஆதலால், முதலிலேயே கொடுக்க வேண்டியதைக் கொடுத்துவிடு, பிறகு கணக்குப் போடு என்று கூறினார். இது வேளாளர்களுடைய வாழ்க்கை முறை. ஆனால் ஒரு பக்திநூல் பாட வருகின்றவர் அடியார்களை உபசரித்தார்கள் என்று சொல்ல வேண்டும். அது மிகப் பொருத்தமானது. எப்படி அடியார்களை மதுரையம்பதியினர் உபசரிக்கிறார்கள்,

> “நிச்சலு மீச னன்பர் நெறிப்படிற் சிறார்மேல் வைத்த
> பொச்சமி லன்பு மன்னர் புதல்வரைக் கண்டா லன்ன”
> (திருவிளை: திருநா: 31)

“நிச்சலு மீச னன்பர் நெறிப்படிற்”— தினந்தோறும் அடியார்கள் வந்தால் — ஏன் தினந்தோறும் என்று சொல்கிறார்? சிறந்த முறையிலே செய்கிறவன் ஒரு நாள் செய்வான், இரண்டு நாள் செய்வான், சில நாட்கள் செய்வான்; பல நாட்கள் செய்வான், அப்புறம் வெறுப்பு அடைந்து விடுவான். “நிச்சலும்” என்று சொல்வதினாலே, தினமும் செய்ய வேண்டிய கடமை என்று நினைவூட்டுகிறார். “சிறார் மேல் வைத்த சொச்சமி லன்பு மன்னர் புதல்வரைக் கண்டா லன்ன அச்சமுங் கொண்டு” — அடியார்களை எப்படி வரவேற்க வேண்டுமாம் — எல்லை யில்லாத அன்பும் இருக்க வேண்டும்; Familiarity breeds contempt என்று

சொல்லுவார்களே — அளவுக்கு மீறி நெருங்கிவிட்டால் கௌரவக் குறைவு வந்து விடும். அதுவும் கூடாது. எல்லையற்ற அன்பும் இருக்க வேண்டும். அதே நேரத்தில் எல்லையற்ற மரியாதையும் இருக்க வேண்டும். இவை இரண்டுக்கும் உவமை கூட்டிச் சொல்கிறார். சிறார் மேல் வைத்த அன்பு — குழந்தைகளிடம் எவ்வளவு அன்பு வைத்திருக்கிறோமோ அவ்வளவு அன்புடன் அடியார் களைக் கூப்பிட்டு உபசரிக்க வேண்டும்; அதே நேரத்தில் 'மன்னர் புதல்வரைக் கண்டா லன்ன அச்சமும்'—— ராஜா பிள்ளையைக் கண்டால் எவ்வளவு பயபக்தியோடு நெருங்குவோமோ அது போல் அடியார்களை நெருங்கி உபசரிக்க வேண்டுமென்று சொல்லுகிறார். ஆக இந்தக் கருத்தை சேக்கிழாரிடமிருந்து வாங்குகிறாரென்று நினைக்க வேண்டியிருக்கிறது. இளையான்குடிமாறனார் வரலாற்றைச் சொல்ல வந்த சேக்கிழார் சொல்லுவார்.

"ஆரம் என்பு புனைந்த ஐயர்தம்
அன்பர் என்பது ஓர் தன்மையால்
நேர வந்தவர் யாவர் ஆயினும்
நித்தம் ஆகிய பத்தி முன்
கூர வந்துஎதிர் கொண்டு கைகள்
குவித்து நின்றுசெ விப்புலத்து
ஈரம் மென்மது ரப்ப தம் பரிவு
எய்த முன்உரை செய்தபின்".

(பெ.பு–442)

என்று சொல்லுவார். தெருவில் யார் வந்தாலும் அடியார் என்று ஏற்றுக்கொண்டு, எல்லையில்லாத மரியாதையோடு அவர்களை உபசரிக்க வேண்டு மென்று சேக்கிழார் சொல்லுவார். "கொண்டு வந்து மனை புகுந்து, குலாவு பாதம் விளக்கி, மண்டு காதல் ஆசனத்திடை வைத்து

அர்ச்சனை செய்த பின்'' — அத்தனை சோடச உபசாரங்களும் செய்ய வேண்டுமென்று இவரும் சொல்லிக் காட்டுகிறார்.

இனி கற்பனைகள் பேசுகிறார். நடராசப் பெருமான் தெற்கு நோக்கி ஆடிக்கொண்டிருக்கிறார். அதற்கு ஒரு காரணம் சொல்கிறார். என்ன தெரியுமா? வட திசைதான் இறைவனுக்கு உகந்தது. அப்படி இருக்க ஏன் தென் திசையை நோக்கி நடராசப் பெருமான் ஆடுகிறார் என்பதற்குக் காரணம் சொல்கிறார். "கடுக் கவின்பெறு கண்டனும் தென்திசை நோக்கி அடுக்க வந்து வந்தாடுவான்..............'' நடராசப் பெருமானுக்கு இலக்கணம் சொல்கிறார். கண்டன் என்று பெயர். அதாவது நீலகண்டன் என்று. அந்தக் கண்டத்திற்கு இலக்கணம் சொல்ல வந்த இவர், "கடுக்கவின்'' — கடு என்றால் விஷம். விஷம் அழகு பெறும்படியான கண்டமாம். ஆகவே விஷத்தாலே இவன் அழகு பெற்றானா அல்லது இவனால் விஷம் அழகு பெற்றதா என்றால் இவனுடைய கண்டத்திலே தங்கியதால் அதற்கு ஒரு மரியாதை ஏற்பட்டது. பிறராலே விஷம் என்று எள்ளி, ஒதுக்கக் கூடியதாகிய விஷம்கூட இறைவனுடைய கண்டத்தில் தங்கிவிட்ட காரணத்தாலே நீலகண்டம் என்று பெருமை அடைவதாக ஆகிவிட்ட தாம்.

"கடுக்க வின்பெறு கண்டனுந் தென்றிசை நோக்கி
அடுக்க வந்துவந் தாடுவான்''

(திருவிளை: திருநா: 55)

ஏன் தெரியுமா?

"ஆடலின் இளைப்பு விடுக்க''

நாட்டியம் ஆடுபவர்க்கு களைப்பு உண்டாகும். அதை விடுக்க, "ஆரமென்..............................மடுக்கவும்'' — ஆரம், மென்

கால்—சந்தனத் தோட்டத்திலிருது, பொதிக மலையிலிருந்து வருகின்ற தென்றல் காற்று இருக்கிறதே, அது "முகத்திடை வீசி மடுக்கவும்'' — அவனுடைய முகத்திலே வீசி, அந்தக் களைப்புப் போக்குவதற்கும்,

"தமிழ் திருச்செவி மாந்தவு மன்றோ''

தமிழைத் தன்னுடைய காதிலே கேட்க வேண்டு மென்பதற்காகத்தான் தென் திசை நோக்கி ஆடுகிறான் என்று சொல்கிறார்.

இதற்கு மேலே வடமொழி வல்லாளராகிய இவருக்கு இருந்த தமிழ்ப் பற்றினைக் காண்பதற்கு சில இடங்கள்.

"கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை''
(திருவிளை: திருநா: 57)

என்று சொல்லுவார். சிவபெருமானே சங்கப் புலவர் களுள் ஒருவராக வந்திருந்து, சங்கப் புலவர்களோடு தமிழ் ஆராய்ந்தானே அதைப் பேசுகிறார்.

"தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
உண்ட பாலனை யழைத்தது மெலும்புபெண்
ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்''
(திருவிளை: திருநா: 58)

இந்த அற்புதங்களையெல்லாம் இயற்றியது தமிழ்ச் சொல் என்று நினைக்கிறீர்களா அல்லது வேறுசொல் என்று நினைக்கிறீர்களா என்று கேட்பதிலிருந்து அவர் தமிழ் மாட்டு கொண்ட அளப்பறிய காதலை அறிய முடிகிறது. இனி பல படிகள் மேலே செல்கிறது அந்தத் தமிழன்பு.

*தடாதகைப் பிராட்டியார் திருவவதாரத்தைப் பேச வருகிறார்.*

"மாந்தர்பயின் மூவறுசொன் மாநில வரைப்பில்
தீந்தமிழ் வழங்குதிரு நாடது சிறப்ப"
(திருவிளை: 4.14)

*இது மரபு பற்றிச் சொல்லப்படுகிறது. 18 மொழிகள் இந்த நாட்டிலே என்று சொன்னார்கள். "மாந்தர்பயில் மூவறுசொன்"——மக்கள் பேசுகின்ற அந்தப் பதினெட்டு மொழிகளிலே "தீந்தமிழ் வழங்குதிரு நாடது சிறப்ப"—— தீந்தமிழ் வழங்குகின்ற இந்த நாடு சிறக்கும்படியாக இங்கே வந்து தோன்றினாளாம். ஏன் தடாதகைப் பிராட்டியார் வடக்கே தோன்றக் கூடாதா? தமிழ் சிறப்பதற்காக இங்கே வந்து தோன்றினாள் என்று சொல்கிறார். இந்தக் கருத்தும் சேக்கிழார் பெருமானிடத்திலிருந்து இவர் எடுத்ததுதான். திருஞானசம்பந்தர் திரு அவதாரம் செய்தார் என்று சொல்ல வருகிற சேக்கிழார்,*

திசைஅனைத்தின் பெருமைஎலாம் தென்திசையே
வென்றுஏற,
மிசைஉலகும் பிறஉலகும் மேதினியே தனிவெல்ல,
அசைவுஇல்செழும் தமிழ்வழக்கே அயல்வழக்கின்
துறைவெல்ல,
இசைமுழுதும் மெய்அறிவும் இடம்கொள்ளும்
நிலைபெருக."
(பெபு–1927)

*சொர்க்கம், மத்திய பாவரம் என்று சொல்லுகிறோமே, அந்தத் தேவர்கள் வாழ்கின்ற சொர்க்கலோகமும், மற்ற உலகங்களையும் இந்த பூ உலகம் வென்று விட்டதாம்;* ***"அசைவு இல் செழும் தமிழ்வழக்கே அயல் வழக்கின் துறைவெல்ல"*** *உலகத்திலுள்ள எல்லா வழக்குகளையும்*

தமிழ் வழக்கு வெல்லுமாறு ஞானசம்பந்தர் தோன்றினார் என்று சொல்லுவர். இந்தக் கருத்தை வாங்கிக் கொண்டு தான் பரஞ்சோதியார், "தீந்தமிழ் வழங்குதிரு நாடது சிறப்ப" என்று பேசுகிறார். பாண்டியனைத் தமிழ்க் கோமான் என்றும் சொல்லுவார். அப்படியானால் பிற மொழி அறியாதவர் என்று தயவு செய்து நினைத்துவிட வேண்டாம். வடமொழிப் பயிற்சி எல்லையில்லாமல் கொண்டவர். மரபுக்கு மாறுபட்ட வகையிலேயும் இதனைக் காட்டுகிறார் என்றுதான் சொல்ல வேண்டும். தடாதகைப் பிராட்டியைத் திருமணம் செய்துகொண்டு சொக்கலிங்கப்பெருமான் அங்கே இருக்கிறார். அவர்கள் இருப்பதைப் பற்றிச் சொல்ல வருகிறார்,

"இணரெரி தேவுந் தானே யெரிவளர்ப் பவனுந் தானே
உணவுகொள் பவனுந் தானே யாகிய வொருவன்"

"இணரெரி தேவுந் தானே"— அக்னி சொரூபமாக இருக்கிறவனும்; "எரி வளர்ப்பவனும்"—யக்ஞத்துக் குரிய அக்னியை வளர்க்கின்றவனாகிய யக்ஞகர்த்தாவும்; "உணவு கொள்பவனும்"—அந்த அவிர் பாகத்தை உண்பவனும்; "தானே யாகிய வொருவன்" —எல்லாமுமாக இருக்கிற பெருமான்;

"புணர்வுறு போக மூழ்கப் புருடனும்
பெண்ணுமாகி மணவினை முடித்தா னன்னான்
புணர்ப்பையார் மதிக்க வல்லார்"—

அப்படிப்பட்ட பெருமான் எப்பொழுதும் உமையொரு பாகமாக இருப்பவன், இப்பொழுது தானும் உமையும் தனித்தனியாக இருக்கின்றானாம். அப்படி இருப்பவன் யார் என்று சொல்ல வரும்போதுதான், "இணர் எரித் தேவனும், எரி வளர்ப்பவனும், உணவு கொள்பவனும் தானே" என்று சொல்லுவார். இது கீதையிலே உள்ள

"அஹம் க்ரதுரஹம் யக்ஞ: ஸ்வதாஹம ஹமௌஷதம்
மந்த்ரோ ஹம ஹமேவாஜ்யம ஹமக்னிரஹம் ஹீதம்"
(கீதை : 9, 16)

என்ற பாடலினுடைய நேரான மொழி பெயர்ப்பு என்று சொல்லலாம். ஆக அவருடைய வடமொழிப் பயிற்சியும், புலமையும் பல்வேறு இடங்களில் காட்டப்பெறுகிறது. தமிழ்ப் பாடல்களைப் பொறுத்த மட்டில், 'யக்ஞமாகவும், யக்ஞத்திலே அவிஷ்—ஆகவும், நெருப்பை வளர்க்கின்ற யக்ஞ கர்த்தாவாகவும், உணவாகவும் இருக்கின்றவன்' என்று சொல்லுகின்ற மரபு கிடையவே கிடையாது. இதை முதன் முதலாக இவர் புகுத்திப் பேசுகிறார்.

இதற்குமேலே மதுரையம்பதியைப் பற்றிச் சொல்லிக் கொண்டே வருகிறார். மரபு வழிபாடும் போதும் அந்தப் புலவனுடைய மனம் எங்கே இருக்கிறதென்பதைக் காட்டிவிடும். ஞானசம்பந்தர் பேசுகிறார்,

"பாரிசையின் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றோம்
ஓசையைக் கேட்டு வேறி மலை பொழிற்கிள்ளை
வேதங்கள் பொருள் சொல்லும் மிழலையாமே"

என்று சொல்லுவார். திருவீழிமிழலையிலுள்ள கிளிகள் வேதத்திற்குப் பொருள் சொல்லுகின்றனவாம். கிளிகள் எப்படி வேதத்திற்குப் பொருள் சொல்ல முடியுமென்று நினைக்கிறீர்களா? "பாரிசையின் பண்டிதர்கள் பன்னாளும் பயின்று ஓதும் ஓசை" — புலவர்களாக இருக்கிறவர்கள் ஒரு நாள் அல்ல, பல நாளும் 'பயின்றோதும்' — அதைத் தாங்கள் பயில்வதோடு பிறருக்கும் ஓதுவிக்கின்றார்கள். அதைக் கேட்டுக் கொண்டிருக்கின்றன இந்தக் கிளிகள். ஆகவே 'வேறிமலி மொழிற்கிள்ளை', வேறி என்றால் வேலி——வேலியில் இருக்கிற கிளிகள் அந்த வேதத்திற்குப் பொருள்

சொல்லுகின்றன என்று பேசுவார் ஞானசம்பந்தப் பெருமான். தேவாரத்தில் நன்கு ஊறித் திளைத்த பரஞ்சோதியார் இதை எடுத்து பேசுகிறார்.

"ஆலவா யுடையா னென்று மங்கையற் கண்ணி
யென்றுஞ்
சோலைவாழ் குயிலினல்லார் சொல்லியாங்
கொருங்கு சொல்லும்
பாலவாங் கிளிகள் பூவை பன்முறை குரவ னோதும்
நூலவாய்ச் சந்தை கூட்டி நுவன்மறைச் சிறாரை
யொத்த"
(திருவிளை: திருநக, 51)

பாட்டை இரண்டாகப் பிரித்தார். கிளிகள் ஒன்று சொல்லுகின்றன. பூவை என்று சொல்லக்கூடிய மைனாக்கள் ஒன்று சொல்லுகின்றன. கிளிகள், "ஆலவா யுடையா னென்று அங்கயற் கண்ணி யென்றுஞ்" என்று பேசுகின்றன. அதை எங்கு கற்றுக் கொண்டன? "குயிலி னல்லார் சொல்லியாங் கொருங்கு சொல்லும்". பெண்கள் வேத அத்யயனம் செய்வதில்லை. இறைவனுடைய பெயரைத்தான் சொல்லுவார்கள். ஆகவே, கிளிகள் அவர்களோடு நெருங்கிப் பழகுவதால், அதைச் சொல்லிற் றாம். மைனாக்கள் இருக்கின்றனவே, அவை வெளியில் இருக்கின்றன. "பன்முறை குரவ னோதும் நூலவாய்"—— பலமுறை வேதத்தைச் சொல்லிக் கொடுக்கின்ற ஆசிரியன் சொல்லிக் கொடுப்பதைக் கேட்டு சிறார்கள் என்ன செய்கிறார்கள்? "சந்தை கூட்டி நுவன் மறை"—— சந்தஸ் என்று சொல்லுவார்கள். வேதம் சொல்வதை 'சந்தஸ்' சொல்வது என்று சொல்லுவார்கள். ஒலிக் குறிப்பு மாறாமல் சிறார்கள் சொல்லிக் கொண்டிருக்கிறார்களே, அதைக் கேட்டுக் கொண்டேயிருந்த மைனாக்கள் வேதம் சொல்ல ஆரம்பித்துவிட்டதாம்.

திருக்குறளைப் பொறுத்த மட்டில், எந்தத் தமிழ்ப் புலவனும் அதை எடுத்து ஆளாமல் இருக்க முடியாது. அதை பரஞ்சோதியாரும் ஆள்கிறார். ஆனால் திருக்குறள் வந்த காலத்திற்குப் பின்னால், ஒருபுலவன் எவ்வளவு காலம் கழித்து வருகிறானோ, அதற்கு ஏற்றபடி மெருகு ஊட்டப் பார்ப்பான். வள்ளுவன் பேசுவான்,

"செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு"

(குறள் : 86)

வந்த விருந்தினர்களை உபசரித்து அனுப்பிய பிறகு. 'அப்பாடா' என்று நினைப்பதில்லையாம்; 'வரு விருந்து' பாத்திருப்பானாம். இனி வரப்போகிறார்கள் என்று பார்த்திருப்பான். அவன் தேவர்களுக்கு உயர்ந்த விருந்தாக ஆவான் என்று சொன்னார் வள்ளுவர். இதிலே ஒரு குறை காண முடியும். 'செல்விருந்து ஓம்பினான்' என்று சொல்வதில், போனவர்களை நன்றாக உபசரித்து அனுப்பினான் என்று பொருளாயிற்று. 'வருவிருந்து பார்த்திருப்பான்' என்றால் இரண்டு விதமாக இருக்கலாம் அல்லவா! எங்கே வந்துவிடப் போகிறார்களோ என்று பார்ப்பதும், எப்பொழுது வருவார்கள் என்று பார்ப்பதும் ஆக இரண்டு வகை உண்டு. ஆகவே இதிலுள்ள இந்தச் சிறு குறையை இந்தப் புலவன் நினைத்துப் பார்க்கிறான். அதற்கு விளக்கம் சொல்கிறான்.

"அருந்தின ரருந்திச்செல்ல வருந்துகின் றாருமாங்கே
இருந்தினி தருந்தா நிற்க வின்னமு தட்டுப் பின்னும்
விருந்தினர் வரவு நோக்கி வித்தெல்லாம் வயலில்வீசி
வருந்திவிண் ணோக்கு மோரே ருழவர்போல்''

"அருந்தின ரருந்திச் செல்ல''—— சாப்பிட்டவர்கள் சாப்பிட்டுவிட்டுப் போக; "வருந்துகின் றாருமாங்கே

இருந்தினி தருந்தா நிற்க''—வந்த வருத்தம் தீர சாப்பிட்டுக் கொண்டு இருக்கிறார்களே அவர்கள் இருந்தினி தருந்தா நிற்க — எல்லா விதமான உபசாரங்களும் செய்யப்பட்ட காரணத்தால், அவர்கள் சந்தோஷமாக இருந்து சாப்பிட; "இன்னமு தட்டுப் பின்னும் விருந்தினர் வரவு நோக்கி'' — இன்னும் விருந்தாளிகள் வர வேண்டுமென்று பார்க்கிறார் களாம். எப்படிப் பார்க்கிறார்கள்? வெறுப்போடு பார்க்கிறார்களா? கவலையோடு பார்க்கிறார்களா? இவர் சொல்கிறார்,"............வித்தெல்லாம் வயலில் வீசிவருந்தி **விண் ணோக்குமோரே ருழவர்போல் வாடிநிற்பார்''** ஓர் ஏர் உழவன் (சிறிய விவசாயி) தங்களிடமிருந்த நெல்லை யெல்லாம் வயலில் வீசி விட்டான். மழை வந்தால் தான் பயிர் பிழைக்கும். எவ்வளவு ஆர்வத்தோடு மழையை எதிர் பார்ப்பானோ அதைப் போல் விருந்தினர்களை எதிர் பார்க்கிறார்கள் என்று சொல்லும்போது, திருக்குறளுக்குப் பொன்னாலே உரையிட்டு, வைரத்தை இழைத்து விடுகிறான் பரஞ்சோதி.

"ஓர் ஏர் உழவன்'' என்பது சங்க காலத்துச் சொல். இதில் என்ன சிறப்பு? நூறு ஏக்கர் இருந்தால் சிலது விளையலாம்; சிலது விளையாமல் போகலாம். கவலைப் பட மாட்டான். உள்ளதே ஒரேயொரு ஏர் உழக்கூடிய நிலம். அதிலும் கையில் இருந்த நெல்லையெல்லாம் வித்தாக வீசிவிட்டான். அவன் எவ்வளவு ஆர்வத்தோடு மழையை எதிர் பார்க்கிறானோ, அவ்வளவு ஆவலோடு இவர்கள் விருந்தினர்களை எதிர்பார்க்கிறார்கள் என்று பேசுகிறார் பரஞ்சோதியார்.

இனி, திருவிளையாடலின் அடிப்படையைக் கொஞ்சம் காணல் வேண்டும். இறைவனுடைய பெருமை, உயிர்களினுடைய சிறுமை, உயிர்களுக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு முதலியவற்றை நம்முடைய பெருமக்கள்

அறிந்ததுபோல், உலகத்திலே பிற பகுதிகளிலேயுள்ளவர்கள் அறிவார்களென்று சொல்வதற்கில்லை. மிகமிக உயர்ந்த தாய், “உயர்வர உயர்நலம் உடையவன்'' என்று ஆழ்வார் சொல்வது போல, ஒப்பு உயர்வு இல்லாத அளவுக்கு உயர்ந்து நிற்கிற பரம்பொருள். அவனை நோக்கி உயிர் களாக இருக்கிற நாம் இறப்ப இழிந்தவர்கள். ஆனால் இறைவனுக்குள்ள தனிச் சிறப்பு என்று இந்த நாட்டவர் என்ன கூறுகிறார்களென்றால், இவ்வளவு உயர்ந்திருக்கிற பொருள், இவ்வளவு இழிந்த உயிர்களிடம் கருணை மேற் கொண்டு, வந்து அருள் செய்வதைத் தான். அதைத்தான் இந்த நாட்டுக்காரர்கள் போற்றினார்கள். அந்த நுணுக் கத்தைத் தத்துவ ரீதியாகவும் பேசியிருக்கிறார்கள்; வரலாற்று ரீதியாகவும் பேசியிருக்கிறார்கள்; கதை களாகவும் சொல்லியிருக்கிறார்கள்.

தத்துவ ரீதியாகச் சொன்ன பகுதிகளைப் பார்ப் போமேயானால் மெய்கண்டாருடைய சிவஞான போதம் போன்ற நூல்களில் பார்க்கலாம். இறைவன் உயிர்கள் மாட்டு கருணை கொண்டு இறங்கி வந்து செய்கின்ற சிறப்பை இனி வரலாற்று ரீதியிலே பார்ப்போம், மாணிக்கவாசகப் பெருமான் தம்முடைய திருவாசகத்திலும், தேவாரம் பாடியவர்கள் அவர்கள் பாடலிலும் அவரவர்கள் வாழ்க்கையில் இறைவன் எவ்வளவு இரங்கி வந்து, பரம கருணையோடு அவர்களை ஆட்கொண்டான் என்பதை வரலாற்று அடிப்படையில் பேசி உள்ளனர். இனி கதை அடிப்படையிலும் இதைச் சொன்னார்கள். அதற்கு முதலிடம் தருவதுதான் திருவிளையாடல். அதில் வருகின்ற பகுதிகளைப் பார்த்தால் வியப்பாக இருக்கும். பன்றிக் குட்டிக்கு முலை கொடுத்தது ஒரு திருவிளையாடல். தாய்ப் பன்றியை மன்னன் வேட்டையாடிக் கொன்றுவிட்டான். பன்றிக்

குட்டிகள் தாய் இல்லாமல் — கண் திறவாத பன்றிக் குட்டிகள் — அலறுகின்றன. இறைவன் பரம கருணையோடு அவற்றை ஆட்கொள்கிறான். எப்படி? அனைத்தையும் மோட்சத்திற்கு அனுப்பியிருக்கலாம். இந்நாட்டவர் அதைப் பெரிதாகக் கருதவில்லை. உயிர்கள் எந்த நேரத்தில் எந்தத் துன்பத்தை அனுபவிக்கின்றனவோ, அந்தத் துன்பத்தை அந்த நேரத்தில் போக்குவது தான் இறைவனுடைய கருணை. இப்போது பன்றிக் குட்டிகளுக்குத் தேவை தாய்ப்பால். எனவே இறைவன் தாய்ப் பன்றியாக வந்து பால் கொடுத்தான் என்று சொல்வதுதான் இந்த நாட்டுக் காரர்களுடைய மிக உயர்ந்த தத்துவம். அது இறைவனுடைய பரம கருணை. இரங்கி வந்து அருள் செய்கின்ற நிலையை 'சௌலப்யம்' என்று சொல்லுவார்கள். அந்த சௌலப்யத்தைத்தான் சைவர்களும், வைணவர்களும் மிகுதியாகப் போற்றினார் கள். இறப்ப உயர்ந்தவனாகிய பரம் பொருள், இறப்ப இழிந்ததாகிய உயிர்கள் மாட்டு கருணை கொண்டு, இறங்கி வந்து அருள் செய்கின்ற அடிப்படையை சௌலப்யம் என்று சொல்லுார்கள். அந்த சௌலப்யத் திற்கு எடுத்துக் காட்டாகத்தான் திருவிளையாடலில் 64 கதைகள் வருகின்றன.

கரிக்குருவிக்கு உபதேசம் செய்தது; பன்றிக் குட்டிக்கு முலை கொடுத்தது, இப்படிப்பட்ட சாதாரண உயிர்களிடத்தில் பரம்பொருள் இறங்கி வந்து அருள் செய்கிறான் என்பதைக் காட்டுவது தான் திருவிளை யாடலின் அடிப்படையான தத்துவம் என்பதை உணர்ந்து கொண்டால், பிறகு இந்தக் கதைகளிலே நமக்கு மலைப்பு தட்டுவதற்கு ஒன்றும் இல்லை. சாதாரண நிலையில் இருக்கின்ற பன்றிக் குட்டி கரிக்குருவி நிலையிலிருந்து மிக உயர்ந்த அறிவாளிகள் வரை இடம் பெறுகிறார்கள்.

அனைவருக்கும் இறைவன் அருள் செய்கிறான். ஆனால் எல்லாவற்றின் அடிப்படையிலும் ஒன்றைக் காணமுடியும். வேறு துணை இல்லாதபோது, நீயே சரணம் என்று இறைவனிடத்தில் முறையிடும் போது, ஆண்டவன் துணை புரிகிறான். அதை வரிசையாக காட்டிக்கொண்டே செல்வார்.

இடைக்காடன் என்ற மிகச் சிறந்த புலவன் அற்புதமாகப் பாடல் இயற்றினான். தமிழறிந்த பாண்டியனிடத்தில் சென்று அவற்றைக் காட்டினான். அந்தப் பாண்டியன் என்ன காரணத்தாலோ அதைக் கவனிக்காமல் விட்டுவிட்டான். விட்டது மட்டுமல்ல. கொஞ்சம் பொறாமை இருந்திருக்க வேண்டும் அவனுக்கு. அது வித்வத்காய்ச்சல் என்று சொல்லுகிறோமே அந்த முறையிலே, அலட்சியமாக இருந்துவிட்டான். இடைக் காடனுக்குக் கோபம். புலவன் என்று நினைத்தவுடன் எதைச் சொன்னாலும் வாங்கித் தோளில் போட்டுக் கொண்டு, கொடுக்கின்ற பரிசிலுக்குக் காத்துக் கொண்டிருப்பான் என்று நினைப்பது தவறு. சங்க காலத்திலேயே சொல்லியிருக்கிறார்கள், “ஈதலோ எளிது வரிசை அறிதலோ பெரிது'' பெறுவதற்கு ஆசைப் படுபவர்கள் அல்ல நாங்கள், எங்களுடைய பெருமை அறிந்து எங்களை உபசரிக்க வேண்டும். ஆகவே பாண்டியன் கொஞ்சம் கவனக்குறைவாக இருந்தவுடன், இடைக்காடனுக்கு எல்லை யில்லாத கோபம் உண்டாயிற்று. நேரே சொக்கலிங்கப் பெருமானிடத்திடம் வந்தான். தான் எழுதிய கவிதைகளை அவன் முன்னால் தூக்கி எறிகிறான்.—ஆண்டவனிடத்தில் சொல்கிறான்,

**“என்னையிகழ்ந் தனனோசொல் வடிவாய்நின்**
**இடம்பிரியா இமையப் பாவை**

தன்னையுஞ்சொற் பொருளான வுன்னையுமே
யிகழ்ந்தனனென் றனக்கியா தென்னா''
(திருவிளை: 56,10)

ஐயனே! நீ ஆட்சி செய்கின்ற இந்த ஊரில் உள்ள பாண்டியன் தமிழ் அறிவு மிக்கவனென்று நினைத்து சென்று பாடினேன். அவன் கவனிக்கவில்லை; அவன் கவனிக்கவில்லை என்றால் எனக்கு என்ன கௌரவக் குறைவு; அவன் என்னையா கௌரவிக்கவில்லை? தமிழ்ப் பாட்டை அலட்சியம் செய்தான்; தமிழ்ப் பாட்டை அலட்சியம் செய்வது என்றால் என்ன? இரண்டுதான் அலட்சியமாக இருக்க முடியும். ஒன்று சொல் நன்றாக இல்லை என்று வெறுப்பு காட்டலாம்; அல்லது சொற் பொருள் சரியாக இல்லையென்று வெறுப்புக் காட்டலாம்; இரண்டிலே எதைக் காட்டியிருந்தாலும் எனக்குக் கவலையில்லை; உன்னைத்தான் என்று சோமசுந்தரப் பெருமானைச் சுட்டுகிறான். இடக்காடன், "என்னை இகழ்ந்தனனோ? என்னையா அவமானம் பண்ணினான்! இல்லை. "சொல் வடிவாய் நின் இடம் பிரியா இமையப் பாவை தன்னையும் செஞ்சொற் பொருளான உன்னையுமே'' — சொல்லே வடிவமாக இருக்கிறாள் உமாதேவி. சொல்மேல் அவன் குற்றம் சொல்லியிருந்தால் சொல் வடிவான அங்கையற் கண்ணியைத்தான் குற்றம் சொல்லியிருக்க வேண்டும், "சொற்பொருளான வுன்னையுமே இகழ்ந்தனன்''. சொல்லுக்குப் பொருளாக நிற்கும் உன்னையே இகழ்ந்தனன். காளிதாசன் ரகுவம்சத்தில் "வாக்கார்த்த'' என்ற, கடவுள் வாழ்த்துடன் தொடங்குவான், சொல்லும் பொருளுமாக இருக்கிற உமா காந்தனை வணங்குகிறேன் என்று. அந்தப் பாடலுக்கு விளக்கம் தருவதுபோல் இங்கே இடைக்காடன் பிணக்கு தீர்த்த படலத்திலே சொல்வான். ஓர் உண்மையான

அடியவன் தனக்கென்று எதையும் கருதுவதில்லை. பாண்டியன் தன்னை அவமானம் செய்ததாக இடைக்காடன் கருதவில்லை. அதற்குப் பதிலாக தமிழ்ப் பாட்டைக் குறை கூறிவிட்டான்; தமிழ்ப் பாட்டைக் குறை கூறினான் என்றால் அது ஆண்டவனைக் குறை கூறுவதாகும் என்று ஆண்டவனிடத்திலே வந்து முறையிடு கிறான், என்று சொல்லுகின்ற முறையில் இடைக்காடன் பிணக்கு தீர்த்த படலத்தில் சொல்கிறார்.

இராஜசேகர பாண்டியன் என்று ஓர் அரசன் இருந்தான். அவன் அறுபத்தி நான்கு கலைகளிலே அறுபத்தி மூன்றைக் கற்றுவிட்டான். ஒன்றை மட்டும் விட்டு விட்டான். கற்றுக் கொள்ள முடியாமல் அல்ல. எம்பெருமான் நடனம் ஆடுகிறான்; எனவே அந்தக் கலையைத் தான் கற்றுக் கொண்டால் இறைவனுக்கு அபச்சாரம் என்று அவனுக்கு எண்ணம். ஆகவே 63 கலைகளைக் கற்று விட்டு பரதத்தை மட்டும் கல்லாமல் விட்டு விட்டான். சோழ நாட்டிலிருந்து ஒரு புலவன் போனான். அவனை உபசரித்தான் பாண்டியன். அந்தப் புலவன் சொன்னான், எங்களுடைய கரிகாலனுக்கு அறுபத்தி நான்கு கலைகளும் தெரியும், உனக்கு ஒன்று குறைச்சல் தானே என்று. அப்போதுதான் பாண்டியனுக்கு உரைத்தது. உடனே பரத நூல் புலவர்களை வரவழைத்து பரதம் கற்றுக் கொண்டான் வயது முதிர்ந்த நிலையிலே. ஆனால் உடனே உடம்பு வலி தாங்க முடியவில்லை, பரதம் கற்றுக் கொண்டதன் பயனாக. இந்த நிலையிலே கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அவன் உடம்பில் வலி வந்தவுடன் என்ன நினைக்கிறான். வெள்ளியம் பலத்திலே ஆடுகின்ற நடராசனை நினைக்கிறான். ஒரு நாளைக்குச் சில மணி நேரம் பரதம் பயில்வதாலேயே எனக்கு இவ்வளவு உடம்பு வலி வந்ததே, யுகாந்த

*காலமாக இந்தப் பரம்பொருள் ஒரு காலைத் தூக்கி ஆடிக் கொண்டே இருக்கிறானே, அவனுக்கு எவ்வளவு உடம்பு வலிக்குமென்று நினைக்கிறான். நேரே வெள்ளியம் பலத்திற்குச் சென்றான். ஐயா, தயவு செய்து ஊன்றிய காலைத் தூக்கி, தூக்கிய காலை ஊன்றிக் கொண்டு ஆடு என்றான். இறைவன் சட்டை செய்யவில்லை போல இருக்கிறது. இராஜசேகரன் நினைத்தான், சிலமணி நேரம் பரதம் பயின்றதற்கே என்னுடைய உடம்பு இப்படி வலிக்கு மானால், உனக்கு எப்படி வலிக்கும், தயவு செய்து காலை மாற்று நீ; இல்லையென்றால் இந்தக் கொடுமையை என்னால் எண்ணிப் பார்க்க முடியாது. இந்த வாளில் விழுந்து என்னுடைய உயிரை மாய்த்துக் கொள்ளப் போகிறேன் என்று வேண்டினானாம். அவனுக்காக இந்த அண்டபிண்ட சராசரத்தில் எங்குமில்லாத முறையில் இறைவன் காலை மாற்றிக் கொண்டு ஆடினான். அதுதான் கால்மாறி ஆடிய திருவிளையாடல் என்று சொல்லப்படுகிறது. இந்தக் கதையிலும் மிகுதியும் உயர்ந்ததாகிய அந்தப் பரம் பொருள் வடிவம் இல்லாதது, அதனால் அதற்கு உடம்பில் வலியும் இல்லை என்ற தத்துவம் அறியாதவனல்ல இராஜசேகர பாண்டியன். 64 கலை ஞானமும் கற்றவன். இந்தச் சாதாரண விஷயத்தைத் தெரிந்து கொள்ளாமல் இருக்க முடியாது. ஆனால் பக்தனாக மாறிவிட்ட போது இறைவன் அவனுக்குத் தோழன் ஆகிவிடுகிறான். அவனுக்கு ஏற்பட்ட நலன்கள், தீங்குகள் இறைவனுக்கும் உண்டென்று நினைப்பது எல்லையில்லா அன்பின் பாற்படுமே தவிர அறியாமையின் பாற் படாது. மகன் எவ்வளவு வலுவுடையவனாக இருந்தாலும் அவன் ஒரு வேலையும் செய்யக்கூடாதென்று தாய் நினைக்கிறாள். ஆனால் அது அறியாமையின் பாற்பட்டதல்ல. தாயின் அன்பின் பாற்பட்டது. அதுபோல*

பக்தனாகிய இவன் நினைக்கிறான். எனக்கு உடம்பு வலித்தால் இறைவனுக்கும் உடம்பு வலிக்கத்தானே செய்யும். ஆகவே 'மாறுக' என்றான். கண்ணப்பருடைய அன்பைப்போல இது ஒரு அன்பாகும். ஆக கால் மாறி ஆடிய திருவிளையாடலில் எதனைக் காண முடிகிற தென்றால் பக்தனாக இருக்கிறவர்கள் பரம்பொருளை எந்த அளவுக்கு தங்களுக்கு ஏற்ற பொருளாக ஆக்கிக் கொண்டு, அவர்களோடு உறவு கொள்கிறார்கள் என்பதையும், திருவிளையாடல் புராணத்தில் காட்டுகிறார்.

கடம்ப மரம் மதுரைக்கு உரியது. அந்தக் கடம்ப மரம் இறைவனுக்குப் பூசை செய்கிறதென்ற கற்பனை பேசுகிறார். இந்திரன் மதுரைக்கு வந்து சொக்கலிங்கப் பெருமானை வழிபடுகிறான். அவன் எப்படி வழிபடு கிறானோ அதைப்போல் இந்த மரம் வழிபட்டதாம்.

"சுரந்து தேன்றுளித் தலர்களுஞ் சொரிந்துவண் டரற்ற
நிரந்து சுந்தரற் கொருசிறை நின்றபூங் கடம்பு
பரந்து கட்புன லுகப்பல மலர்கடுய்ப் பழிச்சி
இரந்து னிற்ருச் சனைசெயு மிந்திர னிகரும்"

தேன் துளிர்க்கின்றது. அதற்கு மேலே மலர்களைச் சொரிகின்றது. வண்டுகள் சப்தம் செய்கின்றன. ஆகவே இது பூத்திருக்கிற மரத்தின் இயல்பான செயல்கள். அதற்குமேலே ஒரு படி போகிறார். இரவெல்லாம் பனி பெய்வதால், காலையில் மரங்களிலிருந்து தண்ணீர் சொட்டு சொட்டாக விழும். அது கண்ணீரை விடுவது போல் இருக்கிறதாம்.

"பல மலர்கடுய்ப் பழிச்சி இரந்து நின்றருச் சனை
செய்யும்"

இறைவனிடத்திலே தங்கள் குறையைச் சொல்லி அர்ச்சனை செய்வது போல இருக்கிறதென்று சொல்லும் கற்பனை பக்தி அடிப்படையில் நூல் இயற்றுபவருடைய மனோநிலைக்கு ஏற்ப அமைந்துள்ளதாகும். ஆக கற்பனை செய்வதிலும் எந்த அடிப்படையிலே அவன் நூல் அமைகிறதோ அதற்கேற்றபடி கற்பனை அமைய வேண்டும்.

சேக்கிழார் சொல்லுவார். ஞானசம்பந்தர் சீர் காழியில் தோன்றினார். ஏன்?

"வேதநெறி தழைத்தோங்க, மிகுசைவத் துறைவிளங்க"
(பெ.பு–1904)

ஏன் சீர்காழியில் பிறக்க வேண்டும்? வேறு ஊரில் பிறக்கக் கூடாதா? அதற்கு ஒரு கற்பனை செய்வார். அங்கே வயல்களிலேயே யாகம் நடைபெறுகிறதாம். அதனாலே அங்கே பிறந்தார் என்று சொன்னார். அது எப்படி வயலிலே யாகம் நடைபெறும்? யாகத்திற்கு அக்னி குண்டம் வேண்டும், மாவிலை வேண்டும், நெய் வேண்டும். மாவிலைச்சுரு என்று சொல்லப்படுகிற மாவிலையிலே நெய்யை எடுத்து அக்னி குண்டத்தில் விட வேண்டும். இது யாகத்தி னுடைய இன்றியமையாத பகுதி. இது நடைபெறுகிற தென்று கற்பனை பண்ணுகிறார்.

"பரந்தவிளை வயல்செய்யப ங்கயம்ஆம் பொங்குளியில்
வரம்புஇல்வளர் தேமாவின் கனிகிழிந்த மதுநறுநெய்
நிரந்தரம்நீழ் இலைக்கடையால் ஒழுகுதலால்
நெடிதுஅவ்வூர்
மரங்களும் ஆகுதிவேட்கும் தகையஎன
மணந்துஉளதால்"
(பெ.பு–1910)

நல்ல விளை நிலம். அதிலே செந்தாமரை அடியிலே முளைத்திருக்கிறது. "வரம்பில் வளர் தேமா" — வரப்பிலே மாமரம். அதிலே கனி பழுத்து, உதிர வேண்டிய நிலையில் இருக்கிறது. "கனி கிழிந்து மது நறுநெய்" — அந்த மாம் பழங்கள் வெடித்து, மாம்பழத்திற்குள்ளே இருக்கும் சாறு, நெய் அது "நிரந்தரம்நீழ் இலை கடையால் ஒழுகுவதால்" — மாவிலை வழியாக அந்தச் சாறு ஒழுகுகிறதாம். அது அடியிலே இருக்கிற தாமரைப் பூவில் விழுகிறது. அற்புதமாக யாகம் நடை பெறுகிறது என்று சொல்லுவார்.

'மரங்களும்' என்ற உம்மையால், மனிதர்களும் யாகம் செய்தார்களென்பதைச் சொல்லத் தேவை இல்லை. ஆக பெரியபுராணத்தில் அடியார்கள் வரலாற்றைச் சொல்ல வருகிறவர் எப்படி க்றபனை பண்ணுகிறாரோ அதுபோல திருவிளையாடல் புராணக்காரரும் இறைவனுடைய சௌலப்யத்தைச் சொல்ல வந்ததால் அதற்கேற்ப கற்பனை செய்வதைப் பார்க்கிறோம்.

மாணிக்கம் விற்ற படலத்தில், இன்று பெரும் பாலான வைர வியாபாரிகள்கூட வைரத்தைப் பற்றியும், மாணிக்கக் கற்களைப் பற்றியும் இவ்வளவு இலக்கணம் சொல்ல முடியாது. நூற்றுக் கணக்கானப் பாடல்களைச் சொல்லிக் கொண்டே போகிறார். அதைப் புரிந்து கொள்வதே கடினம். கால்மாறி ஆடிய படலத்திலே பரத இலக்கணத்தைப் பேசுவார், பாடல், பாடலாக. அதற்கு மேலே விறகு விற்ற படலம் என்று ஒன்று வருகிறது. ஹேமநாதன் என்ற ஒரு இசை வல்லுனன். வட நாட்டிலிருந்து, பல விருதுகளைப் பெற்று, மதுரைக்கு வந்தான். மதுரையில், பாண்டியனிடத்தில் பாணபத்திரன் என்ற இசை அறிஞன் இருக்கிறான். அவன் மென்மை யுடையவன். வந்தவன் எல்லையில்லாத படாடோபத் தோடு வந்திருக்கிறான். அவன் பாடி விட்டு,

பாண்டியனிடத்தில் சொல்கிறான், உங்களுடைய இசைப் புலவனை நான் வாதில் வெல்ல வேண்டும், வரச் சொல்லுங்கள் என்று. பாணபத்திரன் சொக்கனிடத்தில் சென்று முறையிட்டான். வந்தவனுடைய படாடோபத் திற்கு எதிரில் நான் என்ன செய்ய முடியுமென்று முறையிடுகிறான். சொக்கன் தன்னுடைய பக்தனாகிய பாணபத்திரனுக்குப் பதிலாக, அன்று இரவு ஹேமநாதன் தங்கியிருந்த வீட்டுத் திண்ணையில் வந்து உட்கார்ந்தான். பக்கத்தில் ஒரு விறகுக் கட்டு. விறகு விற்கிற ஒரு வேலை யாளாக வந்திருக்கிறான். மெள்ள யாழ் ஒன்றை எடுத்தான். அந்த யாழுக்கு இலக்கணம் சொல்வார், அவ்வளவு பழைய யாழாம். அதை எடுத்து, 'சாதாரிப்பண்' பாடினான் என்று சொல்லுவார். தேவ காந்தாரி என்று சொல்லுவோமே, அதன் பழைய பெயர் 'சாதாரி'. அதைப் பாடினானாம். உள்ளேயிருந்த ஹேமநாதன் கேட்டான். இந்த யாழ் ஒலியும், கண்டத் தொனியும் வேறுபாடு காண முடியாத அளவுக்குப் பாடினான் என்று சொல்லுகிறார். இன்று நாம் பலமுறை கேட்கின்றோம். சுருதியோடு தொடர்பே இல்லாமல் இசைக் கச்சேரி நடப்பதைப் பார்க்கிறோம். அந்த நேரத்திலே விறகு வெட்டியின் பாடல் நினைவுக்கு வருகிறது. இரண்டுக்கும் வேறுபாடு தெரியாமல் பாடினான். உடனே ஹேமநாதன் வெளியில் வந்தான். 'ஐயா, புலவரே' என்றான். இவன் எழுந்து வணக்கம் தெரிவித்து, 'நான் இசைப் புலவன் இல்லீங்க, விறகு வெட்டி விற்கிறவன்' என்று சொன்னான். 'விறகு வெட்டி விற்கிறவனா! அப்படியா! நீ இப்படிப் பாடுகிறாயே, யாரப்பா?' என்று கேட்டார். 'பாண பத்திரர் என்று இந்த ஊரில் இசைப் புலவர் ஒருவர் இருக்கிறார்; அவருக்குப் பல சீடர்கள் இருக்கிறார்கள்; நானும் அவரிடத்தில் கொஞ்சகாலம் படித்தேன்; உனக்கு வயதும் ஜாஸ்தியாகிப் போச்சு, உனக்கு விறகு புத்திதான்,

உனக்கும் இதற்கும் லாயக்கில்லை என்று அனுப்பி விட்டார்' என்று சொன்னான். ஆகவே தள்ளப்பட்ட சீடன் தேவ காந்தாரியை இப்படிப் பாடினான் என்றால் ஏற்றுக் கொண்ட சீடர்கள் என்னமாய்ப் பாடுவார் களென்று நினைத்து அன்று இரவே ஒருவரிடமும் சொல்லாமல் ஊரை விட்டுப் போய் விட்டான். அது விறகு விற்ற படலம். இதில் அவருடைய இசை அறிவு புலப்படுகிறது. எப்படிப் பாடக் கூடாதென்பதற்கு இலக்கணம் சொல்கிறார்.

> "வயிறதுகுழிய வாங்க லழுமுகங் காட்டல் வாங்குஞ்
> செயிரறு புருவமேறல் சிரநடுக் குறல்கண் ணுடல்
> பயிரரு மிடறு வீங்கல் பையென வாயங் காத்தல்
> எயிறது காட்டலின்ன உடற்றொழிற் குற்றமென்"
> (திருவிளை: 41, 29)

பாடும்போது வயிறு ஒன்றோடு ஒன்று ஒட்டி முதுகு எலும்பு வரையில் வயிறு போய்விடக்கூடாது; "அழுமுகம் காட்டல்" — இந்தப் பாடலைப் படிக்கும் போது நம்முடைய கற்பனையில் எத்தனையோ நினைவுக்கு வருகின்றன, அழுமுகம் காட்டல்; "வாங்கும் சீற புருவம் ஏறல்" — புருவம் மேலே ஏறக்கூடாதாம்; — "சிரம் நடுக்குறல்" — தலை நடுங்கக்கூடாது; "கண் ஆடல்" — கண் இந்தண்டை அந்தண்டை போகக்கூடாது; "பயிரரு.................. வீங்கல்" நாதசுரம் வாசிக்கிற மாதிரி தொண்டை வீங்கக் கூடாது; "பையென வாய் காத்தல்" — சுருக்குப் பை திறந்ததுபோல் வாய் அங்காத்தல்; "ஈறது காட்டல்" —பல் வெளியில் தெரியக்கூடாது, "இனி உடல் தொழிற் குற்றம்" — இவையெல்லாம் உடலில் ஏற்படும் குற்றங்கள் இசைப் புலவனுக்கு. இனிமேல் இசையிலுள்ள குற்றங்களைச் சொல்கிறார். வெள்ளை இசை, பேய்க் குரல், கட்டைக் குரல், வெடிக் குரல், மூக்கினால்

இசைத்தல் என்பவை குற்றங்கள். வெள்ளை இசை என்பது அழுத்தமில்லாமல் பாடுவது; பேய்க் குரல் — அதைப் பற்றிச் சொல்லவே தேவையில்லை; கட்டைக் குரல் —இதைப் பற்றியும் சொல்லத் தேவையில்லை; வெடிக் குரல், மூக்கினால் இசைத்தல் இவையெல்லாம் கூடாது. சுருதியிலிருந்து வேறாக ஒலித்தல், பெரு மூச்சு எறிந்து துள்ளல் முதலாயின பாடும் தொழிலில் உள்ள குற்றங்கள். சுருதியின் வேறாக ஒலித்தல் நமக்கு நன்றாகத் தெரியும். பெருமூச்சு எறிந்துதுள்ளல் — உயிர் போகிற மாதிரி பெருமூச்சு வாங்கிக்கொண்டு பாடுகிறார்களே அது கூடாது; "எறிந்து நின்று இரட்டல்'' — இதைச் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

"எறிந்து நின்று இரட்டல்'' என்பது ஒரு பண்ணிலே மற்றொரு பண் வந்து கலப்பது. ஒரு ராகம் பாடிக் கொண்டிருக்கும்போது, அதில் பல ராகங்களின் சாயல்கள் வருவதைப் பார்க்கிறோம். அதைப் பற்றி யாரும் கவலைப்படுவதில்லை. அதைச் சொல்கிறார். ஒரு ராகத்தில் வேறொரு ராகத்தின் சாயல் வருவது தவறு என்று சொல்கிறார். அதற்கு மேலே பாடும் போது, மந்தர மத்திம தார ஸ்தாயிகளில் — தூங்கல், துள்ளல் என்ற கால வேறுபாட்டுடன் பாட வேண்டுமாம். அதைவிட முக்கியமானது மருந்து விழுங்குவது போன்று சொற்களை விழுங்கிவிடாமல் இருக்க வேண்டும், இசைப் புலவன். இன்றைக்குப் பாடலை மென்று முழுங்குகிறவர்கள் சிலர்; முழுவதுமாக விழுங்குகிறவர்கள் சிலர்; குதறித் துப்புகிறவர்கள் பலர். இந்த நிலையில் இருக்கின்ற நாம் இதைக் கவனிக்க வேண்டும். மருந்து போன்று பாடலின் சொற்களை விழுங்கி விடாமல் பாட வேண்டுமென்று சொல்வதைப் பார்த்தால் சொற்களைப் பொருள் தெரியுமாறு உச்சரிக்க வேண்டும் என்பது தெரிகிறது.

இனி மிகுதியும் உயர்ந்த பொருள், மிகுதியும் இழிந்த பொருள் இரண்டையும் வைத்து ஒரு திருவிளையாடல் பேசுகிறார். அது மண் சுமந்த படலம். மாணிக்கவாசகப் பெருமானுக்காக வையை பெருக்கு எடுத்துவிட்டது. பாண்டியன் ஆணையிட்டு விட்டான், அவரவர்கள் பெயரைப் பதிவு செய்து கொண்டு, எல்லை வகுத்து, அந்தந்த எல்லையை அடைக்க வேண்டுமென்று. அவரவர்கள் தங்கள் எல்லையை அடைப்பதற்காக ஆள் மூலமாகவோ, நேரடியாகவோ சென்று அடைக்கிறார்கள். இந்த நிலைமையிலே அங்கயற்கண்ணி அரசாட்சி செய்கிற ஊரிலேயும் இப்படிப்பட்டவர்கள் இருக்கிறார்கள் போல் இருக்கிறது. ஓர் அம்மை இருக்கிறார். அவள் வேறு எந்தவிதமான துணையும் இல்லாமல் ஒண்டியாக இருக்கிறாள். ஆனால் பிறரை நம்பி, கையேந்திப் பிழைப்பவளல்லள். உழைத்துப் பிழைப்பவள். வந்தி என்ற பெயருடையாள். அவரவர்கள் பங்கை அடைக்க வேண்டுமென்று தண்டோரா போட்டார்கள். அப்போது இவள் சொக்கநாதப் பெருமானை நோக்கி முறையிடுகிறாள்.

"பிட்டுவிற் றுண்டு வாழும் பேதையேன் இடும்பை
யென்ப
தெட்டுணை யேனு மின்றி யிரவியெங் கெழுகென்
றின்னாண்
மட்டுநின் னருளா லிங்கு கைகினேற் கின்று வந்து
விட்டதோ ரிடையூ றைய மீனவ னாணை யாலே."
(திருவிளை: 61,11)

இதுவரையிலும் வாழ்ந்துவிட்டேன். பிட்டு விற்று வாழ்கிற பேதைதான் நான். இடும்பை — துன்பம் என்பது ஒரு எள்ளளவுகூட இல்லாமல் எப்படி வாழ்ந்து வந்தேன்; இரவியெங் கெழுகென்று இந் நாள்"........... சூரியன் எங்கே

உதித்தால் எனக்கென்ன என்று கவலையில்லாமல் இருந்தேன்; "மட்டுநின்............ ஐய" இன்றைக்கு இந்த இடையூறு வந்துவிட்டது என்று முறையிடுகிறாள். இத்தனைக் காலம் உன் திருவருளால் வாழ்ந்தேன், ஆனால் இன்று இடையூறு வந்து விட்டது. அதுவும் யாரால்? மன்னவன் ஆணையால், பாண்டியன் ஆணையாலே ஒரு பெரும் துயரம் வந்து விட்டது என்றால் அதற்குமேலே ஒரு படி போகிறார்.

"துணையின்றி மக்கள்இன்றித் தமரின்றிச் சுற்றமாகும்
பணையின்றி யேன்று கொள்வார் பிறரின்றிப் பற்றுக்
கோடாம்
புணையின்றித் துன்பத் தாழ்ந்து புலம்புறு பாவி
யேற்கின்
றிணையின்றி யிந்தத் துன்ப மெய்துவ தறனோ
வெந்தாய்"
(திருவிளை : 61,12)

துணையில்லை; மக்களில்லை; தமரில்லை; சுற்றமில்லை. தமர் என்றால் சுற்றமென்று பொருள் சொல்லிவிடுவோம். தமர் வேறு, சுற்றம் வேறு. சுற்றம் கொஞ்சம் நெருங்கியவர்; தமர் அதிக தூரத்திலுள்ள சுற்றத்தார்கள்.

நான் போனால் என்னை ஏற்றுக்கொள்கிறவர்கள் கூட ஒருவரும் இல்லை ஐயா. அனாதி என்ற ஒரு சொல் உண்டு என்றால் —— அனாதை என்ற அந்தச் சொல்லுக்கு நேர் பொருள் நான்தான்; பற்றுக் கோடாக ஒரு துணையும் இல்லை; இவ்வளவு பெரிய துன்பம் வருவது முறையோ என்று வருந்துகிறாள். அப்படி ஒரு அன்பர் வருந்தினால் இறைவன் பொறுத்துக் கொள்ள முடியாதல்லவா? ஆகவே, சொக்கநாதப் பெருமான் தனிக் கூலி ஆளாக வருகிறான். அப்படி வருகின்றபோது,

எனக்குக் கூலி கொடுத்து, வேலை தருகிறவர் எங்கே என்று கேட்டுக்கொண்டே வருகிறான். ஆகவே வேலை இல்லாத் திண்டாட்டம் சோமசுந்தரப் பெருமான் காலத்திலேயே இருந்திருக்க வேண்டும் போல் இருக்கிறது. அப்படி வந்தபோது எல்லையில்லாத சந்தோஷம் பிட்டு வாணிச்சிக்கு. அவள் சொன்னாள், இப்படி ஒரு சந்தர்ப்பம் வருமேயானால் அது சொக்கநாதப் பெருமானின் திருவிளையாடல்தான். இங்கே வா என்று அழைத்தாள். எனக்கு இப்போது ஆள் தேவை என்றாள்.. உடனே கேட்டான் அந்தப் பெருமகன், 'வேலை செய்வதிலே அட்டியில்லை, கூலி என்ன?' என்று. என்னுடைய வாழ்க்கையிலே இதைத் தவிர வேற ஒன்றும் சொத்து இல்லை. பிட்டுதான் கிடைக்கும் என்று சொன்னாள். அடியார்களின் அன்பதையும் சேர்த்து உண்பவனாகிய பெருமான், இதை விடச் சிறந்த கூலி வேறு எதுவும் கிடையாது; ஆகவே 'முன்னூட்டு' என்று சொல்கிறோமே (அட்வான்ஸ் பேமெண்ட்), வேலைக்குப் போவதற்கு முன் பிட்டு இடு என்று சொன்னான். உதிர்ந்த பிட்டாகக் கேட்டானாம். பாவம், அன்று சுட்ட பிட்டெல்லாம் உதிர்ந்து விட்டது. எல்லாவற்றையும் வாங்கித் துணியிலே கட்டிக் கொண்டான். "அழுக்கடைந்த பழந்துணி'' என்று சொல்வான். அதிலே கட்டிக் கொண்டு, சுடச்சுட வாயிலே போட்டுக் கொண்டான். உலகியல் அறிந்த அற்புதமான முறையிலே புலவன் பேசுவான். சுடச்சுட வாயிலே போட்டால், இன்றைக்குக் கூட இந்தப் பக்கக் கன்னத்திலேயும் அந்தப் பக்கக் கன்னத்திலேயும் பிரட்டிவிட்டு சூட்டைப் போக்குவோம். அதுபோல சூட்டைப் போக்கினானாம். உண்டான். பிறகு வேலை செய்யப் போனான். பதிந்துவிட்டான் ஏட்டிலே,

*வந்தியின் ஆள் என்று. வேலை செய்கிற லட்சணத்தைப் பாடுகிறார்.*

> "வெட்டுவார் மண்ணைமுடி மேல்வைப்பார் பாரமெனக்
> கொட்டுவார் . . . . . . ."

*மண்ணை வெட்டினான்; தலையிலே தூக்கி வைத்தான்; சே! இவ்வளவு பாரத்தை யார் தூக்குவ தென்று அங்கேயே கீழே கொட்டுவான்;*

> ". . . . குறைத் தெடுத்துக் கொடுபோவார் சுமடுவிழத்
> தட்டுவார் சுமையிறக்கி யெடுத்ததனைத் தலைபடியக்
> கட்டுவார் உடன்சுமந்து கொடுபோவார்
> கரைசொரிவார்"
> (திருவிளை : 61,26)

*பாதிமண்ணைக் கீழே கொட்டிவிட்டு, பாதியை அள்ளிக் கிட்டுப் போனான். அந்த மண்ணை வெள்ளத்திலே கொட்டும்போது தலையிலே இருக்கிற சிம்மாட்டையும் சேர்த்துக் கொட்டுவான்; மறுபடியும் அந்தச் சிம்மாட்டை கட்டுகிறேன் என்று பொழுதை ஓட்டுவானாம்; மறுபடியும் சிம்மாட்டை வெள்ளத்திலே விட்டு விடுவானாம். ஐயய்யோ என் சிம்மாடு வீழ்ந்துவிட்டதே என்று சொல்லி, அந்த வெள்ளத்தில் விழுந்து, நீந்திச் சிம்மாட்டை எடுத்து வருவானாம். இந்த மாதிரி வந்தவுடன் களைப்பு அதிகமாகி விட்டது என்று,*

> "குருமேவு மதிமுடியைக் கூடையணை மேற்கிடத்தி
> வருமேரு வனையார்தம் வடிவுணர்ந்து துயில்கின்றார்"
> (திருவிளை : 61,28)

*ரொம்ப களைச்சுப் போச்சு; தூங்கப் போகிறேன் என்று கூடையைத் தலைக்கு வைத்துக் கொண்டு தூங்கிவிட்டான்*

என்று சொல்லுவார். நகைச்சுவை பொருந்தவும் இறைவனுடைய திருவிளையாடலைச் சொல்லிக் கொண்டு வருவார். அதன் இறுதிப் பகுதியில் மிக அற்புதமாகப் பேசுவார், ஒரு மனோ தத்துவத்தை வைத்து.

பாண்டியன் வந்தான். ஏன் இந்தப் பங்கு அடைக்கப் படவில்லை என்று கேட்டான். உடன் இருந்தவர்கள், இது வந்தியினுடைய பங்கு, ஒரு கூலிக்காரன் வந்து இப்படி தடித்தனமாக பொழுது போக்குகிறான் என்று சொன்னார்கள். அப்போது அற்புதமாகப் பேசுவான்,

"வந்திக்குக் கூலி யாளாய் வந்தவன் யாரென் றோடிக்
கந்தர்ப்பன் எனநேர் நின்ற காளையை நோக்கியேடா''
(திருவிளை: 61,41)

என்றானாம்.

அவன் நிற்கிறான். மன்மதன் போல் இருக்கிறான். பாண்டியனுக்குக்கூட 'டேய்' என்று சொல்ல மனம் வரவில்லை. ஆனால் சொல்லி விட்டான். என்ன செய்தான்.

" . . . . . யேடா
அந்தப்பங் குள்ள வெல்லா மடைபட்ட தெவனீ யின்னம்
இந்தப்பங் கடையாய் வாளா திருத்தியா றம்பீ யென்றார்''
(திருவிளை: 61,41)

என்றானாம். டேய் என்று ஆரம்பித்து தம்பி என்று முடித்தால், 'டேய்' என்று ஆரம்பித்த கொடுமையே போய்விடுகிறது. ஆகவே, இறைவனை இறைவன் என்று

தெரியாமல் நடந்துகொள்கிற பாண்டியன்கூட, அந்த ஆற்றலினால் ஈர்க்கப்பட்டு 'ஏடா' என்று தொடங்கி 'தம்பி' என்று முடிக்கிறான் என்றால் பரமகருணை உடையவனாகிய இறைவனுடைய சன்னதியிலே மக்கள் தங்களையும் அறியாமல் மேலே ஏற முடிகிறது என்றப் பேருண்மையைக் காட்டுவதோடு, வந்தியைப் போன்று துணையின்றி, இருக்கின்றவர்கள் அனைவருக்கும் பற்றுக் கோடாக இருப்பவன் இறைவன் என்பதையும் காட்டுவதோடு, இழிந்த உயிர்களாகிய பன்றிக் குட்டியில் தொடங்கி, பேரறிவுடைய மாணிக்கவாசகர் வரையிலும், அத்தனை பேருக்கும் இறைவனுடைய கருணை வெள்ளம்போல் கிடைக்கிறது. அதனைப் பயன் படுத்து கிறவர்களுக்கும், அவனுடைய அருமைப்பாட்டை அறிகிறவர்களுக்கும் அந்தக் கருணை கிடைக்கிறதென்ற பேருண்மையைக் காட்டுவதற்காகவும், இறைவனுடைய சௌலப்யத்தின் எல்லை எவ்வளவு தூரம் செல்லு மென்பதைக் காட்டவும் திருவிளையாடல் புராணம் அமைந்ததென்றால் அதனை மிகச் சிறந்த முறையில், ஒப்பற்ற தமிழ்ப் பாவினால், கற்பார் உள்ளம் கரைகிற முறையிலே பாடித் தந்த பெருமை பரஞ்சோதியாருக்கு உரியது. ஏனையோர் பாடியிருப்பினும், பரஞ்சோதியார் போன்ற அன்புள்ளம், படைத்து, இறைவனுடைய கருணை வெள்ளத்தில் ஆழ்ந்து, பாடிய காரணத்தால், பரஞ்சோதியார் திருவிளையாடல் இன்றும் உலகம் படிக்கிற முறையில் அமைந்திருக்கிற தென்பதை நாம் அறிய முடிகிறது. ஆகவே ஏனைய பக்தி நூல்களைப் போல திருவிளையாடல் புராணமும் படிக்கப் படிக்க "மலங்கெடுத்து மனங்கரைக்கும்" என்று திருவாசகத்தைப் பற்றி சொல்லியிருப்பது போல, படிக்கின்றவர்களின் மனம் கரையும் பேராற்றல் உடையதென்பதை அறிகிறோம்.

தமிழ்ப் பாடல் என்ற முறையிலே அதன் சுவையைக் கருதிப் படித்தாலும், சர்க்கரை பூசப்பட்ட மருந்து உள்ளே சென்று பயன் தருவது போன்று திருவிளையாடல் புராணத்தை அதனுடைய கவிதைச் சுவைக்காகப் படித்தாலும் பெரும்பயனை விளைவிக்குமென்பதை அறிய முடிகிறது. தமிழ்ப் புலவர் பரம்பரையிலே தமிழுக்குத் தொண்டு செய்த பெரும் புலவர்களில் பரஞ்சோதி முனிவரும் ஒருவராக விளங்குகிறார்.



# 8. சைவ சமயத்தில் ஒளி வழிபாடு

சிவபெருமானை முழுமுதற் பொருளாகக் கொண்டு வழிபடும் சமயம் சைவ சமயம் என்று கூறப்படும். தமிழகத்தை பொறுத்தவரை சிவ வழிபாடு மிகத் தொன்மையானது என்பதை அறிய முடிகிறது. வேத காலத்திலேயே சைவசமயம் மிகவும் வளர்ச்சி அடைந்திருந்தது என்பதையும் அறிதல் வேண்டும். வேதம் கூறும் யாகங்கள் அனைத்திற்கும் இந்திரனே முதல்வனாக கருதப்பட்டான். ஆனால் அந்த வேத காலத்திலேயே கௌடிண்யர்கள் என்று அழைக்கப் பெறும் வைதிகர்கள் இவ்வழிபாட்டு முறையில் மாறுபாடு கொண்டிருந்தனர். அவர்கள் யாகங்களை ஏற்றுக் கொண்டாலும், அதன் முதற் பொருளாக இந்திரனை வைக்கவில்லை. அனைத்து யாகங்கட்கும் தலைவன் சிவபெருமானே என்று கொண்டிருந்தனர்.

வேதகாலத்தைச் சேர்ந்த 'காயத்ரி மந்திரம்' சூரியன் பற்றி வருவதாகும். அதே காலத்தில் தமிழகத்தில் சிவ வழிபாடு வளர்ச்சி அடைந்திருந்ததால் சூரிய வழிபாட்டை சிவவழிபாட்டோடு சேர்த்தே கொண்டிருந்தனர்.

அருக்கன் பாதம் வணங்குவா் அந்தியில்
அருக்க னாவான் அரனுரு அல்லனோ
(திருமுறை: 5–100–8)

'அந்தியில் அருக்கன் பாதம் வணங்குவர்' என்று நாவுக்கரசர் கூறுவதால் காயத்ரி மந்திரம் ஜெபிப்பவர்

களையே குறிக்கின்றார் என்பது வெளிப்படை. அது சூரிய காயத்ரி என்று பெயர் பெற்றிருப்பினும், 'அருக்கன் ஆவான் அரனுரு அல்லனோ' என்று நாவரசர் குறிப்பிடு வதைப் பார்த்தால் கதிரவன் வழிபாடும், சைவ சமயத்தின் ஒரு பகுதியாகவே இருந்தது என்பது வெளிப்படும்.

அடுத்தபடியாக, பத்துப்பாட்டில் ஒன்றாகிய திரு முருகாற்றுப்படை ஞாயிற்றை அழகாக வருணிக்கின்றது.

"உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதறு
பலர்புகழ் ஞாயிறு கடல் கண்டாங்கு''

என்று கூறுவதால் கதிரவன் தோற்றத்தால் உலகம் மகிழ்ச்சி அடைகிறது என்கிறார் நக்கீரர். ஒளியும், ஒளிக்கு மூலமான கதிரவனும் இல்லையானால் உலகம் வாழமுடியாது என்பதை இன்றைய விஞ்ஞானிகள் கூறுவதுபோல, அன்றைய மெய்ஞானிகளும் கூறி உள்ளனர். வேதகாலத்தை அடுத்து ஸ்வேதாஸ்வதா உபநிடதம் தோன்றிய காலத்தில் சிவபெருமானுடைய அஷ்ட மூர்த்தங்கள் என்ற குறிப்பு பேசப்படுகிறது. அம் மூர்த்தங்களில் கதிரவனும் ஒன்றாகக் கூறப்படுகிறான்.

இவற்றிற்கு அடுத்தபடியாக சிலப்பதிகாரம், இரண்டாம் நூற்றாண்டில் தோன்றியதாகும். அக் காப்பியம் தொடங்கும் பொழுதே, "ஞாயிறு போற்றுதும், ஞாயிறு போற்றுதும்'' என்றே தொடங்குகிறது. நூலுள் கணவன், கள்வன் என்ற பொய்பழி ஏற்று கொலை யுண்டான் என்று கேள்வியுற்ற கண்ணகி ஆற்றொணாத் துயரடைந்து காலைக் கதிரவனைப் பார்த்து, "பாய்திரை வேலிப்படு பொருள் நீ அறிதி, காய்கதிர்ச் செல்வனே!'' என்று விளிக்கின்றாள். இந்த அடிக்கு 'பகல் பொழுதில் எல்லாப் பொருளும் நன்கு காணப்படும் எனவே

இவ்வுலகத்தில் உள்ள அனைத்தையும் கதிரவன் அறிவான்' என்று பொருள் கூறப்படும். அடுத்து நாவுக்கரசர் கூற்றின்படி, அருக்கன் சிவபெருமானே ஆவான், என்ற கருத்தை வைத்துக் கொண்டு இந்த அடிக்குப் பொருள் செய்தால், எல்லாப் பொருள்களிலும் நிறைந்து அவை அனைத்தையும் மேற் பார்வை பார்க்கின்றவன் சிவன் என்பது வெளிப்படக் காணலாம். எனவே சிலப்பதிகாரக் காலத்தில், அதாவது 2ம் நூற்றாண்டில் கதிரவனை, ஒளி வடிவைப் போற்றி வழிபடும் பழக்கம் இருந்து வந்தது என்பதை அறிய முடிகிறது.

சைவ சமயத்தோடு பெரிதும் தொடர்புடைய லலிதா சகஸ்ரநாமத்தில் 'பானுமண்டல மத்யஸ்தா' என்னும் மந்திரம் சூரியன் நடுவே அம்பிகை இருக்கின்றாள் என்று குறிப்பிடுகின்றது. சூரியன் என்று சொல்லும் போதெல்லாம் ஒளியைத்தான் இப்பெருமக்கள் கருதி னார்கள் என்பதை அறிதல் வேண்டும். ஒளி, உயிர்கள் வாழ்வதற்கு மிக இன்றியமையாத ஒன்றாதலின் அவ் வொளியைக் கொடுக்கும் கதிரவனைக் கடவுளாகவே போற்றி வழிபட்டனர் என்பதை அறிய முடிகிறது. ஆறு முதல் எட்டு முடிய உள்ள நூற்றாண்டுகளில் தோன்றிய தேவார திருவாசகங்களும் ஒளி வழிபாட்டைப் போற்று கின்றன.

இருநிலனாய்த் தீயாகி நீருமாகி
இயமான னாயெறியுங் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாச மாயட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறருருவன் தம்முருவந் தாமே யாகி

நெருநலையாய் இன்றாகி நாளை யாகி
நிமிர்புன் சடை யடிகள் நின்றவாறே
(திருமுறை: 6–94–1)

*என்று நாவரசர் வலிய இத்திருப்பாட்டில் தீ என்றும், திங்கள் என்றும், ஞாயிறு என்றும் கூறுகிறார். இங்கு குறிப்பிடப்பட்ட தீ, திங்கள், ஞாயிறு என்பவை வெவ் வேறானவை என்றாலும் ஒளியைத் தருகின்ற பொருள்கள் என்ற பொதுத்தன்மை பற்றி ஒன்றாகவே கொள்ளப்படும். திருநின்ற தாண்டகம் என்று கூறப்பெறும் இப்பதிகத்தின் ஐந்தாம் பாடலிலும்,*

"தீயாகி, . . . . . .
. . . . . . . . . .
தாரகையும் ஞாயிறுந் தண்மதியுமாகிக்
. . . . . . . . . .
நெடுங்சுடராய். . . . . ." (திருமுறை: 6–94–5)

*என்றும் குறிப்பிடுகிறார். இப்பதிகம் முழுதும் நாவரசர் இறைவனை, செழுஞ்சுடர், நெடுஞ்சுடர், எழுஞ்சுடர், ஆழல் வண்ணர், பரஞ்சுடர் என்றே கூறிச் செல்கின்றார். "தூண்டு சுடரனைய சோதி கண்டாய்"(6—23—1) என்றும் நாவுக்கரசர் பேசுவதால் இப்பெருமானுடைய காலத்தில் சிவவழிபாடும், ஒளி வழிபாடும் ஒன்றாகவே கருதப் பெற்றன என்பதை இப்பாடல்களைக் கொண்டு நன்கறியலாம்.*

*அடுத்தபடியாக திருஞானசம்பந்தர் மயிலாப்பூர் பதிகத்தில்*

". . . . கார்த்திகை நாள்
தளத்தேந் திளமுலையார் தையலார் கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்"
(திருமுறை: 2,183,3)

என்று பாடுவதால், கார்த்திகை மாதத்தில் ஆலங்காயம், வீடுகள் ஆகிய அனைத்திலும் நூற்றுக் கணக்கான விளக்குகளை ஏற்றி வழிபட்டார்கள் என்பதை அறிகிறோம். 'ஒண் சுடர்' என்ற சொல்லிலேயே, அச்சுடரைத் தாங்கி நிற்கும் விளக்கு குறிப்பாக அறியப் பட்டாலும், திருஞானசம்பந்தர் தேவாரத்தின் மூலம் விளக்குகளை வைத்து வழிபடும் பழக்கம் 7ம்நூற்றாண்டின் தொடக்கத்திலேயே இருந்து வந்தது என அறிகிறோம். 8ம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த சுந்தரர் பெருமான்,

காலமும் ஞாயிறும் ஆகிநின்றார்கழல்
பேண வல்லார்........................ (திருமுறை: 7–19–9)

எனக் குறிப்பிடுகிறார். 8ம் நூற்றாண்டின் கடைசியில் வாழ்ந்த மணிவாசகப் பெருமான் ஒளி வழிபாட்டின் வளர்ச்சியைக் கூறுபவர் போல,

"சோதியே, சுடரே சூழொளி விளக்கே
(திருமுறை: 8–29–1)

என்று பாடுகிறார். சோதி என்ற சொல்லால் சுயம் பிரகாசமாக விளங்கும் பேரொளியையும், சுடர் என்றமையால் எல்லைக்குட்பட்டு பற்றுக் கோட்டின் அளவுக்கு ஏற்ப விளங்கும் சுடர் என்றும் மக்கள் வைத்து வழிபடும் ஒளி விளக்கு என்றும் கூறுவதால் பகலில் ஞாயிறு எழுகின்ற நேரத்தில் பேரொளி வடிவாக வழிபட்ட நிலை ஏதோ ஒன்றைப் பற்றி எரியும் பொழுது சுடர் வடிவில் வழிபட்ட நிலை, வீட்டினுள் அமைந்திருக்கும் விளக்கை வழிபட்ட நிலை என்று கூறும் பொழுது வழிபடப்படும் பொருள், பேரொளி, சுடர், விளக்கு என மூன்றாக காணப்படினும் உண்மையில் அவை அனைத்தும் ஒன்றே என்ற கருத்தை மணிவாசகப் பெருமான் பெற வைக்கின்றார்.

எட்டாம் நூற்றாண்டின் இறுதியில் வந்த திரு மூலர், இறைவனைப் பேரொளி என்றும், ஒளி என்றும், விளக்கு என்றும் பேசுவதைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்களால் அறியலாம். இப்பெருமக்கள் கதிரவனைக் குறிப்பிடும் போது கூட ஒளியைத் தாங்கி நிற்கும் பொருளாகக் கருதினார்களே தவிர கதிரவனுக்கு என்று தனி மதிப்புத் தரவில்லை. நாமரூபம் அற்ற பரம்பொருள் ஒரு வடிவு பெறுகின்றது என்றால் அது ஒளிவடிவாகவே இருக்கும் என்று இவர்கள் கருதினார்கள் போலும். இறைவன் ஒளி வடிவானவன் என்பதைப் பலப்பல பாடல்களில் திருமந்திரம் பேசுகிறது என்றாலும் ஒரு சிலவற்றை மட்டும் இங்கே எடுத்துக் காட்டியுள்ளோம்.

"பரமன் அனலாய்ப் பரந்துமுன் நிற்க"
(திருமுறை : 10, 372)

"தாமேழ் உலகில் தழல்பிழம் பாய்நிற்கும்"
(திருமுறை : 10, 373)

"ஆலிங் கனஞ்செய்து எழுந்த பழஞ்சுடர்"
(திருமுறை : 10, 378)

"ஊழிக் கதிரோன் ஒலியைவென் றானே"
(திருமுறை : 10, 380)

"சோதி யதனிற் பரந்தொன்றத் தோன்றுமாம்"
(திருமுறை : 10, 381)

இறைவனை, கதிரவன், அக்னி என்றெல்லாம் கூறிய திருமூலர் ஒன்பதாம் தந்திரத்தில் ஒளி என்ற தலைப்பில் சோதி தரிசனம் பற்றிப் பல பாடல்கள் பாடுகிறார். அவற்றுள் சிலவற்றை இங்கே தந்துள்ளோம். இடமின்மைக் கருதி முழுப் பாடலையும் தராமல் சிறுசிறுப் பகுதிகளை மட்டும் எடுத்துத் தந்துள்ளோம்.

"ஒளியை யறியில் உருவும் ஒளியும்
ஒளியும் உருவம் அறியில் உருவாம்
ஒளியின் உருவம் அறியில் ஒளியே
ஒளியும் உருக வுடனிருந்தானே"

(திருமுறை : 10, 2681)

"விளங்கொளி யங்கி விரிகதிர் சோமன்
துளங்கொளி பெற்றன சோதி யருள"

(திருமுறை : 10,2683)

"மின்னிய தூவொளி மேதக்க செவ்வொளி
பன்னிய ஞானம் பரந்த பரத்தொளி"

(திருமுறை : 10,2686)

"விளங்கொளி மின்னொளி யாகிக் கரந்து
துளங்கொளி யீசனைச் சொல்லும் எப்போதும்"

(திருமுறை : 10,2687)

"விளங்கொளி யவ்வொளி யவ்விருள் மன்னுள்
துளங்கொளி யான்தொழு வார்க்கும் ஒளியான்

(திருமுறை : 10,2688)

"இலங்கிய தெவ்வொளி யவ்வொளி யீசன்
துலங்கொளி போல்வது தூங்களும் சத்தி

(திருமுறை : 10,2689)

"உளங்கொளி யாவதென் உள்நின்ற சீவன்
வளங்கொளியா நின்ற மாமணிச் சோதி"

(திருமுறை : 10,2690)

"உண்டில்லை யென்னும் உலகத் தியல்வது
பண்டில்லை யென்னும் பரங்கதி யுண்டுகொல்
கண்டில்லை மானுடர் கண்ட கருத்துறில்

விண்டில்லை யுள்ளே விளக்கொளி யாமே''
(திருமுறை : 10,2693)

இப்பாடலில் ஒளி என்ற பெயரில் துவாத சாந்தப் பெருவெளியில் காட்சி தரும் பேரொளியையும், ஆக்ஞையில் தோன்றும் சுடரொளியையும் (சோதி தரிசனம் தோன்றும் இடம்) குறிப்பதோடு இறைவியே ஒளிவடிவாக உள்ளாள் என்பதையும் யோகியாகிய திருமூலர் கண்டு உரைப்பதை மனத்தில் பதிக்க வேண்டும். இவ்வாறு இறைவன் ஒளி வடிவானவன் என்பதைப் பல பாடல்களில் எடுத்துக் காட்டிய திருமந்திரம் விளக்கையும் அவன் வடிவென்றே கூறுவதைப் பின்வரும் பாடலால் அறியலாம்.

விளக்கினை யேற்றி வெளியை அறிமின்
விளக்கினின் முன்னே வேதனை மாறும்
விளக்கை விளக்கும் விளக்குடை யார்கள்
விளக்கில் விளங்கும் விளக்கவர் தாமே
(திருமுறை : 10, 1818)

இப்பாடல்களில் ஒளிக்கு ஆகுபெயராக கதிரவனும், விளக்கும் அமைந்திருப்பதைக் காணலாம்.

பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் எழுந்த திருவிசைப்பாவின் முதற்பாடலே விளக்கைக் குறிப்பிடு வதைக் காணலாம்.

"ஒளிவார் விளக்கே உலப்பிலா ஒன்றே!
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே!

என்று பாடுவதால், இறைவனையே விளக்காக உருவகித்தமை அறிதற்குரியது.

இதுவரை கூறியவற்றிலிருந்து சங்க காலத்தில் இருந்து பத்தாம் திருமுறை முடிய உள்ள எல்லா நூல்களிலும்

இறைவனை ஒளிவடிவாகக் கண்டு வழிபடும் மரபு இந்நாட்டில் தொன்று தொட்டு வந்துள்ளது என்பதை அறியமுடிகிறது. சூரியகாயத்ரி சூரியனையே முழு முதலாகக் கொண்டு வழிபட இத்தமிழர் சிவபெருமானின் அட்டமூர்த்தங்களுள் சூரியனை உள்ளடக்கி ஒளிவடிவான இறைவன் பேரொளியாக நிற்பதோடல்லாமல் இவ்வனைத் திற்கும் விளக்கத்தைத் தரும் சக்தியையும் பெற்று உள்ளான் என்பதை அறியலாம்

அறுபத்தி மூன்று நாயன்மார்களில் அனைவருக்கும் முற்பட்டவர்கள் இறைவனால் 'அம்மையே' என்றழைக்கப் பட்ட காரைக்கால் அம்மையாரும், அதே இறைவனால் 'நில்லு கண்ணப்ப' என்று பேசப் பெற்ற கண்ணப்பரும் ஆவர். கண்ணப்பரின் வரலாறு பதினெண் புராணங்களில் ஒன்றாகிய சிவபுராணம் என்றழைக்கப்படும் வாயு புராணத்திலும் இடம் பெற்றுள்ளது. எனவே இவர்கள் இருவரும் 1ஆம் அல்லது 2ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் களாய் இருக்கலாம். காரைக்கால் அம்மையார் தாம் பாடிய 'அற்புதத் திருவந்தாதியில்' இறைவனை சோதியாக நினைந்து பாடுவதைப் பின்வரும் பாடல்கள் மூலம் அறியலாம்.

————————— சுடருருவில்
என்பறாக்கோலத் தெரியாடும் எம்மனார்க்கு
(அற்புதத் திருவந்தாதி – 45)

—————————காண்பார்க்குச்
சோதியாய்ச் சிந்தையுளே தோன்றுமே———
(அற்புதத் திருவந்தாதி – 60)

அவனே இருசுடர்தீ ஆகாசம் ஆவான்
(அற்புதத் திருவந்தாதி – 64)

———————— இதுவன்றே
மின்னுஞ் சுடருருவாய் மீண்டாயென் சிந்தனைக்கே
(அற்புதத் திருவந்தாதி – 67)

இப்பாடல்கள் 11ஆம், திருமுறையில் காணப்படுவதால் இங்கே குறிப்பிடப் பெற்றாலும் பாடப்பட்ட காலத்தை நோக்கினால் கி.பி. 3ம், நூற்றாண்டைச்சேர்ந்த பாடலாகும். திருமுருகாற்றுப் படைக்கு அடுத்தபடியாக விளங்கும் அம்மையின் பாடல் ஒளி, ஒளிவிளக்கு என்ற இரண்டையுமே குறிப்பதை மேலே காட்டியுள்ள பாடல்கள் அறிவிக்கும்.

8ம் நூற்றாண்டில் சுந்தரர் காலத்தில் வாழ்ந்த சேரமான் பெருமாள் நாயனாரும் தாம் இயற்றிய பொன் வண்ணத்து அந்தாதியில்,

.............................உயிருடம்பாகிய
சோதியைத் தொக்குமினோ
(பொன். அந்தாதி 183)

என்று பாடுகிறார்.

மேலே காட்டப் பெற்ற எடுத்துக் காட்டுகள் சங்ககாலத்தில் இருந்து 10ம் நூற்றாண்டு வரையுள்ள சைவ சமய வளர்ச்சியில் ஒளி வழிபாடு எங்ஙனம் பெரியதோர் இடத்தைப் பெற்றிருந்தது என்பதை அறியலாம். பதினோரு திருமுறைகளிலும் சோதிபற்றி வரும் நூற்றுக் கணக்கான குறிப்புகளில் இடங்கருதி ஒரு சிலவற்றையே எடுத்துக் காட்டியுள்ளோம்.

12ம் நூற்றாண்டில் தோன்றிய பெரிய புராணம் அம்பலத்து ஆடுகின்றவனை 'உணர்ந்து ஓதற்கரியவன்' என்று குறிப்பிடும் அதே நேரத்தில் 'அலகில் சோதியன்' என்றும் பாடுகிறார்.

உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.
(பெரிய புராணம் – 1)

*பெரிய புராணத்தை அடுத்துத் தோன்றிய சைவ சமயம் பற்றிய பெருங்காப்பியம் கந்த புராணம் ஆகும். முருகப் பெருமான் திரு அவதாரம் செய்தார் என்று கூறுமிடத்து அவனையே "தெரிவு அறிய சோதிப் பிழம்பு அது ஓர் மேனி ஆகி' என்று குறிப்பிடுவதைக் காணலாம்.*

அருவமு முருவுமாகி அகாதியாய்ப்பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்றசோதிப் பிழம்பதோர் மேனியாகக்
கருணைகூர் முகங்களாறுங் கரங்கள்பன் னிரண்டுங்
கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தனன் உலகமுய்ய
(கந்தபுராணம் திருஅவதாரப் படலம்–92)

*வாக்கு மனம் கடந்து அருவமும், உருவமும் கடந்து அனாதி என்றும் பல என்றும் ஒன்று என்றும் சுட்டப்படுகின்ற சிறப்புடையது பரம்பொருள். இவ்வாறு அதற்கு இலக்கணம் வகுத்தால் மனத்திடைக் குழப்பம் மிஞ்சுவது இயற்கையே. அக்குழப்பத்தைப் போக்க இந்த இயல்புகளை மனத்துள் வாங்க முடியாவிட்டாலும் மனமும், பொறிபுலன்களும் ஏற்றுக் கொள்ளக் கூடிய ஒரு வடிவம் இறைவனுக்கு உண்டு. அந்த வடிவம் சோதிப் பிழம்பாகும். சோதிப்பிழம்பாகத் தோன்றியவுடன் அது எங்கிருந்து தோன்றியது, எப்படித் தோன்றியது, அதன் அடிமுடி எங்கே என்று ஆராயப் புக வேண்டா. அறிவு ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டது அது என்று கூற வந்த கந்தபுராண ஆசிரியர் கச்சியப்ப முனிவர் சோதி என்ற*

சொல்லுக்கு இரண்டு அடைமொழிகள் கொடுக்கின்றார். 'தெரிவு அறிய சோதி' என்று கூறுவதால் அது ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டதென விளக்குகிறார். கச்சியப்பர் இக்கருத்தை திருஞானசம்பந்தப் பெருமானின் ஒரு தேவாரத்தில் இருந்து கூறுகிறார் என்று நினைக்கத் தோன்றுகிறது. அப்பாடல் வருமாறு:—

ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி
மாதுக்க நீங்கலுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கள் மிக்கீர் இறையே வந்துசார் மின்களே.
(திருமுறை : 3–312–576)

சுடர்விட்டுளன் எங்கள் சோதி என்று பெருமான் கூறுவதால் ஒளி, விளக்கு என்ற இரண்டையுமே பேசுகிறார் என்று நினைப்பதில் தவறில்லை.

கச்சியப்பரை அடுத்துவந்த தாயுமானவர் தொடக்கத்திலேயே,

அங்கிங் கெனாதபடி யெங்கும் ப்ரகாசமாய்
ஆனந்த பூர்த்தி யாகி
அருளொடு நிறைந்ததெது"
(தாயுமான சுவாமி பாடல் –1)

என்று தொடங்குகிறார். சங்க காலத்திற்கு முன்னர் தொடங்கிய சோதி வழிபாடு தாயுமானவர் வரை இடையீடு இன்றி தொடர்ந்து வருவதை இது வரை கண்டோம். இறைவனை சோதி வடிவாகக் கண்டு கூறுவதால்தான் திருஞானசம்பந்தர், மணிவாசகர் போன்றவர்களைச் சோதியுட் கலந்தார்கள் என்று கூறும் பழக்கம் பழங்காலம் தொட்டே இருந்து வந்தது. மேலே காட்டப் பெற்ற பாடல்களில் உருவ வழிபாட்டில் நம்பிக்கையும் அதன் வெளிப்பாடும் கலந்து மிளிரக்

காணலாம். இதே அடிப்படையில் தான் "தமசோமா ஜோதிர்கமய" (ஒளியை நோக்கி எங்களைச் செலுத்து வாயாக) என்பன போன்ற வேதவாக்கியங்களும், தமிழரை அல்லாத வேதகால ஆசிரியர்களும் நாளா வட்டத்தில் இந்திரன் முதலானவர்களைத் தொழுவதை விட்டு விட்டு சோதி வழிபாட்டில் இறங்கினர் என்பதை அறிய முடிகிறது.

18ஆம் நூற்றாண்டுமுடிய சூரிய வழிபாடும், உருவ வழிபாடும் பின்னிப் பிணைந்திருந்தன. திருவருட் பிரகாச வள்ளலார் 19ம், நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றி ஆன்மீக வளர்ச்சி அடைந்து ஏறத்தாழ ஐந்து திருமுறைகள் பாடி முடிக்கின்ற வரையில் இவ்விரு வழிபாடுகளையும் இணைத்தே பாடி உள்ளார். முதல் இரண்டு திருமுறை களில் மிக ஆழமான சைவ சமயப் பற்றும் அவரை ஆட் கொண்டிருந்தது. உருவ வழி பாட்டில் தொடங்கிய அவர் அம்பிகையின் வழிபாட்டிற்காக 'வடிவுடை மாணிக்க மாலை' பாடுகிறார். இறைவனுடைய பல்வேறு வெளிப் பாடுகளில் சக்தி ரூபமாகிய அன்னையின் வடிவமும் ஒன்று என்பது உண்மைதான். காலம் செல்லச் செல்ல புத்தம், சமணம் கிறிஸ்துவம் ஆகிய சமயங்களைப் பிறச் சமயங்கள் என்று ஒதுக்கி விடாமல் அவற்றில் உள்ள உண்மைப் பொருளை அறிய முற்பட்டார். புத்தம், சமணம் ஆகிய இரண்டும் கடவுள் என்ற பெயரில் ஏற்காவிட்டாலும் ஏனைய கிறிஸ்துவம், இஸ்லாம் போன்ற சமயங்கள் கடவுள் பொருளைக் கருத்தில் கொண்டு அதற்கென்று சில இலக்கணங்களையும் வகுத்தன. இந்த எல்லாச் சமயங்களும் வெவ்வேறு பெயர்களில் கூறும் முழுமுதல் பொருளுக்கு இலக்கணம் வகுக்கையில் அப்பொருள் ஒளிவடிவானது என்பதையும், கருணையே வடிவானது என்பதையும் ஏற்றுக் கொண்டனர். உருவ வழிபாடு என்று வரும் பொழுதுதான் பிரச்சனை

அதிகமாகின்றது. ஒரு சமயம் கற்பிக்கும் உருவத்தை மற்றொரு சமயம் புறக்கணிக்கிறது. இதனால் சமய மாறுபாடுகளும், சமயப் பூசல்களும் தோன்றலாயின. இதனை மனத்திற் கொண்ட வள்ளல் பெருமான் நாமரூபம் கடந்த அப்பொருளுக்கு நாமாக கற்பிக்கும் உருவங்களை விட்டு விடுவதில் தவறில்லை என்று கண்டார். எனவே எல்லாச் சமயங்களையும் ஏற்றுக் கொண்டு அவற்றின் இடையே உள்ள பொதுத் தன்மையை வெளிக்கொணர்ந்து அத் தன்மையையே ஒரு தாரக மந்திரமாக ஆக்கினால் பெருநன்மை விளையக் கூடும் என்பதை ஆன்மீக வளர்ச்சி பெற்ற அப்பெரியார் உணர்ந்து கொண்டார். இந் நிலையில், தாயுமானவப் பெருந்தகையின்,

> "வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
> விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லால்
> மாறுபடுங் கருத்தில்லை முடிவில் மோன
> வாரிதியில் நதித்திரள்போல் வயங்கிற் றம்மா."

என்னும் பாடல் அவருடைய எண்ண ஓட்டம் சரியானதுதான் என்பதை வலியுறுத்திற்று. தாயுமானவர் காலத்தில் புறச் சமயங்களின் தாக்கம் அதிக மில்லை. எனவே "வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைப் பெற்ற வித்தக சித்தர்கணமே" (தாயு மானவர் பாடல்—சித்தர்கணம்—1) என்று பாடுவதன் மூலம் அன்று பெருவழக்காய் இருந்த வேதாந்த மார்க்கத்தையும், சைவ சித்தாந்த மார்க்கத்தையும் ஒன்றிணைத்து ஒரு சமரச மார்க்கத்தைக் காண விழைந்தார் தாயுமானவர்.

வள்ளற் பெருமான் காலத்தில் சைவ, வைணவம் அல்லாத பௌத்த, சமண, கிறித்துவ, இஸ்லாமிய சமயங்களும் தழைத்திருந்தன. உருவ வழிபாட்டையே ஏற்றுக் கொள்ளாத இஸ்லாமியத்தையும் இணைத்து ஒரு

சமரச சன்மார்க்க சமயத்தை நிறுவ முயன்றார் வள்ளலார்.

மேலே கூறிய எல்லாச் சமயங்களிலும் ஏதாவது ஒன்று பொதுத் தன்மை உடையதாய், அனைத்துச் சமயங்களிலும் உள்ளதாய், அனைத்துச் சமயங்களும் ஏற்றுக் கொள்ளக் கூடியதாய் உள்ளதா என்பதை ஆராய்ந்த பெருமான் ஒரு மாபெரும் உண்மையைக் கண்டுபிடித்தார். பொதுத் தன்மை உடைய ஒன்றைத் தேடிச் சென்ற அவருக்கு ஒன்றுக்குப் பதிலாக இரண்டு பொதுத் தன்மைகள் கிடைத்தன. எல்லாச் சமயங்களும் தாம் கூறும் முதற்பொருள் ஒளி வடிவானது என்றே கூறின. அது மட்டுமல்லாமல் அப்பொருள் கருணை வடிவானது என்றும் கூறிக் கொண்டனர். எனவே மாறுபட்ட இச்சமயங்களை ஒருங்கே இணைக்கக் கருதியே வள்ளற் பெருமான் அனைத்துச் சமயங்களுக்கும் பொதுவான இவ் இரண்டு பண்புகளை ஒன்றாய் இணைத்து ஒரு தாரக மந்திரத்தை உருவாக்கினார்.

"அருட் பெருஞ்சோதி அருட் பெருஞ்சோதி
தனிப் பெருங்கருணை அருட் பெருஞ்சோதி"

இதனை ஏற்றுக் கொள்ளாமல் எந்தச் சமயவாதியும் தங்கள் கடவுளுக்கு இது பொருந்தாது என்று கூறமுடியாது என்றாலும் வள்ளலாரை 'சைவர்' என்று முத்திரைக் குத்திவிட்ட காரணத்தால் பிற சமயத்தார் இதனை ஏற்றுக் கொள்ள முன் வர வில்லை. அப்பெருமானால் நிறுவிய சமரச சுத்த சன்மார்க்கம் ஆதரிப்பார் இன்றி நாளா வட்டத்தில் மங்கத் தொடங்கி விட்டது.

ஒளி வழிபாட்டின் தொன்மையையும், பொதுத் தன்மையையும் அறிந்து கொண்ட வள்ளலார் வடலூரில்

சத்திய ஞான சபையை நிறுவி இந்த ஒளி வழிபாட்டிற்கு ஒரு புதிய திருப்பத்தைத் தந்தார்.

பரஞ்சோதி, பேரொளி என்பவற்றை வாயால் சொல்வது வேறு, அதன் உட்பொருளை உணர்வதென்பது வேறு. இந்தச் சொல் இந்த பூத உலகில் நாம் கண்ணுல் காணும் சூரிய ஒளியையோ, மின்னல் ஒளியையோ, அணுகுண்டு வெடிக்கும் பொழுது உண்டாகும் பல சூரியர்கள் ஒன்று சேர்ந்த ஒளியையோ குறிப்பதன்று. மனம், வாக்கு முதலியவற்றைக் கடந்து அகத்தின் ஆழத்தில் பயணம் செய்கின்ற ஞானிகள் என்றோ ஒருநாள் தரிசனம் செய்கின்ற பேரொளியையே இச் சொல் குறிக்கின்றது. புற உலக ஒளி கண்ணைக் கூச வைக்கும். ஆனால் இந்த ஒளி பொறிபுலன்களுக்கப்பாற் பட்டதாதலின் இப்பொறி புலன்களை ஒன்றும் செய் வதில்லை.

பொறி புலன்கள் தம் இயல்பை மறந்து, அடங்கிய வழியே அந்தப் பேரொளி அனுபவத்தில் திளைக்கும் பொழுது புறஉலக பொருள்கள், நிகழ்ச்சிகள், பொறி புல துய்ப்புகள் என்பவை செயலற்றுப் போகின்றன. சுண்ணாம்புக் காளவாயில் ஒருவர் தூக்கி எறியப் படுகிறார். சாதாரண நிலையில் ஐந்து நிமிடங்களில் அல்லது பத்து நிமிடங்களில் உப்பும் சதையும் கரைய உயிரைப் போக்கிவிடும் இயல்புடையது அக் காளவாய். ஆனால் ஒருவருக்கு மாசில் வீணையாக, மாலை மதியமாக வீசு தென்றலாக வீங்கிள வேனிலாக, மூசுவண்டறைப் பொய்கையாக அனுபவத்தைத் தருகிறது என்றால் அது எவ்வாறு முடிந்தது? ஈசன் இணையடி நீழல் என்ற பேரொளியிற் புகுந்தவர்களின் உடம்பு சுண்ணாம்புக் காளவாயில் இருந்தாலும் ஒன்றும் நேருவதில்லை. அவர்களின் உடம்பைப் பேரொளிக்கவசம்

மூடி இருப்பதால் அந்த உடம்புக்கு ஒன்றும் நேர்வ தில்லை.

அறிந்ததைக் கொண்டு அறியாதவற்றை அறிவிப்பது என்பது பண்டுதொட்டு இவ்வுலகில் வாழும் மனிதர்கள் அனைவரும் மேற்கொண்ட ஒரு வழியாகும். வாக்கு மனோலயம் கடந்த பேரொளியை அறிவிக்க கதிரவன், சந்திரன் என்பவற்றின் ஒளியையும், தீயில் தோன்றும் உதாரணமாகக் காட்டினார். பொறி புலன்களால் அறியக் கூடிய இவ்ஒளியைக் காட்டி இது போன்றதுதான் பொறிபுலன்களுக்கு அப்பாற்பட்ட பேரொளி என்று கூறினார். பிறகு அனைவர் அனுபவத்திலும் கிட்டக்கூடிய விளக்கை உதாரணமாகக் காட்டினார். ஒளியைத் தருகின்ற விளக்கு, ஒளி என்ற இரண்டும் அபேதமாய் பேசப் பட்டன. 'இல்லற விளக்கது இருள் கெடுப்பது' (4—11—8) என்று நாவுக்கரசர் கூறும் பொழுது 'ஒளி' என்பதற்குப் பதிலாக 'விளக்கு' என்ற சொல்லையே பயன்படுத்துகிறார்.

இந்த அடிப்படைகளை மனத்துட் கொண்டுதான் வள்ளற்பெருமான் அனைத்துச் சமயங்களும் ஏற்றுக் கொள்ளும் வகையில் ஒளி வழிபாட்டிற்கு ஒரு வடிவு கொடுத்தார். சங்க காலத்திற்கு முன்னர்த் தொடங்கி இன்று காணக் கிடைக்கும் பாடல்கள் அனைத்திலும் இறைவனைப் பேரொளியாகக் கண்டு வழிபடும் பழக்கம் தொடர்ந்து இருந்து வந்ததால் அந்த வழிபாட்டை உள்ளடக்கி "அருட்பெருஞ் சோதி" என்ற தொடரையும் மனத்தால் மட்டும் நினைக்கக் கூடிய சோதிக்குப் புறத்தேயும் காண ஒரு வடிவு கொடுத்து ஒரு விளக்கை சத்திய ஞான சபையில் நிறுவினார்.

இத்தத்துவத்தின் உண்மை உணராத சைவம் முதலிட்ட சமயவாதிகள் அனைவரும் "தத்தம் சமயமே அமைவதாக அரற்றி மலைந்தனர்". சமயங்களுக்குள்

வேறுபாடு இல்லையெனினும் சமயவாதிகளிடையே முரண்பாடுகள் என்றுமே உண்டு. இந்த முரண் பாட்டிலேயே சுவை காணும் சமயவாதிகள் என்றுமே உண்மையை உணரப் போவதில்லை. உணர முயல்வதும் இல்லை. சிவனை வழிபடும் சைவர்கள் கோளகி சைவம் என்றும், மாவிரதிகள் என்றும், காபாலிகர்கள் என்றும், பாசுஷண்ட சைவர்கள் என்றும், வீரசைவர்கள் என்றும், சைவ சித்தாந்திகள் என்றும், விரிந்து தம்முள் மலையக் காரணம் யாது? இவற்றை விட்டால் என்ன கிடைக்கும் என்று வள்ளற்பெருமான் இதோ பாடுகிறார்.

**"சாதிசமயச் சழக்கைவிட் டேன்அருட்**
**சோதியைக் கண்டேனடி – அக்கச்சி**
**சோதியைக் கண்டேனடி"**

**(அருட்பா–6–4949)**

இன்றுள்ள சமயப் பண்பாடுகளும், அதனால் விளையும் போர்களும், மனக் கோட்டங்களும் ஒழிந்து "ஒன்றே குலம், ஒருவனே தேவன்" என்ற திருமூலரின் வாக்கு நிலைபெற வேண்டுமானால் அதற்குரிய ஒரே வழி ஒளி வழிபாடே ஆகும்.

++++++

# 9. தாயுமானவர் கூறும் வாழ்க்கை நெறி

இன்றைக்கு 400 ஆண்டுகளுக்கு முன்னர் வேதாரண்யம் என்று வழங்கப் பெறுகிற திருமறைக் காட்டில் கேடிலியப்ப பிள்ளை என்று ஒரு பெரியவர் இருந்தார். அவருக்குச் சிவசிதம்பரம் என்கிற பெயர் உடைய ஒரு மகன் பிறந்தான். அவருடைய தமையனாருக்கு இந்தப் பிள்ளையைத் தத்துக் கொடுத்து விட்டு, தனக்கு ஒரு பிள்ளை இல்லையே என்று, மறைக்காட்டில் எழுந்தருளிய இறைவனை வேண்டிப் பெற்றார் ஒரு மகனை. அந்த மகன் தாயுமானவர் என்ற பெயரைப் பெற்றார். அதற்குக் காரணம் கேடிலியப்ப பிள்ளை திருமறைக் காட்டில் தோன்றியவராக இருந்தாலும் திருச்சிராப்பள்ளியை ஆட்சி செய்து வந்த நாயக்கப் பிரமுகராகிய ஒருவரிடத்தில் பணிபுரிந்து வந்த காலத்தில் குழந்தை பிறந்தது. ஆதலினால் தாயுமானவர் அருளினாலே குழந்தை பிறந்தது என்று கருதி 'தாயுமானவர்' என்ற பெயரை குழந்தைக்கு இட்டார்.

அந்தக் குழந்தை சாதாரண ஏனைய குழந்தைகளைப் போல அல்லாமல் இறைவனுடைய திருவருளால் பிறந்த காரணத்தினால் பெருங்கல்வியும் பேராற்றலும் உடைய இளைஞனாகத் திகழ தொடங்கினான். இந்த நிலையில் கேடிலியப்ப பிள்ளை இறைவனடி சேர்ந்தார். அரசன், தந்தை மறைந்தாலும் மகனுடைய பேராற்றல் தெரிந்து தந்தை பார்த்து வந்த அரசியல் பணியை மகனும் பார்க்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டார். அந்த

வேண்டுதலுக்கிணங்கி, தாயுமானவர் தந்தை பார்த்து வந்த பணியை சிலகாலம் பார்க்கின்ற நிலையில் அரசரும் இறையடி சேர்ந்தார். அரசன் இறந்த பிறகு அரசியார் அந்த அரசுப் பணியை மேற்கொண்டு தாயுமானவரைத் தமக்கு உதவியாக இருக்கும்படி வேண்டிக் கொண்டார். ஒருசில காலம் அரசுப் பணியில் இருந்த தாயுமானவர் என்ன காரணத்தினாலோ, முன்னை வினைப்பயன் சூழ்ந்த காரணத்தினால் என்று நினைக்க வேண்டி யிருக்கிறது, உலக வாழ்க்கையையே துறந்துவிட வேண்டு மென்ற முடிவுக்கு வந்தவராக அந்தப் பணியில் இருந்து தம்மை விடுவிக்க வேண்டுமென்று அரசியாரைக் கேட்டுக் கொண்டார்.

இந்த நிலையில் இவருக்குத் தமையனாராக இருந்த சிவசிதம்பரம் என்பவர் வந்து தம்பியினுடைய மனத்தைப் பாடுபட்டு மாற்றி மட்டுவார்குழலி என்கிற அம்மையாரை மணம் முடித்து வைத்து விட்டார். மணம் முடிந்த பிறகு இல்வாழ்க்கையில் ஈடுபட்ட தாயுமானவருக்கு ஓர் ஆண் மகவு பிறந்தது. ஆண் மகவு பிறந்த சிறிது காலத்தில் தாயுமானவரது மனைவியார் மட்டுவார்குழலி இறைவனடி சேர்ந்தார். ஆகவே தாயுமானவர் துறவு வாழ்க்கைக்குப் பச்சைக் கொடி காட்டி ஆயிற்று என்று நினைக்க வேண்டி யிருக்கிறது. என்று அந்த அம்மையார் காலமானாரோ அன்றே அவர் பெரும் துறவியார் ஆகவும், எப்படியும் வீடுபேற்றை அடையவேண்டும் என்ற ஏகாக்ர சித்தத் தோடு துறவு நிலை மேற்கொள்ளவும் முடிவு செய்து விட்டார். அவருக்கு இறைவன் அருளாலே மௌனகுரு என்பவர் குருவாக எங்கிருந்தோ வந்து சேர்ந்தார். திருமூலர் பரம்பரையிலே வந்தவர் மௌனகுரு என்பதை தாயுமானவப் பெருந்தகை தமது பாடலிலேயே பாடுகிறார்,

. . .மூலன்
மரபில்வரு மௌன குருவே.

(தாயு:மௌனகுரு—1)

என்று. மௌனகுரு என்ற காரணப் பெயரையுடைய அந்தப் பெருமகனார் தாயுமானவரை ஆட்கொண்டு, உலக பந்தங்களில் இருந்து அவரை முழுமையாக விடுவித்து ஆன்மிகத் துறையில் முன்னேற்றத் தொடங்கினார். அந்த வினாடியில் இருந்து தாயுமானவப் பெருந்தகை பாடல்கள் பாடுகின்ற பணியை மேற்கொண்டார்.

அருளய்யர் என்ற ஒரு அருமையான சீடர் தாயுமானவருக்கு அப்போதே வாய்த்து விட்டார். இல்லாவிட்டால் இந்தப் பெருமகனாருடைய பாடல்கள் நமக்குக் கிடைக்காமல் போயிருக்கும். மிக அற்புதமான சீடராகிய அருளய்யர் தாயுமானவப் பெருந்தகை உளம் கனிந்து உவந்து உவந்து பாடுகின்ற போதெல்லாம் ஒவ்வொரு முறையும் அந்தப் பாடல்களை எழுதி வைத்து நமக்கு அந்த மாபெரும் செல்வம் கிடைக்குமாறு செய்து விட்டார். தாயுமானவர் பாடல்கள் ஏறத்தாழ 1452 உள்ளன. விருத்தங்கள், கழிநெடிலடி விருத்தங்கள், வெண் பாக்கள், கண்ணிகள் என்கிற முறையிலே பல்வேறு வகையான பாடல்கள் 1452 ஆக மலர்ந்திருக்கக் காண்கின்றோம். இத்தனை பாடல்களையும் ஒரு முறை படித்தாலே தாயுமானவருடைய வளர்ச்சி நிலையை ஒருவாறு அறிய முடியும்.

முற்பகுதியில் அவர் பாடிய பாடல்கள் மிக அதிகமாக வட சொற்களைப் பெற்று விளங்கக் காணலாம். தொடக்கமாக உள்ள பாடல் அனைவரும் அறிந்ததாகும்.

அங்கிங் கெனாதபடி யெங்கும் ப்ரகாசமாய்
ஆனந்த பூர்த்தி யாகி
அருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடி எல்லாந்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனவாக்கி னில்
தட்டாமல் நின்றதெது சமயகோ டிகளெலாந்
தந்தெய்வம் எந்தெய்வ மென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவும் நின்றதெது
எங்கணும் பெருவ ழக்காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமாய்
என்றைக்கு முள்ள தெதுமேல்
கங்குல்பக லறநின்ற எல்லையுற தெதுஅது
கருத்திற் கிசைந்த ததுவே
கண்டன வெலாமோன வுருவெளிய தாகவுங்
கருதிஅஞ் சலிசெய்கு வாம்.

(தாயு : 1)

*என்று இறை இலக்கணத்தைச் சொல்ல வந்த அந்தப் பெருமகனார், விக்கிரக வழிபாட்டைத் தாண்டி, உபநிடதங்கள் கூறுகின்ற முறையில் மிக அற்புதமாக இறை இலக்கணத்தைப் பேசுகிறார். அப்படிப் பேசத் தொடங்குகிற பாட்டிற்கு அடுத்த 3 வது பாடலில் தாயுமானவர் தம்முடைய அறிவுத்திறன், மொழி அறிவு எப்படிப் பணிபுரிந்தன என்பதை நமக்குக் காட்டுகின்ற முறையில் பாடலை அமைக்கின்றார். பல்வேறுபட்ட வடசொற்களை சிறிதும் மாற்றாமல், அதேநேரம் தமிழ்ப் பாடல் இலக்கணத்திற்குச் சிறிதும் முரண்படாமல் மிக அற்புதமாகப் பாடியிருப்பதைக் காண முடிகிறது.*

அத்துவித வத்துவைச் சொற்ப்ரகா சத்தனியை
அருமறைகள் முரச றையவே
அறிவினுக் கறிவாகி ஆனந்த மயமான

ஆதியை அநாதி யேக
தத்துவ சொரூபத்தை மதசம்ம தம்பெறாச்
சாலம்ப ரகித மான
சாசுவத புட்கல நிராலம்ப ஆலம்ப
சாந்தபத வ்யோம நிலையை
நித்தநிர் மலசகித நிஷ்ப்ரபஞ் சப்பொருளை
நிர்விஷய சுத்த மான
நிர்விகா ரத்தைத் தடத்தமாய் நின்றொளிர்
நிரஞ்சன நிராம யத்தைச்
சித்தமறி யாதபடி சித்தத்தில் நின்றிலகு
திவ்யதே சோம யத்தைச்
சிற்பர வெளிக்குள்வளர் தற்பரம தானபர
தேவதையை அஞ்சலி செய்வாம்.

(தாயு : 4)

என்ற முறையில் அந்தப் பாடல் செல்வதைக் காண்கிறோம். ஆனால் இப்படிப் பாடுகின்ற பாடல்கள் பாடுகின்றவருடைய ஆற்றலை அறிவிக்கின்றதற்கும் பயன்படுமே தவிர சாதாரண மக்களுடைய மனத்தை ஈர்க்கப் பயன்படுமா என்பது சிந்தனைக்குரியது.

இப்படித் தொடங்கிய தாயுமானவர் பாடல்கள் போகப் போக மிக எளிய சொற்களைப் பயன்படுத்தி மக்களை ஈர்க்கின்ற பாடல்களாக அமைந்து விடுவதைக் காணலாம். அதிலிருந்து ஒன்றைத் தெரிந்துகொள்ள முடிகின்றது. இந்தப் பெருமகனார் உடைய வளர்ச்சி மிகுதியாக வளர வளர அதற்கேற்ற முறையில் அனுபவத்தைப் பெறப் பெற அந்த அனுபவம் வெளிப்படுகின்றபோது மிக எளிய சொற்களோடு கூடிய பாடல்களாக வெளிப்படுவதைக் காண்கின்றோம்.

நாநூறு வருஷங்களுக்கு முன்பிருந்த தாயுமானவப் பெருந்தகை புதுமை ஒன்றைப் புகுத்தினார். சமய

நிலையையொட்டி தமிழ் இலக்கிய வரலாற்றில் உலகில் முதன்முதலாக சமரசத்தைப் பேசியவர் தாயுமானவப் பெருந்தகையே ஆவார். நாநூறு ஆண்டுகளுக்கு முன்னர் இந்தத் தமிழ்நாடு இருந்த நிலையைச் சிந்தித்துப் பார்ப்போமேயானால் இரண்டு பெரிய சமயங்கள் தம்முள் போரிட்டதை நாம் வரலாறு மூலம் நன்றாக அறிய முடியும். ஒன்று ஏகத்துவம் என்கிற அத்வைத சமயம். மற்றொன்று சித்தாந்தம் என்கிற சைவ சித்தாந்தம் ஆகும். இவ் இரண்டிற்கும் அப்பாற்பட்டு வைணவ சமயமும் உண்டு என்பதை நாம் மறக்கலாகாது. வைதிக சமயம் என்று சொல்லப் பெறும் இந்த வேதாந்த சமயம் சைவ சமயத்தோடும், வைணவ சமயத்தோடும் ஓரளவு மாறுபட்டே நின்றது என்பதை மறுப்பதற் கில்லை. அந்த மாறுபாடு அளவைத் தாண்டாத வரையில் போற்றுதற் குரியதாக இருக்கும். ஆனால் அளவைத் தாண்டி ஒருவரோடொருவர் ஏசிக் கொள்கிற அளவுக்கு வளர்ந்த போது அறிஞர்கள் வருந்துகின்ற நிலை ஏற்பட்டது. அவரவரர்கள் தங்கள் தங்கள் சமயமே சமயம், மற்றது எல்லாம் சமயமே அல்ல என்று சொல்லுகின்ற நிலை அடைந்துவிட்ட காலம் தாயுமானவப் பெருந்தகை யினுடைய காலம்.

அந்தநிலையில் முதன்முதலில் ஓர் ஒருமைப் பாட்டை (Integration) இரண்டு சமயங்களிடையே செய்ய முயல்கிறார் தாயுமானவப் பெருந்தகை.

**வேதாந்த சித்தாந்த சமரசநன் நிலைபெற்ற**
**வித்தகச் சித்தர் கணமே.**

(தாயு சித்தர்கணம் :1)

என அத்துவைதம், சித்தாந்தம் என்ற இரண்டையும் ஒன்றாகக் கருதிப் பேசுகின்ற துணிவை முதன் முதலாக இந்த நாட்டில் புகுத்தியவர் தாயுமானவப் பெருந்தகை.

பண்ணோ னுனக்கான பூசையொரு வடிவிலே
பாவித் திறைஞ்ச ஆங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்திஅப்
பனிமல ரெடுக்க மனமும்
நண்ணேன் அலாமலிரு கைதான் குவிக்களனில்
நாணும்என் உளம்நிற்றி நீ
நான்கும் பிடும்போ தரைக்கும் பிடாதலால்
நான்பூசை செய்யல் முறையோ

(தாயு. கருணாகரக் கடவுள் : 6)

*என்றெல்லாம் அத்துவைதக் கருத்தைப் பாடுவார் போல பாடிச் செல்வதைக் காண முடிகின்றது.*

*அடுத்து தாயுமானவப் பெருந்தகை நான்கு பாடல்கள் தாண்டிய பிறகு பக்தி மார்க்கத்தின் எல்லையிலே நின்று,*

உடல்குழைய என்பெலாம் நெக்குருக விழிநீர்கள்
ஊற்றென வெதும்பி யூற்ற
ஊசிகாந் தத்தினைக் கண்டணுகல் போலவே
ஓருறவும் உன்னி யுன்னிப்
படபடென நெஞ்சம் பதைத்துள் நடுக்குறப்
பாடியா டிக்கு தித்துப்
பனிமதி முகத்திலே நிலவனைய புன்னகை
பரப்பியார்த் தார்த்தெ ழுந்து
மடலவிழு மலரனைய கைவிரித் துக்கூப்பி
வானேயவ் வானி லின்ப
மழையே மழைத்தாரை வெள்ளமே நீடூழி
வாழியென வாழ்த்தி யேத்துங்
கடல்மடை திறந்தனைய அன்பரன் புக்கெளியை
கன்னெஞ் சனுக்கெ ளியையோ
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்க டவுளே.

(தாயு. கருணாகர–9)

என்று பேசுகிறார். அப்படியானால் பக்தி மார்க்கத்தில் நின்று உருக்கத்தை நாடிப் பாடுகின்ற பாடல்களும் நிரம்ப இருக்கின்றன அவரிடத்தில். எனவே ஞான மார்க்கம், பக்தி மார்க்கம் என்ற இரண்டுக்கும் ஒரு பொதுத் தன்மையைக் கண்டவர் இவர் என்று அறியமுடிகின்றது. இவை இரண்டுக்கும் பொதுவான சில தேவைகளும் உண்டு. அதுதான் புலனடக்கம். மன அடக்கம் என்று சொல்லப் பெறும்.

பொறி புலன்களினால் கட்டுண்டு படுகின்ற அல்லலை எல்லாப் பெரியவர்களும் பாடியிருக்கிறார்கள். மிக இளங் குழந்தையாகிய நம்மாழ்வார் பெருமானே, இந்தப் பொறிபுலன்களை விட்டு என்னைத் துன்பத்திற்கு உள்ளாக்கி, உன் திருவடியைக் கூட நினைக்காமல் செய்து விட்டாயே, என்ற கருத்தில்,

**"வேதியா நிற்கும் ஐவரால் வினையேனை**
**மோதுவித்து உன்திருவடிச்**
**சாதியாவகை நீதடுத்து என்பெறுதி? அந்தோ!"**
**(நாலா : 2746)**

என்று பாடுகிறார்.

மற்றொரு குழந்தையாகிய திருஞானசம்பந்தர், திருவலிவலப் பதிகத்தில்,

**"தாயுநீயே தந்தைநீயே சங்கரனே அடியேன்**
**ஆயுநின் பால்அன்பு செய்வான் ஆதரிக்கின்றது உள்ளம்**
**ஆயமாய் காயம் தன்னுள் ஐவர் நின்று ஒன்றல் ஒட்டார்**
**மாயமே என்று அஞ்சுகின்றேன் வலிவல மேயவனே".**
**(திருமுறை : 1, 50, 7)**

இந்தக் கருத்தை அற்புதமாக தாயுமானவப் பெருந்தகை பின்வரும் பாடலில் பேசுகிறார்,

ஆழாழி கரையின்றி நிற்கவிலை யோகொடிய
 ஆலம்அமு தாக விலையோ
அக்கடலின் மீதுவட அனல்நிற்க வில்லையோ
 அந்தரத் தகில கோடி
தாழாமல் நிலைநிற்க வில்லையோ மேருவுந்
 தனுவாக வளைய விலையோ
சப்தமே கங்களும் வச்ரதா ணாணையில்
 சஞ்சரித் திடவில் லையோ
வாழாது வாழவே இராமனடி யாற்சிலையும்
 மடமங்கை யாக விலையோ
மணிமந்த்ர மாதியால் வேண்டுசித் திகள்உலக
 மார்க்கத்தில் வைக்க விலையோ
பாழான என்மனங் குவியஒரு தந்திரம்
 பண்ணுவ துனக் கருமையோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
 பரிபூர ணானந் தமே.

(பரிபூரண ஆனந்தம் – 9)

*இராமனுடைய திருவடிபட்டுக் கல்லும் மங்கை யாயிற்றே, அப்படிப்பட்ட உனக்கு,* **"பாழான என்மனம் குவியொரு தந்திரம் பண்ணுவது உனக் கருமையோ?"** *என்று பேசுகிறார்.*

*என் மனம் குவியும்படியாக ஒருவழி நீ சொல்லக் கூடாதா என்று கேட்கும் போது பக்திமார்க்கத்தின் எல்லைக்கே சென்று விடுகிறார் என்று நாம் அறிய முடிகிறது.*

*ஆக புலனடக்கம் இல்லாவிட்டால் வளர்ச்சி அடையவே முடியாது. உலகியல் முறையிலேயே வளர முடியாது என்றால் ஆன்மிக முறையில் வளர முடியாது என்று சொல்லவே தேவையில்லை. ஆகையினாலேதான் புலனடக்கம் தேவை என்பதை வலியுறுத்த வந்த தாயுமானவப் பெருந்தகை மனிதன் தன்னுடைய*

முயற்சியினாலேயே அதனைப் பெற்று விடுதல் என்பது முடியாத காரியம் என்பதை உணர்த்துகிறார்.

ஒரு காலத்தில் இந்த நாட்டில் தோன்றிய பெரியவர்கள் அறிவு பூர்வமாக ஆராய்வதன் மூலமாகவே புலனடக்கம் செய்ய முடியும் என்று கருதினார்கள். அனுபவம் வாய்ந்த தாயுமானவப் பெருந்தகை போன்ற பெருமக்கள் அது இயலாது என்பதை நன்றாக அறிந்தவர்கள் ஆகையினாலேதான் ஆண்டவனை நோக்கி,

**பாழான என்மனம் குவியவொரு தந்திரம்**
**பண்ணுவது உனக் கருமையோ?**

என்று கேட்கின்றார்.

இனி இந்த அடக்கத்தைப் பெற்றுவிடுவது என்பது அவ்வளவு எளிதான காரியம் அல்ல என்பதை மறுபடியும் வற்புறுத்த வருகின்றார். இன்று இருப்பது போலவே அவருடைய காலத்திலும் சித்திகள் செய்கின்றவர்கள் இருந்திருப்பார்கள் போல் இருக்கின்றது. ஏதோ வெறுங் கையில் பழத்தை வர வழைப்பதும், வெறுங்கையிலே விபூதியை வரவழைப்பதும் இன்று செயற்கருஞ்செயலாக அட்டமா சித்திகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது. இது மிக மிக பைத்தியக்காரத்தனமாகும். இதை நினைந்து பாடு கிறார் தாயுமானவப் பெருந்தகை.

**சினமி றக்கக் கற்றாலுஞ் சித்தியெல்லாம் பெற்றாலும்**
**மனமி றக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே**
**(பராபரக்கண்ணி:179)**

எத்தனை சித்திகளை நீ செய்தாலும் சரி, "மனம் இறக்கக் கல்லார்க்கு வாயேன்" என்று இதைச் சொல்வதன் மூலம் ஒரு மாபெரும் உண்மையைத் தாயுமானவப் பெருந்தகை நமக்குத் தெரிவிக்கின்றார். மனஅடக்கம் இல்லாதவர்கள்

கூட இந்தச் சாதாரண சித்திகளைச் (யட்சிணிவித்தைகள்) செய்ய முடியும் என்று தெரிகின்றது. ஆகவே இது போன்ற காரியங்களைச் செய்கின்றவர்களைப் பார்த்து நாம் என்ன நினைக்கிறோம். இவர்கள் தெய்வ அருளை முழுவதும் பெற்றவர்கள் என்று நினைக்கின்றோம். அது தவறு என்பதை எடுத்துக் காட்ட வந்த தாயுமானவப் பெருந்தகை, **சினம் இறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும் மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே** மனம் அடங்கக் (இறங்க) கல்லாதவர்கள் ஏன் வாய் திறந்து பேசுகிறார்கள் என்று எள்ளி நகையாடுவதோடு, சாடவும் செய்கின்றார்.

இனி இரண்டு சமயங்களுக்கிடையே ஓர் ஒருமைப்பாட்டைக் கண்டார். இரண்டு சமயங்கள் மட்டுமா அவர்கள் காலத்தில் இருந்தன? எத்தனையோ சமயங்கள் இருந்தன. அப்படியானால் சிவபெருமானாகிய நடராசப் பெருமானை வழிபடுகின்ற தாயுமானவப் பெருந்தகை ஏதோ சைவம் என்ற குறுகிய வட்டத்திற்குள் நின்று இவை தவிர ஏனையவெல்லாம் சமயங்களே அல்ல என்று கருதினாரா? இல்லை, பரந்த நோக்கம் உடையவராக இருந்தாரா? வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை என்று சொல்லுகின்றாரே இந்த வேதாந்தம் சித்தாந்தம் இரண்டுக்கிடையேதான் சமரசம் கண்டாரா? என்றால் இல்லை என்பதை அவரே தெரிவிக்கின்றார். ஆண்டவனை நோக்கிச் சொல்லுகின்றார்.

**ஐவகை எனும்பூத மாதியை வகுத்ததனுள்**
**அசரசர பேத மான**
**யாவையும் வகுத்துநல் லறிவையும் வகுத்துமறை**
**யாதிநூ லையும் வகுத்துச்**
**சைவமுத லாம்அளவில் சமயமும் வகுத்துமேற்**
**சமயங் கடந்த மோன**

**சமரசம் வகுத்தநீ யுன்னையான் அணுகவுந்**
**தண்ணருள் வகுக்க இலையோ**

**(சின்மயானந்தகுரு:4)**

*“ஐயா! சைவம் முதலான எல்லாச் சமயங்களையும் படைத்தவன் நீ தான். சமயம் கடந்த மோன நிலையைப் படைத்தவனும் நீதான். இவ்வளவு பெரிய காரியங்களைச் செய்தவனாகிய நீ உன்னை நான் நெருங்கி வருவதற்குரிய வழியை வகுக்காமலா விட்டு விட்டாய்?'' என்று பேசுகிறார். ஆகவே எல்லாச் சமயங்களையும் உறுதியாக நம்பினார் என்று தெரிகிறது. அந்த நம்பிக்கை வந்த பிறகு சமயப் போராட்டத்திற்கோ சமயக் காழ்ப்புணர்ச்சிக்கோ இடமே இல்லை என்பதை அறிய முடிகிறது. இதனை வலியுறுத்தும் வகையில் பின்வருமாறு பாடுகிறார்.*

**வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்**
**விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லால்**
**மாறுபடுங் கருத்தில்லை முடிவில் மோன**
**வாரிதியில் நதித்திரள்போல் வயங்கிற் றம்மா.**

**(கல்லாலின்—25)**

*“வேதாந்த சித்தாந்த மரபு சமரசமாகவே பூராய மா யுணர ஊகமது தந்தருளும்'' (பரிபூர—8) என்றும், “சந்தமும் எனது செயல் நினது செயல், யான் எனும் தன்மை நினையன்றி இல்லாமையால் வேறே, வேதாந்த சித்தாந்த சமயம் இதுவே'' (பரிபூர—5) என்று கூறுகிறார் என்றால் இவரது சமயம் எல்லாச் சமயங்களும் இறைவனாலே படைக்கப் பட்டது என்பதை நன்கு அறிந்து, நம்பி, உறுதியான மனோ நிலையில் தோன்றியது என்பதை அறிய முடிகின்றது. .*

இதற்கடுத்தபடியாக தாயுமானவப் பெருந்தகை வாழ்ந்த காலத்திலே வாதப் பிரதிவாதங்கள் மிகுதியாக

நடைபெற்றிருக்கும் என நினைக்க வேண்டி உள்ளது. வரலாற்று அடிப்படையில் பார்த்தாலும் கூட தமிழ் நாட்டைப் பொறுத்த மட்டிலுமல்ல, உலகம் முழுவதுமே சமயப் போராட்டம் என்பது இன்று நேற்று தோன்றியது அல்ல. என்று சமயம் தோன்றிற்றோ அன்றே போராட்டமும் தோன்றி இருக்க வேண்டுமென்று நினைக்க வேண்டியிருக்கிறது. காரணம் சமயம் என்பது உணர்வினாலும், அனுபவத்தினாலும், உள்ளத்தினாலும் உணரப்பட வேண்டிய ஒன்று என்பதை விட்டுவிட்டு அறிவினாலே ஆராய்ந்து பார்க்கக் கூடிய ஒன்று என என்று மனிதன் கருத நினைத்தானோ அன்றே போராட்டம் தொடங்கி விட்டது. அறிவினாலே ஆராயப் படும் பொருள் என்றால் அவரவர்களுடைய அறிவு வளர்ச்சிக்கேற்ப முடிவுகள் மாறத்தான் செய்யும். முடிவுகள் மாறுவதை ஏனையோர் ஏற்றுக் கொள்வார்கள் என்று சொல்வதற்கில்லை. ஆகவே என்னுடையது பெரிது—உன்னுடையது பெரிது என்ற போராட்டம் உலகத்தில் என்றும் நிகழ்ந்து தான் வந்திருக்கிறது. இந்தப் போராட்டத்திற்கு மூலமாக இருக்கிற வாதப் பிரதிவாதங் கள் இருக்கிறதே. அவற்றைத் தாயுமானவப் பெருந்தகை சாடியதைப் போல இந்த இருபது நூற்றாண்டுகளில் யாரும் சாடியதாகச் சொல்ல முடியாது. (மிக அற்புதமாகப் பேசுகிறார்)

வள்ளுவன் கல்வி என்று ஒரு பெரிய அதிகாரமே வகுத்திருக்கிறான். கல்வி என்பது முகத்திரண்டு கண் என்று பேசுகின்றான். அப்படிப்பட்ட கல்வியை தாயுமானப் பெருந்தகை பேசுகிறார்.

**கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்**
**கற்றும்அறி வில்லா தஎன்**

**கர்மத்தை யென்சொல்வேன் மதியையென்சொல்லுவேன்**
**கைவல்ய ஞான நீதி**
**நல்லோ ருரைக்கிலோ கர்மமுக் கியமென்று**
**நாட்டுவேன் கர்ம மொருவன்**
**நாட்டினா லோபழைய ஞானமுக் கியமென்று**
**நவிலுவேன் வடமொழியிலே**
**வல்லா னொருத்தன்வர வுந்த்ரா விடத்திலே**
**வந்ததா விவக ரிப்பேன்**
**வல்லதமி ழறிஞர்வரின் அங்ஙனே வடமொழியின்**
**வசனங்கள் சிறிது புகல்வேன்**
**வெல்லாம லெவரையும் மருட்டிவிட வகைவந்த**
**வித்தையென் முத்தி தருமோ**
**வேதாந்த சித்தாந்த சமரசநன் நிலைபெற்ற**
**வித்தகச் சித்தர் கணமே.**

**(சித்தர்கணம் : 9)**

*என்ன ஆச்சரியமான சொற்கள். கல்லாத பேர்களே மிக நல்லவர்கள் என்று சொன்னால் அது நியாயமா? படித்தும் பயன் இல்லாது போன என் அறிவை என்னென்று சொல்வது? ஆகவே,* **கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்** *என்று பேசிவிட்டு அதற்கு உரிய காரணத்தை மிக அற்புதமாகப் பேசுகிறார்.*

*“கைவல்ய ஞானநீதி நல்லோ ருரைக்கிலோ கர்மம் முக்கியமென்று, நாட்டுவேன்”. ஒரு பெரியவர் வந்து ஞான மார்க்கத்தைப் போதித்தால் கர்மம் முக்கியமென்று நாட்டுவதற்காகவே (வாதம் பண்ணுவதற்காகவே) அவர் சொல்லுகிற ஞானமார்க்கத்தை விட்டு கர்மமார்க்கம் தான் சிறந்தது என்று சொல்லுவேன். கர்மத்தை ஒருவன் பேசினால் அவனுடன் போரிடுவதற்காகவே ஞானம் மிக உயர்ந்தது என்று சொல்லுவேன். வடமொழி படித்த*

*அறிஞர் ஒருவர் வருவாரேயானால், தமிழில் இப்படி எல்லாம் சொல்லப்பட்டிருக்கிறது என்று அவரை வெல்ல முயல்வேன். தமிழறிஞர் வருவாரேயானால் கடபுடா என்று இரண்டு வடமொழி சுலோகங்களைச் சொல்லி அவரை விரட்ட முயல்வேன். யாரையும் வெல்லாமல் விரட்டி விடுகின்ற இந்த அறியாமை இருக்கிறதே இது என்ன பயனைத் தரப் போகின்றது?* **வேதாந்த சித்தாந்த சமரச நிலைபெற்ற வித்தகச் சித்தர்கணமே** *என்று பேசுவதோடு நிறுத்தாமல் இன்னும் ஒரு படி மேலே போகிறார்.*

**மாறுபடு தர்க்கந் தொடுக்கஅறி வார், சாண்**
**வயிற்றின் பொருட்ட தாக**
**மண்தலமும் விண்தலமும் ஒன்றாகி மனதுழல**
**மாலாகி நிற்க அறிவார்,**
**வேறுபடு வேடங்கள் கொள்ளஅறி வார், ஒன்றை**
**மௌனமௌனென் றகம்வே றதாம்**
**வித்தையறி வார் எமைப் போலவே சந்தைபோல்**
**மெய்ந்நூல் விரிக்க அறிவார்,**
**சீறுபுலி போற்சீறி மூச்சைப் பிடித்துவிழி**
**செக்கச் சிவக்க அறிவார்,**
**திரமென்று தந்தம் மதத்தையே தாமதச்**
**செய்கைகொடும் உளற அறிவார்,**
**ஆறுசம யங்கள்தொறும் வேறுவே றாகிவிளை**
**யாடுமனை யாவ ரறிவார்**
**அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி**
**ஆனந்த மான பரமே.**

**(தாயு. ஆனந்தமானபரம் : 3)**

*இதுகொடுமை. தர்க்கம் செய்வதைத்தான் தெரிந்திருக் கிறார்கள். கேவலம் வயிற்றுப் பிழைப்புக்காக*

ஆகாசத்திற்கும், பூமிக்குமாகக் குதிப்பார்கள். மாலாகி என்பது மயக்கமுடையவற்காக.

ஏதோ ஜபம் பண்ணுவதாக முணுமுணுவென்று சொல்லிக் கொண்டிருக்கிறவர்கள் உலகத்தில் அன்றும் உண்டு. இன்றும் உண்டு. வெளியே இருந்து பார்க்கின்ற நாம் நினைக்கின்றோம் அவர்கள் ஜபத்தில் ஈடுபட்டிருக் கிறார்கள் என்று. தாயுமானவப் பெருந்தகை சொல்கிறார். **"மொணமொண என்றுஅகம் வேறதாம் வித்தை அறிவார்"** அதாவது மனம் எங்கோ இருக்கிறது. வாய் ஜபித்துக் கொண்டிருக்கிறது. இப்படி இருக்கிற வித்தை அறிவார். சந்தையிலே எப்படி சாமான்களைப் பரப்பி வைத்திருக் கிறார்களோ அதுபோல மெஞ்ஞான நூல்களை எடுத்துப் பேசுவதற்குரியவர்கள் உண்டு. என்ன பிரயோஜனம்? எங்கள் சமயத்திற்கு இணை வேறு சமயமே இல்லை என்று சொல்வார்கள். **ஆறு சமயங்கள்தோறும் வேறு வேறாகி விளையாடும் உனை யார் அறிவார்?** என்று ஆண்டவனைக் கேட்கிறார். ஐயா, எல்லாச் சமயங் களையும் நீதான் வகுத்தவன் என்பதை மறந்துவிட்டு இந்தக் கூத்து அடிக்கிறார்களே என்று கேட்கிறார். ஆகையினால் தான்,

**கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்**

என்று சொல்லிச் செல்கிறார்.

இதற்குமேலே கல்வி என்பது ஒருவிதத்தில் பெரு நன்மை விளைத்தாலும் மற்றொரு விதத்தில் வித்யா கர்வம் என்ற ஒன்றைத் தந்துவிடும் என்பதை யாரும் மறந்துவிட முடியாது. ஆகையினால் இங்கே பேசுகிறார்.

**எத்தனை விதங்கள்தான் கற்கினுங் கேட்கினும்என்**
**இதயமும் ஒடுங்க வில்லை**

**யானெனும் அகந்தைதான் எள்ளளவு மாறவிலை**
**யாதினும் அபிமானம் என்**
**சித்தமிசை குடிகொண்ட தீகையொ டிரக்கமென்**
**சென்மத்து நானறிகி லேன்**
**சீலமொடு தவவிரதம் ஒருகனவி லாயினுந்**
**தெரிசனங் கண்டும் அறியேன்**
**பொய்த்தமொழி யல்லால் மருந்துக்கும் மெய்ம்மொழி**
**புகன்றிடேன் பிறர்கேட் கவே**
**போதிப்ப தல்லாது சும்மா இருந்தருள்**
**பொருந்திடாப் பேதை நானே...**

**(ஆனந்தமானபரம்–9)**

*என்று பேசுகின்ற அற்புதத்தைப் பார்க்கின்றபோது கேவலம் கல்வி என்பது ஒருமனிதனை பண்பாட்டில் உயர்த்திவிடும் என்று அன்றும் நம்முடைய பெரியவர்கள் நம்பவில்லை. இன்றும் அது நம்பக்கூடாத ஒன்று என்று அற்புதமாகப் பேசுகிறார் இங்கே.*

*இந்த அளவு பேசிய பிறகு ஒரு முடிவுக்கு வருகிறார். தாயுமானவப் பெருந்தகையின் வளர்ச்சி மௌன குருவைக் கண்டதில் இருந்து தொடர்ந்து மேலே சென்று எவ்வளவுக்கெவ்வளவு வாய்மூடி இருக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு வளர்ச்சி அடைய முடியும் என்பதை அறிந்து கொண்டார் அருணகிரியார். அனுபவத்தில் கண்டு விட்டவர் ஆகையினால் பேசா அநுபூதியை அடியேன் பெற்று, சித்தத்தின் இருளைத் தீர்க்க வேண்டுமேயானால் ஒரே வழி பேசாமல் இருப்பதுதான் என்ற அற்புதத்தை,*

**ஐயா, அருணகிரியப்பா உனைப்போல மெய்யாக ஒரு சொல் விளம்பினவர் யார்?**

*என்று பேசுகிறார். அருணகிரியர் ஆயிரக்கணக்கான பாடல்களைப் பாடியிருக்கிறார். அவரைப் பார்த்து,*

**உனைப்போல் ஒரு சொல் விளம்பினவர் யார்?**

*என்றால் அவருடைய பாடல்களிலே எந்த ஒரு சொல்லில் ஈடுபட்டார் என்று நினைந்து பார்ப்போமேயானால் அதை எளிதாக உணர்ந்து கொள்ள முடியும்.*

**செம்மான் மகளைத் திருடும் திருடன்**

*இப்பாடலில் மூன்றாவது அடியில் வரும்* **'சும்மா இரு', 'சொல் அற'** *என்பதைத்தான்* **'ஒருசொல்'** *என்று குறிக்கிறார் தாயுமானவர். சும்மா இரு என்றால் ஏதோ வாயை மூடிக் கொண்டிருப்பது, மௌன விரதம் இருப்பது என்பதன்று. அதை ஒரு நாளும் நம்முடைய பெரியவர்கள் ஏற்றுக்கொண்டதே இல்லை. சும்மா இருக்கின்றவருடைய மனம் மிக பயங்கரமான முறையிலே வேலை செய்யும். ஆகவே சும்மா இரு என்று மட்டும் அருணகிரியார் சொல்லியிருப்பாரேயானால் அது என் போன்றவர்கள் தவறாகப் புரிந்துகொள்ள இடந்தரும். ஆகையினாலே 'சும்மா இரு' 'சொல் அற' என்றார். சொல் அறுதல் என்றால் மனத்தில் எண்ண ஓட்டம் இல்லாமல் இருத்தல் என்பது பொருளாகும். எண்ணம் எப்படித் தோன்றுகிறது? சொல்லின் மூலமாகத்தான் தோன்றுகிறது. சொல் இல்லை யானால் எண்ணமில்லை. ஆகவே சொல் அற என்று அருணகிரிப் பெருமான் சொல்லும்போது மனத்திலே எண்ணமே இல்லாமல் இருக்கவேண்டும் என்று சொல்லு கின்ற அந்தப்பெரிய நிலையை நினைந்து பார்த்துத்தான் தாயுமானவர்,*

**ஐயா அருணகிரி அப்பா உனைப்போல**
**மெய்யாக ஒருசொல் விளம்பினார் யார்?**

என்று பேசுகிறார். ஆகவே,

**சொல்லும் பொருளுமற்றுச் சும்மா இருப்பதற்கே**
**அல்லும் பகலுமெனக் காசை பராபரமே**

**(தாயு.பராபரக்கண்ணி.50)**

என்று சொல்லும்போது அருணகிரிப் பெருமான் சொல்லிய நுணுக்கத்தை நன்றாகத் தாயுமானவப் பெருந்தகை புரிந்து கொண்டார் என்பதை அறிய முடிகிறது. சொல்லும் பொருளும் அற்று சும்மா இருப்பது என்று சொல்லும் போது, இத்தகைய ஆன்மிக வளர்ச்சியை ஒருவன் அடைய வேண்டுமானால் அதற்கு குருவருள் வேண்டும் என்று இந்தப் பெருமக்கள் நினைந்திருக்கிறார்கள். இவருக்கு மௌன குரு கிடைத்ததுபோல அவரவர்களுக்கு ஒரு குரு கிடைத்தால் அது பயனுடையதாக இருக்கும் என்பதை தாயுமானவப் பெருந்தகை சுட்டிக் காட்டுகிறார்.

ஒருமொழியே பலமொழிக்கும் இடம்கொடுக்கும் வந்த குரு வளவளவென்று பேசவில்லையாம். ஏதோ ஒரு சொல்லைச் சொன்னாராம். அந்த ஒரு சொல்,

**"ஒருமொழியே பலமொழிக்கும் இடங்கொடுக்கும் அந்த**
**ஒருமொழியே மலம்ஒழிக்கும் ஒழிக்குமென மொழிந்த**
**குருமொழியே மலையிலக்கு மற்றைமொழி யெல்லாங்**
**கோடின்றி வட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய்."**

**(நினைவொன்று – 2)**

பலமொழிக்கும் இடம் கொடுக்கும் இவர் எவ்வளவு நினைந்து பார்த்தாலும் அத்தனைக்கும் அந்த ஒரு சொல் இடங்கொடுத்ததாம். அந்த ஒரு மொழியே மலம் ஒழிக்கும். அந்த ஒரு சொல் மலமாகிய குற்றங்களை ஒழித்ததாம். இவரிடத்தில் ஆணவம், கன்மம், மாயை என்றிருந்த

மூன்று குற்றங்களை நீக்கியதாம். அப்படிப்பட்ட அந்த ஒரு சொல், ஒருமொழியே மலம் ஒழிக்கும் ஒழிக்கும் என மொழிந்த குரு மொழியே மலையிலக்கு, என்று பேசுகிறார். அப்படியானால் மௌனகுரு எந்த ஒரு சொல்லைச் சொல்லியிருப்பார் என்பதை நாம் அறிந்துகொள்ள முடிய வில்லை.

ஆனந்தக் களிப்பில்,

**அருளால் எவையும்பார் என்றான்—அத்தை அறி**
**யாதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன், இருளான**
**பொருள் கண்ட தல்லாற்—கண்ட என்னையுங் கண்டிலன்**
**என்னேடி தோழி.**

**(ஆனந்தக் களிப்பு—13)**

என்று பாடுகிறார்.

குருவாக வந்தவன் சொன்னான். அருளாலே எதையும் பார் என்று. அருளைக் கொண்டு இறைவ னுடைய அருளை அல்லது குருவருளையே துணையாகக் கொண்டு உலகத்தை நீ பார்க்க வேண்டும் என்று சொன்னானாம். அப்படிப் பார்த்திருந்தால் என்ன தெரிந்திருக்கும் அவனை அல்லாமல் உலகத்தில் வேறு எதுவும் இல்லை என்று தெரிந்திருக்கும். அப்படியானால் எண்ணுவதற்கே ஒன்றும் இல்லை. ஏகம் சத் என்று மகாவாக்கியம் பேசுவதுபோல எல்லாம் இறைவன் மயமாக இருக்கின்ற காரணத்தினாலே, இறைவன் ஒருவன் தான்—அப்புறம் ஒன்றுமே இல்லை. அடுத்தபடியாக எண்ணுவதற்கே ஒன்றும் இல்லை. அப்படித்தான் குரு சொன்னாராம். அருளாலே எவையும் பார் என்றார் அப்படியல்லாது நான் தவறு செய்து விட்டேன். **'.......அத்தை அறியாதே சுட்டி என் அறிவாலே பார்த்தேன்'**

சுட்டி என்றால் நான் என்பது வந்துவிடும். நான் என்பது வந்த பிற்பாடு இது என்ன பொருள். இது என்ன பொருள் என்று எண்ணிக் கொண்டே போனேன். என்ன ஆயிற்று தெரியுமா? '..... **இருளான பொருள் கண்டதெல்லாம் கண்ட என்னையுங் கண்டிலன் என்னேடி தோழி'** இப்படி எண்ணிக்கொண்டே போய் அந்த மயக்கத்தில் நான் என்னையே இழந்துவிடும்படியான இருளிலே நுழையும் படியாயிற்று என்று சொல்லுவாரேயானால் குரு சொல்லிய அந்த ஒரு மொழி, **"அருளாலே எவையும் பார்"** என்பதாகும். அருள் மூலமாக உலகத்தைப் பார்க்க வேண்டும். என்கிற மொழியாகும்.

ஆக தாயுமானவருடைய நெறியிலே மிக இன்றி யமையாததாக அவர் சொல்லியது மௌனமாகும். சொல் அற இருக்கின்ற மௌனமாகும். சொல் அற இருக்கின்ற மௌனத்தைக் கடைப்பிடிக்கின்றவர்கள் இந்த உலகத்தில் தோன்றிய பிறகு பணிபுரிய வேண்டாமா? அற்புதமாகச் சொல்லுகின்றார்.

**எவ்வுயிருந் தன்னுயிர்போல் எண்ணுந் தபோதனர்கள்**
**செவ்வறிவை நாடிமிகச் சிந்தைவைப்ப தெந்நாளோ.**
**(எந்நாட்கண்ணி—12)**

இப்படிப்பட்ட பெரியவர்களிடத்தில் சேர வேண்டுமாம். இப்படிப்பட்ட பெரியவர்களுக்கு,

**அன்பர்பணி செய்யவெனை ஆளாக்கி விட்டுவிட்டால்**
**இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே**
(தாயு. பராபரக்கண்ணி : **155)**

என்கிறார்.

மக்கள் தொண்டு செய்ய வேண்டும் என்பதை மகா ஞானியாகிய தாயுமானவப் பெருந்தகை கூறுகிறார். அவருடைய நெறியில் நம்முடைய வளர்ச்சிக்குத் தேவை மௌனம். உயிர்கள் மாட்டு கருணையோடு பணிபுரிய வேண்டும். இந்த இரண்டுமே அவரது நெறியின் இரண்டு கண்களாகும் என்பதை அறிய முடிகிறது.



# 10. வள்ளலார் கண்ட வாழ்வு நெறி

வள்ளலார் கண்ட வாழ்க்கை நெறி என்று சொல்லும் போது நம்முடைய மனத்தில் சில சிந்தனைகள் தோன்று கின்றன. ஒவ்வொருவருமே ஒரு வாழ்க்கை நெறியைக் கண்டார்களா என்ற ஐயம் நியாயமானதுதான். உலக வரலாற்றையும், மனித வரலாற்றையும் சிந்திக்கும் போது இந்தத் தலைப்பு மிகப் பொருத்தமானது என்று அறிய முடிகிறது.

உலகம் தோன்றி பல்லாயிரம் ஆண்டுகள் வரை எந்த ஜீவ ராசியும் அதில் தோன்றவில்லை. அதன் பின்பு முதலில் தோன்றியவை நிலையியல் பொருள்களான மரம், செடி, கொடிகளேயாகும். அதன் பிறகு பல ஆயிரம் ஆண்டுகள் கழித்து ஓர் அறிவு உயிராகிய அமிபா போன்ற சிற்றுயிர்கள் தோன்றலாயின. இந்தப் பரிமாண வளர்ச்சி யின் இறுதிக் கட்டத்தில் இருப்பவன் மனிதன் ஆவான். இத்தகைய நெடு வளர்ச்சிக்குக் காரணகர்த்தாவாக ஒன்று இருந்தால் ஒழிய இது நடைபெறாது. அந்தக் காரணகர்த்தாவையே, இறைவன் என்றும் மூலப் பரம்பொருள் என்றும் கூறுகின்றோம்.

மக்களைப் படைத்த இறைவன் அந்தந்த இடங்கள், சூழ்நிலைகள், அவரவர்களுடைய பண்பாடுகள் நாகரிகம் என்பவற்றிற்கேற்ப அந்தப் பகுதிகட்குப் பெரியவர்களை அவ்வப்போது அனுப்பியிருக்கிறான். கீதையிலே பகவான் சொல்லியதாக "யுகே யுகே" தோன்றுகிறேன் என்று உள்ளது. ஒவ்வொரு யுகத்திலும் எந்தெந்த இடத்தில் ஏது

எது தேவைப்படுகிறதோ அந்தந்த இடத்தில் அதை நிரப்பு வதற்காகப் பெரியவர்களை அனுப்பிவைப்பது இறைவ னுடைய திருவுள்ளமாகும். மிகப் பழைய காலத்தில் தோன்றிய இந்து சமயம் என்று சொல்லப்படுகின்ற சமயத் திலிருந்து மிக அண்மையில் தோன்றிய சமயங்கள் வரை எல்லாச் சமயங்களையும் ஒன்று சேர்த்துப் பார்க்கும்போது இரண்டு பிரிவாக அவற்றைப் பிரிக்க முடியும்.

பழைய சமயத்தின் அடிப்படையை வைத்துக் கொண்டு காலதேச வர்த்தமானங்களுக்கேற்ப தேவையான மாறுதல்களைச் செய்வது ஒருவகை. மற்றொன்று, அந்த அடிப்படையை விட்டுவிட்டு முற்றிலும் புதியதாக ஒரு சமயத்தை உண்டாக்குவது. இந்த இரண்டு வகையிலும் சமயங்கள் வளர்ந்திருக்கின்றன. இந்தச் சமயம் போன்ற வற்றை யார் தோற்றுவித்தார்கள் என்கிற வினாவிற்கு விடை காண்பது இயலாத காரியம்; என்று தோன்றிற்று என்று சொல்லுவதும் இயலாத காரியம். இந்து சமயம் அப்படிப்பட்ட ஒரு சமயம். இனி ஏசுநாதர் அமைத்த சமயம், நபிகள் நாயகம் அமைத்த சமயம், புத்த பிரான் அமைத்த சமயம், ரிஷபதேவர் அமைத்த சமயங்களை எல்லாம் பார்ப்போமேயானால் அவரவர்கள் புதுவழி களைக் கண்டு புதுமுறையில் மக்களைச் செலுத்தி யிருக்கிறார்கள். ஆகவே அந்தச் சமயங்கள் அவர்களால் தோற்றுவிக்கப்பட்டன என்பதை அறிந்துகொள்ள முடியும்.

இந்தச் சமயகர்த்தாக்கள் அனைவரும் மிகச் சிறந்த சீடர்களைப் பெற்றிருந்தார்கள். அவர்களுக்குத் தம் கருத்துக்களை உபதேசம் செய்தார்கள். நாளாவட்டத்தில் இந்த வாய்மொழி உபதேசம் நூல் வடிவங்களாயிற்று புத்தருடைய சீடராகிய ஆனந்தன் தொகுத்தவைதான் தம்மபதம் என்ற நூலாயிற்று.

இந்த அடிப்படையில் ஏன் இப்படிச் சிந்திக்கிறோம் என்றால் வாழ்க்கை நெறியை அவரவர்கள் வகுத்திருக் கிறார்கள். ஏசுபெருமான் தாம் தோன்றிய சூழ்நிலைக் கேற்ப வாழ்க்கை நெறியை வகுத்திருக்கிறார். அதேபோல பின்னே வந்த பெருமக்கள் அனைவரும் எந்தெந்தக் காலத்தில், எந்தெந்த சூழ்நிலையில் தோன்றினார்களோ அதற்கேற்ப வாழ்க்கை நெறியை அமைத்திருக்கிறார்கள். மிகப் பெரியதாகிய புத்த சமயத்தைத் தோற்றுவித்தவ ராகிய பகவான் புத்தரைப் பற்றி ஒன்று சொல்லுவார்கள். அவருடைய சீடராகிய ஆனந்தனை பிம்பிசாரர் மறு பிறப்பு உண்டு என்று நம்புகிறாயா என்று கேட்கிறார். ஆனந்தன் அதற்களித்த பதில், குருதேவர் அதைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை என்பதாகும். இனி மறுபிறப்பு உண்டு என்பதை நம்புகிறாயா என்ற கேள்வியை அடுத்து கடவுளைப் பற்றிய கேள்வியும் வருகிறது. குருதேவர் அதைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை என்று ஆனந்தன் சொல்கிறான். மிகச் சிறந்ததாகிய பௌத்த சமயத்தை ஏற்படுத்திய பகவான் புத்தர் இந்த இரண்டு பெரிய வினாக்களுக்கும் ஏன் பதில் கூறவில்லை என்று இங்கு அமைதியாகச் சிந்தித்தால் ஓர் உண்மை விளங்கும். இந்த இரண்டும் அன்றைய நிலையில் தேவையில்லாமல் இருந்த ஒன்று. கடவுட் பொருளைப் பற்றிய ஆராய்ச்சி அன்று தேவைப்படவில்லை. ஆனால் மக்கள் அடைகின்ற துக்கம், துக்க உற்பத்தி, துக்க நிவாரணம், துக்க நிவாரணமார்க்கம் என்ற அளவில் மட்டும் தம்முடைய சமயத்தை நிறுத்திக் கொண்டார். ஆகவே ஒவ்வொரு சமயத்தை ஏற்படுத்திய வர்களும் அன்றைய சூழ்நிலையில் சமுதாயத்திற்கு எது தேவையோ அதையே பெரிதுபடுத்தினார்கள் என்பதை நாம் அறிந்து கொள்ள முடிகின்றது.

இந்த அடிப்படையை வைத்துக்கொண்டு பார்ப்போ மேயானால், இந்தத் தமிழ் நாட்டைப் பொறுத்த மட்டில்

சங்க காலம் தொட்டு சைவம், வைணவம் என்ற இரண்டும் வளர்ந்திருப்பதைக் காண முடிகிறது. அந்த சங்க காலத்திலிருந்து 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலே தோன்றிய வள்ளற்பெருமான் முதல் பிற்பகுதியில் தோன்றிய பாரதியார் வரை ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையாக வாழ்க்கை நெறியை வகுத்திருக்கின்றார்கள்.

இனி ஆழ்வார்கள், நாயன்மார்கள் என்பவர்கள் இந்தச் சமயங்களை அடியொற்றி புதிய வாழ்க்கை நெறியை வகுத்தார்களா என்றால் இல்லை. அவர்கள் சைவம், வைணவம் என்ற இரண்டும் எந்த அளவிலே ஏற்கனவே பழகியிருந்ததோ அதிலுள்ள குறைகளைப் போக்கி பக்தி நெறியை வளர்ப்பதற்குரிய வழிகளை வகுத்தார்களே தவிர புதிய வழி வகுத்தார்கள் என்று சொல்வதற்கில்லை.

ஆனால் வள்ளற்பெருமானைப் பொறுத்தமட்டில் புதிய நெறி வகுக்க வேண்டிய ஒரு சூழ்நிலை உருவாயிற்று. அதைச் சற்றுத் தெளிவாகக் காண்போமேயானால் அவர் வகுத்த வாழ்க்கை நெறி என்ன என்பதைத் தெரிந்து கொள்ள முடியும்.

170 ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றிய பெருமகனார் சாதாரண, வறுமை நிரம்பிய குடும்பத்தில் தோன்றியவர். அவருடைய தமையனாரைப் பொறுத்த மட்டில் அந்தக் காலத்தில் வழக்கத்தில் இருந்த பௌராணிகம் என்ற புராணப்பிரசங்கம் செய்து வாழ்க்கை நடத்துகின்றவர். வள்ளலாரைப் பொறுத்தமட்டில் முறையாக ஆசிரியரை வைத்துக் கல்வி பயின்றதாகத் தெரியவேயில்லை. இன்னும் பார்க்கப் போனால் பள்ளிக்கூடம் சென்று படிக்கவே அவர் விரும்பவில்லை என்று தெரிகிறது. இதனால் பெரிதும் வருத்தம் அடைந்திருக்கிறார் அவரது சகோதரர் என்பதையும் அறிய முடிகிறது. இப்படியே இவன் போய்

விடுவானேயானால் இவனுடைய பிற்கால வாழ்க்கை எப்படி நடைபெறும் என்று கவலைப்பட்டதாகவும் தெரிகிறது. இவற்றை ஏன் சொல்லுகிறேன் என்றால் ஐயாயிரம் பாடல்களுக்கு மேலே ஒப்பற்ற பாடல்களை அருளிச் செய்தவராகிய வள்ளற்பெருமான் முறையான கல்வி பயிலவில்லை என்பதை மனத்தில் கொள்ள வேண்டும். இது முடியுமா என்ற கேள்வி நியாயமானதே. இந்த உலகத்தில் மாபெரும் சமயங்களைத் தோற்றுவித்த பலரைப் பற்றிச் சிந்திப்போமேயானால் முறையான கல்வி பெறாதவர்கள் என்பதை உறுதியாக நாம் அறிந்துகொள்ள முடியும். காரணம் என்னவென்றால் இந்த முறையான கல்வி பெற்று அதனாலே என்ன பயனை அடைய முடியுமோ, அடைய வேண்டுமோ அதனை அவர்கள் உள் உணர்வினாலே அடைந்து விடுகின்றார்கள். இது எப்படி என்று சொல்ல வந்த சேக்கிழார் ஞானசம்பந்தப் பெருமானைப் பற்றிச் சொல்லுவார்.

**“உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்**
**தவமுதல்வர் சம்பந்தர் தாம் உணர்ந்தார் அந்நிலையில்”**
**(பெ.பு–1973)**

இவை என்று சொல்லுவார். ஆகவே கல்வியினாலே என்ன பயனைப் பெற வேண்டுமோ அந்தப் பயனை, ஞானத்தை அவர்கள் உள் உணர்வினாலும் இறைவ னுடைய திருவருளினாலும் பெற்றுவிடுகிறார்கள்.

வள்ளற்பெருமான், பிற்காலத்தில் மிகப் பெரிய புரட்சியைச் செய்யப் போகின்ற ஒருவர் மிக இளமைக் காலத்தில் மரபு பற்றி, சம்பிரதாயமான வழிபாட்டுமுறை, சம்பிரதாயமான விக்கிரக வழிபாடு, பூஜை முதலியவற்றில் ஈடுபட்டு இருந்தார் என்பதை நினைக்க முடிகின்றது. இப்படித் தொடங்கியவர் மிகப்பெரிய வழியை பிற்காலத் தில் எப்படி வகுக்க முடிந்தது என்றால் அது திருவருள்

துணைகொண்டு என்று சொல்வதைத் தவிர வேறு வழியே இல்லை. ஆகவே இந்த அடிப்படையை வைத்துக்கொண்டு பார்க்கும்போது முருகப் பெருமானுடைய வடிவழகிலே ஈடுபட்டு முதல் திருமுறை முழுவதும் சைவ சமயத்தில் ஊறிநின்றவராக அவர் பேசுகின்ற பேச்சுக்களை பல பாடல்களில் காண முடிகின்றது.

**தணிகை மலையைச் சாரேனோ**
**சாமி அழகைப் பாரேனோ** (திருஅருட்பா–272)

**வந்தென் எதிரில் நில்லாரோ**
**மகிழ ஒருசொல் சொல்லாரோ** (திருஅருட்பா–275)

**தணிகாசலம் போய்த்தழை யேனா**
**சாமி திருத்தாள் விழையேனோ** (திருஅருட்பா–280)

என்று சொல்லுவார். அதுமட்டுமல்ல. இறைவனே உன்னுடைய திருவடியை தரிசனம் பண்ண வேண்டு மென்று எத்தனை காலமாகத் துடித்துக் கொண்டிருக் கிறேன் என்பதை

**பண்ஏறும் மொழிஅடியர் பரவி வாழ்த்தும்**
**பாதமலர் அழகினைஇப் பாவி பார்க்கில்**
**கண்ஏறு படும்என்றோ கனவி லேனும்**
**காட்டென்றால் காட்டுகிலாய்** (திருஅருட்பா–103)

என்று கூறுவர்.

இதனை எடுத்துக் கூறுவதற்கு காரணம் என்ன வென்றால் இத்தகைய பெரியவர்கள் புதிய வாழ்க்கை நெறியைப் படைக்க வருகின்றார்கள் என்பதற்கே ஆகும். அத்தனை பேர்களுக்கும் இது பொதுவாக இருப்பதைக் காண முடிகின்றது. இராமகிருஷ்ண பரமஹம்சரைப் பொறுத்த மட்டில் இதனை நாம் அறிகின்றோம். அவர் ஒரு கதை சொல்கிறார்:

*ஒருவர் ஏதோ ஒரு குருவை நாடிச் செல்கிறார். பல காலம்சென்ற பிறகு அந்த குரு இவரைத் தண்ணீருக் குள்ளே தலையைப் பிடித்து அமிழ்த்தி விடுகின்றார். இனி மூச்சுத் திணறி உயிர்போய் விடுமோ என்று அஞ்சுகின்ற நிலையிலே இவரை வெளியே எடுத்துப் போடுகிறார். போட்டபின் 'என்ன நினைத்தாய்?' என்று கேட்கிறார்.* **'ஒரு நினைவும் இல்லை. எப்போது வெளியே வருவேன் என்ற ஒரு நினைவைத் தவிர வேறு நினைவே இல்லை'** *என்றார்.*

*இதேபோல இறைவனை எப்போது காண்பேன் என்ற எண்ணம் உள் மனத்தில் வருமேயானால் அன்று இறைவனைக் காணமுடியும் என்று ஒரு வார்த்தை சொல்லிவிட்டுச் செல்கிறார்.*

*அதேபோல பாரதியரைப் பொறுத்த மட்டில் பாண்டிச்சேரிக்குச் சென்ற பிறகு குள்ளச்சாமி, அல்லது மாங்கொட்டைச்சாமி என்ற மகானுடைய, சித்தருடைய உறவு அவருக்குக் கிடைக்கின்றது. அப்பெரியார் பின்வரும் முறையில் உபதேசம் செய்கின்றார். தலையைப் பிடித்து கிணற்றினுள்ளே காட்டுகிறார். அப்படியே தலையை நிமிர்த்தி சூரியனைக் காணுமாறு செய்துவிட்டு, அணித்தே உள்ள குட்டிச் சுவரை சுட்டிக்காட்டி விட்டுப் போய் விடுகிறார், என்றால் இவருடைய ஆதங்கம் எப்படியாவது இறையருளைப் பெற வேண்டும், நேரே அதை தரிசனம் செய்ய வேண்டும் என்ற உள் உணர்வு வலுவாக இருக்கின்ற காலத்தில் அது நடைபெறுகின்றது என்பதை நாம் அறிய முடிகின்றது. அப்படியானால் அது ஏன் தடைப்படுகின்றது? பெரியவர்கள் மாபெரும் காரியத்தைச் சாதிக்க வேண்டுமானால் ஏனையோரைப் போல கருவி கரணங்களை அதாவது மெய், வாக்கு, மூக்கு, கண், செவி ஆகிய ஐம்புலன்களைப் பெற்றிருந்தால் மாபெரும்*

காரியத்தைச் சாதிக்க முடியாது. இந்தப் பொறிபுலன்கள், சாதாரண மக்களுடைய பொறிபுலன்கள் போல் அல்லாமல் வலுவுடையனதாக ஆக வேண்டும். அதனையே சைவ சித்தாந்திகள் பசுகரணங்கள் பதி கரணங்களாக மாற வேண்டும் என்று சொல்லுவார்கள். சாதாரண மனிதர்களுக்குரிய கண் மூக்கு செவியாக இல்லாமல் திருவருள் பலத்தினாலே வலுவுடையனவாக இவை ஆகிவிடுமேயானால் அப்போது அவர்கள் மாபெரும் காரியங்களைச் சாதிக்க முடியும். பிறகு அவர்கள் பேசுகின்ற பேச்செல்லாம் மந்திரங்களாக மாறி விடும். அதைத்தான்,

**நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி– தானே**
**மந்திரம் என்ப. . . . (தொல்–)**

என்று பழமையான தொல்காப்பியம் கூறுகிறது. நிறை மொழி மாந்தர் மந்திரங்களைப் புதியனவாக தோற்றுவித்து மக்களிடையே பரவவிடுவார்கள், இந்தப் பெரியவர் களுடைய பொறிபுலன்கள் வலுவுடையனவாக மாறி இருக்கும். வலுப்பெறுதல் என்றால் ஏதோ நம்முடைய உடல் நிலை வளம் (Physical) பெறுவதைச் சொல்ல வில்லை. அத்தகைய வலு தேவையும் இல்லை. இங்கே வலு என்று சொல்லப் பெறுவது பொறிபுலன்கள். அவை எந்த ஒன்றுக்காக படைக்கப்பட்டனவோ அந்த ஒன்றை நாடிச் செல்ல வேண்டிய வலுவையே குறிக்கும். இந்த வலுவைப் பெறுவதற்கு முன்னர் கூறிய இறை தரிசனம் (விக்கிரக வழிபாடு) தேவைப்படுகிறது என்பதை நாம் அறிய முடிகிறது. இந்த முறையில் வள்ளலார் வாழ்க்கை வளர்ந்து வருவதைப் பார்க்கிறோம். ஆரம்பத்தில் இருந்த படியே வரன்முறை பற்றி, மரபுபற்றி, சம்பிரதாய ரீதியிலே போய் அவர் இறுதிவரை பாடியிருப்பாரேயானால்

முருகனைப்பற்றி ஓர் ஆயிரம் பாடல், சிவபெருமானைப் பற்றி ஓர் ஆயிரம் பாடல் பாடியிருக்கலாம். ஆச்சரியம் இல்லை. அப்படிப் பாடியிருப்பாரேயாகில் ஏனையோரைப் போல, அருணகிரியாரைப் போல முருகனைப் பற்றியும், தேவார ஆசிரியர்கள் நாயன்மார்களைப் போல சிவபெருமானைப் பற்றியும் ஆயிரக்கணக்கான பாடல்களைப் பாடியவராகி விடுவாரே தவிர புதுவழி வகுத்தவர் ஆக மாட்டார். ஆகவே இறைவன் ஒரு காரியத்தைச் செய்கிறான். இங்கு ஆழமாக நாம் சிந்திக்க வேண்டியது ஒன்றுண்டு.

சம்பிரதாயத்தை பின்பற்றுபவர்களைக்கூட சூழ்நிலை மாறும்போது தேவை ஏற்படும்போது இறையருள் அவர்களைத் தடம் மாற்றி வேறு வழிக்குக் கொண்டு செல்கிறது. ஓர் உதாரணத்தினால் இதனை நன்கு புரிந்து கொள்ள முடியும். பகவான் இராமகிருஷ்ணர் சக்தி வழிபாடு செய்தவர். அம்மையின் அருளை முழுவதுமாகப் பெற்றவர். அம்மையின் திருவருளைப் பெற்றதோடு அல்லாமல் அவருடைய திருவடிகளைத் தரிசனமும் செய்தவர். அப்படிப்பட்ட ஒருவர், ஏட்டுக் கல்வி இல்லாதவர். சக்தி வழிபாட்டில் ஈடுபட்டிருந்த பகவான் இராமகிருஷ்ணர் தம் தலை மாணாக்கராகிய நரேந்திரனை (விவேகானந்தர்) சக்தி வழிபாட்டில் செலுத்தவில்லை. மூன்று முறைகள் விவேகானந்தரை தொட்டுப் பின்னர் சக்தியை திருக்கோயிலுள் சென்று வழிபடச் சொல்கிறார். மூன்று முறையும் நரேந்திரனுக்கு வாக்கு, மனம், லயம் கடந்த அதீத நிலை கிட்டுகிறது. துவாதசாந்தப் பெருவெளியைக் கடந்து அன்னையின் தரிசனம் கிட்டுகிறது. ஆனால் விவேகானந்தரை அந்த வழியில் செல்லாமல் பகவான் தடுத்து விடுகிறார் இது ஏன்? பகவான் இராமகிருஷ்ணர் தாம் சென்ற வழியை விட்டுவிட்டு, வேறு வழியில் இவரைச் செலுத்த வேண்டிய காரணம் என்னவென்று சிந்திப்போமேயானால் ஓர் உண்மையை அறிந்து கொள்ள

முடியும். முக்காலமும் உணர்ந்த பகவான் எந்த ஒன்றுக்காக விவேகானந்தர் பிறப்பிக்கப் பட்டாரோ அந்த ஒன்று நிறைவேற வேண்டுமாகில் அது பழைய அடிப் படையில், சம்பிரதாய முறையில் பக்தி அடிப்படையில் நடைபெறாத காரியம் என்பதை உணர்ந்தார். அறிவு வளர்கின்ற மேலைநாட்டில் சென்று இந்த நாட்டினுடைய மிக அடிப்படையான இறைத் தத்துவத்தைப் போதிக்க வேண்டுமேயானால் அது பஜனை பாடுவதன் மூலமோ, பக்தி செலுத்துவதன் மூலமோ நடைபெறாத காரியம். அறிவை நம்பி வாழ்கின்ற சமுதாயத்திற்கு அறிவு மூலமே சென்று தத்துவத்தைப் போதித்தால் அது எடுபடும். ஆகவே விவேகானந்தரைப் பொறுத்த மட்டில் தாம் சென்ற வழியிலே செல்ல விடாமல் தடுத்து வேறு வழியில் அவருடைய அறிவை வளர்த்து, வேத அடிப்படையில் அவர் செல்லுமாறு செய்கிறார் பகவான் இராமகிருஷ்ணர் என்பதை விளங்கிக் கொள்ள முடியும்.

இதை விளங்கிக் கொள்வோமேயானால் வள்ளலா ருடைய வாழ்க்கையில் வந்த வேறுபாட்டையும் விளங்கிக் கொள்ள முடியும். ஒன்று, இரண்டு, மூன்று திருமுறை களில் விக்கிரக வழிபாட்டை அவ்வளவு விரிவாகப் பேசுகின்றார். இன்னும் சொல்லப்போனால் திருநீறு இடாதவர்களைக் கனவில் கூடக் காணக்கூடாது என்றெல் லாம் பேசுகிறார். திருநீற்றுக்கும், உருத்திராட்சத்திற்கும் எல்லையற்ற மதிப்புத் தந்த வள்ளற்பெருமான் 6ஆம் திருமுறைக்குப் போகும்போது புளியம்பழத்திலிருந்து ஓடு விடுபடுவது போல இவற்றிலிருந்து அவர் விடுபடுவதைக் காண்கிறோம். அது ஏன் என்பதை ஆழமாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இது அவருடைய ஆன்மிக வளர்ச்சியைக் காட்டுகிறது. சம்பிரதாய அடிப்படையில் முருகனிடத்தில் ஈடுபட்டு, சிவபெருமானிடத்தில் ஈடுபட்டு, அந்த பக்தியை வளர்த்து, கருவி கரணங்கள் எல்லாம்

இப்போது பசுகரணங்களாக இல்லாமல் பதிகரணங்களாகி விட்ட நிலையில் வள்ளல்பெருமான் முழுவதுமாக மாறிவிடுகின்றார். இது ஆன்மீக வளர்ச்சியால் பெற்ற பயனாகும். இதனிடையே மற்றொன்றிலும் அவருடைய மனம் செல்கிறது.

சென்னைப் பட்டினத்தில் வாழ்ந்தவர் அவர். 'தேட்டிலே மிகுந்த சென்னை' (3467) என்று அவரே சொல்லுவார். ஆகவே இங்கே மக்கள் எந்த ஒன்றுக்கும் கவலைப் படாமல் மேலே மேலே சம்பாதிக்க வேண்டும் என்ற போட்டி சமுதாயத்தில் வாழ்கின்றவர்கள். அதனால் அவர்கள் தேட்டிலே சிறந்தவர்களாக இருக்கிறார்கள். இந்தத் தேட்டிலே மிகுந்த சென்னையில்தான் அவரது இடைக்காலம் சென்றது என்றால், அது ஏன்? அதிலிருந்து என்ன தெரிந்து கொள்கிறார்? அவருடைய வாழ்க்கையில் பெருமாற்றத்தை உண்டாக்கக் கூடிய சில சூழ்நிலைகள் இங்கே இருந்தன.

முதலாவது வறுமை. இரண்டாவது உயிர்கள் படுகின்ற துன்பம். இந்த வறுமையும், துன்பமும் புதிதா? இல்லை. சங்ககாலம், அதற்கு முற்பட்ட காலத்திலிருந்தே வறுமை எல்லாரும் அறிந்த ஒன்றுதான். வறுமை என்பதும் உணவுக்கு மக்கள் திண்டாடுவதும், அதற்கு மறுதலையாக மக்களுக்கு உணவளிப்பதும் இன்று நேற்று தோன்ற வில்லை, என்றுமே இருந்து வருகின்ற ஒன்று.

அப்படியானால் நாயன்மார்கள், ஆழ்வார்கள் காலத்தில் வறுமை இல்லையா? இருந்தது. பின் ஏன் அவர்கள் அதைத் தீர்க்க விரும்பவில்லை. நன்றாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஒரு சூழ்நிலையில் தனிப் பட்ட இடத்தில் பஞ்சம் என்ற ஒன்று ஏற்பட்டு விடுகிறது. பஞ்சம் என்பது சாதாரண நிலையைவிட மிக மோசமான ஒரு நிலைமை. அந்த நிலையில் ஞானசம்பந்தரும்,

திருநாவுக்கரசரும் இறைவனை பஜனை பாட வேண்டு மென்று சொல்லவில்லை. அதற்குப் பதிலாக திருவீழி மிழலையில் இரண்டு இடங்களில் மடங்களை அமைத்து இரண்டு இடங்களிலும் சமையல் செய்யுமாறு செய்து, நாதன் விரும்பும் அடியார்கள் அனைவரும் வந்து விருந்துண்டு செல்க எனப் பறையறைவித்து சோறு போட்டார்கள் என்பதை நாம் அறிகின்றோம். எங்கே வறுமை, மக்களுடைய அன்றாட வாழ்க்கையைத் தொடர விடாமல் தடை செய்கின்றதோ அங்கே இந்த அடியார்கள் குறுக்கிட்டார்கள். உடனே அந்தப் பசியைப் போக்குவதற்கு முயன்றார்கள்.

பிற்காலத்தில் வந்த விவேகானந்தர், "பசியுடைய வனுக்கு ஆண்டவன் கூட ரொட்டித் துண்டின் வடிவமாகத் தான் வருகிறான் என்று சொல்கிறார். இதை நம்முடைய பெரியவர்கள் மறக்கவேயில்லை. ஆனால் இப்படித் தேவை ஏற்படுகின்ற போது இத்தகைய காரியத்தைச் செய்தார்களே தவிர வறுமையைப் போக்கு வதை ஒருதலைப்பட்ட கடமையாக மேற்கொள்ளவில்லை. காரணம் 7ஆம் நூற்றாண்டில் இந்த அளவுக்கு வறுமையும், துன்பமும் தமிழ்நாட்டில் இல்லை என்பதுதான். உயிர்கள் அனைத்தும் இறைவனது வடிவம் என்பதை அறியாதவர் களா இந்தப் பெருமக்கள்? நன்றாக அறிந்தவர்கள். அட்டமூர்த்தம் என்று சொல்லுவதைப் பார்ப்போமே யானால் உலகத்திலுள்ள எல்லா உயிர்களும் பொருள் களும் இறைவனுடைய வடிவம். இறைவன் ஒவ்வொரு உயிரிலுள்ளும் உறைகிறான் என்பதை நன்கு அறிந்தவர்கள்.

ஆகவே எந்த மனிதனாகட்டும், விலங்காகட்டும் எந்த உயிராக இருந்தாலும் அது இறைவன் உறைகின்ற இடம் என்பதை நன்றாக அறிந்திருந்தார்கள் என்றாலும்,

பசியைப் போக்குவதையே பெரிய கடமையாக அவர்கள் கருதாத காரணம் அன்று அந்த அளவு பசி தமிழ்நாட்டில் இல்லை என்பதுதான்.

தமிழ்நாடு தமிழர்கள் கையில் இருந்தது. இங்கு ஓரளவு வசதியான வாழ்க்கை வாழ்ந்திருந்தார்கள். ஏதோ ஓரிரண்டு இடங்களில் பஞ்சம் என்பது இயற்கையின் சீற்றத்தினாலே வருமேயானால் அந்த இடங்களில் சென்று மக்கள் பசியைப் போக்க அவர்கள் பாடுபட்டிருக்கிறார்கள். அவர்களை அடுத்து வந்த திருமூலர் அதைப் பெரிதாகச் சொல்லுகின்றார்.

நேரடியாக இறைவனுக்குத் தொண்டு செய்வதைக் காட்டிலும் மக்களுக்குத் தொண்டு செய்வதுதான் மிகப் பெரிய அறமாகும் என்பதை எடுத்துப் பேசுகின்றார் மாபெரும் சித்தராகிய திருமூலர்.

**படமாடக் கோயிற் பரமனுக்கு ஒன்று ஈயின்**
**நடமாடக் கோயில் நம்பர்க்கு அங்கு ஆகா**

என்று பேசுவார். பாம்பு அணிகின்ற பெருமானுக்கு நீ நேரே செய்கின்ற தொண்டு இருக்கிறதே அது உயிர்களுக்கு சென்று அடையாது. ஆனால்,

**நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்**
**படமாடக் கோயிற் பகவற்கு அது ஆமே**

நடமாடுகின்ற கோயில்களாக மக்களுக்கு ஒரு தொண்டு செய்வோமேயானால் அது நேரிடையாக இறைவனைச் சென்று சேரும் என்று சொல்லுகின்ற அளவுக்கு எட்டாம் நூற்றாண்டிலேயே மாபெரும் புரட்சியைச் செய்தவர் திருமூலர். அவரும் ஒரு சித்தர் தான். எனவே ஆறு, ஏழாம் நூற்றாண்டுகளில் ஆழ்வார்களும், நாயன்மார்களும் நாட்டில் உணவுப்

பஞ்சமின்மையின் மக்கள் பசியைப் பெரிதாகக் கருத வில்லை. அதனால் அவர்கள் இதனைப் பெரிதுபடுத்த வில்லை. ஆனால் அதே நேரத்தில் பசித்து வருகிறவர்கள் யாராக இருந்தாலும் அவர்களுக்கு உணவு தர வேண்டும் என்பதைக் கொள்கையாகக் கொண்டிருந்தார்கள். பெரிய புராணத்தில் வருகின்ற அடியார்கள் வரலாறுகளைப் பார்ப்போமேயானால் வருகின்றவர்களுடைய பசியைப் போக்குவதையே ஒரு கடமையாகக் கொண்டிருந்தவர்கள் ஏறத்தாழ 40 சதவிகிதத்தினர். இளையான்குடிமாறர் போன்றவர்கள் வேறு எந்த ஒரு காரியமும் செய்ததாகத் தெரியவில்லை. யார் பசித்து வந்தாலும் அவர்களுடைய பசியைப் போக்குகிறார். எனவே இது தனிப்பட்டவர்கள் செய்கின்ற அறம். குடும்பமாக இருக்கின்ற இடத்தில் விருந்தோம்பல் முதலானவற்றை குடும்ப அறமாகச் செய்தார்கள். இந்தக் குடும்பமும், தனி மனிதனும் சேர்ந்து, சமுதாயமாக அமையும்போது அந்தச் சமுதாயம் என்ன செய்ய வேண்டும் என்பதை ஆழமாகச் சிந்தித்து பிற உயிர்கள் படுகின்ற துன்பத்தைப் போக்குவதுதான் சமுதாயத்திலுள்ளவர்களுக்குக் கடமை என்பதை வலியுறுத்திச் சொன்னார்கள். இதை சாதாரண மக்கள் ஓரளவுக்குக் கடைப் பிடித்தார்கள். மிகப் பெரிய ஞானிகள், சித்தர்கள், பெரியவர்கள் இதையே மாபெரும் கொள்கையாகக் கொண்டு கடைப்பிடித்தார்கள் என்பதை நாம் அறிந்து கொள்ள முடிகிறது. ஆகவே மக்கள் பசியைப் போக்குவது மிகமிக இன்றியமையாத ஒன்று என்பதும், அதை இந்த நாட்டில் தோன்றிய எல்லாப் பெரியவர்களும் வலியுறுத்திக் கூறியிருக்கிறார்கள் என்பதும் நாம் அறிகின்ற ஒன்று. மக்கள்பசியைப் போக்குவதைப் பற்றி மணிமேகலை **'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே'** என்று மிக அற்புதமாகச் சொல்கிறது: உணவிடும் தொண்டை மறக்கவேயில்லை தமிழர்கள். என்றாலும் இறை

உணர்வோடு சேர்த்து இத்தொண்டை செய்திருக்கிறார்கள். அதற்கும் ஒரு வலுவான காரணம் உண்டு. இறையுணர்வு இல்லாமல் இந்தத் தொண்டைச் செய்வோமேயானால் அதில் மாபெரும் குற்றம் ஏற்பட்டுவிடும். அது என்ன வென்றால் வசதியுடைய ஒருவன் தினம் நூறு பேர்களுக்கு உணவு அளிக்கிறான் என்று வைத்துக் கொள்வோம். சில காலம் கழிந்தவுடனே அவனையும் அறியாமல் அவன் உடைய மனத்திலே ஒரு செருக்குத் தோன்றிவிடும். நான் இதைச் செய்யவில்லையானால் இந்த நூறு பேரும் என்ன பாடுபடுவார்கள் என்ற நினைவு தோன்றிவிடும். ஆகவே இந்த நூறுபேரும் என்னாலே வாழ்கின்றார்கள் என்ற நினைவு அவனையும் அறியாமல் தோன்றிவிடும். இறை அன்பு இல்லாமல் இத்தொண்டு செய்கிறவர்களுக்கு இத்தகைய அகங்காரம் வந்தே தீரும். அது உணவு போடு கின்ற தொண்டாக இருந்தாலும் சரி அல்லது வேறு எந்தத் தொண்டாக இருந்தாலும் சரி. தொண்டு செய்கின்றவர்கள் இறையுணர்வு இல்லாதவர்களாக இருப்பார்களேயாகில் அந்தத் தொண்டு பெரும் துன்பத்தைத்தான் உண்டாக்கும். அவர்களை பெரிய அகங்காரம் உடையவர்களாக ஆக்கிடுவதால் அவர்களது உதவியைப் பெறுகின்றவர்கள் இவனிடத்தில் போக வேண்டியிருக்கிறதே என மனம் நோகும்படியான ஒரு சூழ்நிலையை உண்டாக்கிவிடும். ஆகவேதான் நம்முடைய நாட்டிலே தோன்றிய பெரியவர் கள் தொண்டு செய்கின்றவர்கள் எத்தகைய தொண்டு செய்தாலும் இறையுணர்வின் அடிப்படையில் தான் அதைச் செய்ய வேண்டும் என்று கூறினார்கள். வறுமை யுடையவர், முதியவர், இளையவர் என்ற வேறுபாடே பாராட்டாமல் இறைவன் உறைகின்ற கோயில், இறைவன் உறைகின்ற உடம்பு அது என்று நினைத்து அந்த உடம்புக்கு வருகின்ற பசியைப் போக்க வேண்டுமென்ற கடப்பாட்டைச் செய்தார்கள். இவையெல்லாம் இந்த

நாட்டில் பரம்பரையாக வருகின்ற சில கோட்பாடு களாகும்.

வள்ளல்பெருமான் 19ஆம் நூற்றாண்டில் தோன்றி யிருக்கலாம். ஆனால் இந்த மரபு, இந்தப் பரம்பரை வலுவாக அவரிடத்தில் ஊறியிருந்தது என்பதை அறிந்து கொள்ள முடியும். ஒருவேளை யாராவது அப்படித் தவறாக நினைத்து விடுவார்கள் என்பதற்காகத்தான்,

**வாழையடி வாழைஎன வந்ததிருக் கூட்ட**
**மரபினில்யான் ஒருவன் அன்றோ – (திருஅருட்பா–3803)**

என்று பேசுகின்றார். அவர் செய்த செயல்களை எல்லாம் சிந்திக்கும்போது இந்த நாட்டினுடைய பழைய வரலாற்றை வைத்துச் சிந்திப்போமேயானால் பல உண்மைகளை அறிந்துகொள்ள முடியும்.

இந்த அடிப்படையில் விக்கிரக வழிபாட்டில் இருந்து சக்தி வழிபாடு வரை வளர்ந்த பெருமான் இது அக வளர்ச்சி—இனி புறத்திலே அவருக்கு ஏற்பட்ட மாறுதல் கள் என்ன என்று சிந்திப்போமேயானால் தேட்டிலே மிகுந்த சென்னையில் அவர் வாழ்ந்தார். அவரே வறுமை யுடையவராக வாழ்ந்தார். தினந்தோறும் திருவொற்றி யூருக்கு நடந்து சென்று வழிபட்டார் என்பதை எல்லாம் சிந்திக்கும் போது ஏன் அப்படி நடந்து சென்றார்? நடந்து சென்றால்தான் மக்களோடு தொடர்பு ஏற்படும். நால்வர் பெருமக்கள் கூட எல்லா இடங்களுக்கும் சென்று இறைவனை வழிபட்டார்கள் என்று இன்று எல்லோரும் பேசுகின்றோம். அறிவோடு ஒரு வினாவைக் கேட்போமே யானால் அதற்கு விடை சொல்ல முடியாது. எல்லா இடங்களிலும் ஒரே இறைவன்தான் இருக்கிறான் என்பதை இவர்கள் அறியாதவர்களா? சிவபெருமானைப் பொறுத்த மட்டில் ஒரே வடிவம்தானே. பெருமாளைப் போல நின்ற

*திருக்கோலம், இருந்த திருக்கோலம்; கிடந்த திருக்கோலம் அப்படி ஒன்றுமில்லையே. ஒவ்வொரு ஊரிலும் சென்று வழிபட வேண்டிய தேவை என்ன? ஒரே காரணம்தான். பல ஊர்களுக்கும் செல்வதனால் அங்குள்ள மக்களோடு தொடர்பு கொள்ள முடிந்தது. ஆக மக்கள் தொடர்பு கொள்ளுவதற்காகத்தான் இந்தப் பெரியவர்கள் ஊர் ஊராகச் சென்றார்கள்.*

*இனி வள்ளலாரைப் பொறுத்தமட்டில் சென்னை யிலிருந்து தினம் திருவொற்றியூருக்கும், கந்த கோட்டத் திற்கும் வருகின்ற காலத்தில் எத்தனையோ வகையான மக்களை அவர் பார்த்திருக்க முடியும்.*

*பிற்காலத்தில் 6 ஆம் திருமுறையில் பிள்ளைப் பெரு விண்ணப்பம் என்று பாடுகிறார். அந்த பிள்ளைப் பெரு விண்ணப்பம், பிள்ளைச் சிறு விண்ணப்பம் என்ற இரண்டு பகுதிகளும் அவரது சுயசரிதைப் பகுதிகளாகும். அதிலே இளமைக்காலத்திலே தம்முடைய வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை அவர் சொல்லும்போது மிக ஆழமாகச் சிந்தித்துப் பார்ப்போமேயானால் அவருடைய வாழ்க்கைத் தடத்தை மாற்றி வேறு திசையில் திருப்பியது எது என்று தெரிந்துகொள்ள முடியும். இரண்டொரு பாடல்களை இங்கே பார்ப்பது பொருத்தமாக இருக்கும்.*

**வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்**
**வாடினேன் பசியினால் இளைத்தே**
**வீடுதோ றிரந்தும் பசியறா தயர்ந்த**
**வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்**
**நீடிய பிணியால் வருந்துகின் றோர்என்**
**நேர்உறக் கண்டுளந் துடித்தேன்**
**ஈடின்மா னிகளாய் ஏழைக ளாய்நெஞ் சிளைத்தவர்**
**தமைக்கண்டே இளைத்தேன்**

**(திருஅருட்பா–3471)**

*இங்கே மூன்று சொல்கிறார், பயிர்கள் தண்ணீர் இன்றி வாடிய நிலை. மக்கள் உணவின்றி வாடிய நிலை. உணவு இருந்தும் பிணியால் வாடி வருந்துகின்றவர்கள் கண்டு இரங்கும் நிலை என்று, இந்த மூன்றும் கண்டு துடித்தேன் என்று சொல்வதை மனத்தில் வாங்கிக்கொள்ள வேண்டும். இங்கு கூறப்பட்ட மூன்று துயர நிலைகளையும் ஒன்றாகச் சேர்த்து,*

**மண்ணுல கதிலே உயிர்கள்தாம் வருந்தும்**
**வருத்தத்தை ஒருசிறி தெனினும்**
**கண்ணுறப் பார்த்தும் செவியுறக் கேட்டும்**
**கணமும் நான் சகித்திட மாட்டேன்**
**எண்ணுறும் எனக்கே நின்னருள் வலத்தால்**
**இசைத்தபோ திசைத்தபோ தெல்லாம்**
**நண்ணும்அவ் வருத்தம் தவிர்க்கும்நல்**
**வரந்தான் நல்குதல் எனக்கிச்சை எந்தாய்**
**(திருஅருட்பா–3408)**

*என்று பாடுகிறார். இப்பாடலில் வரந்தர வேண்டும் என்பது சிந்திக்கப்பட வேண்டிய ஒன்று.*

*உயிர்கள் வருந்துவது அவர்களது விதிவசத்தால் என்று பழங்காலமாக நாம் சொல்லிக்கொண்டு காலத்தை ஓட்டிக் கொண்டிருக்கிறோம். எனவே அவரவர் வினை வழியே அவரவர் வருந்துகிறார்கள். நாம் என்ன செய்ய முடியும் என்று நம்மை நாமே சமாதானம் செய்து கொள்கிறோம். அந்த நிலைபோக இப்போது வள்ளல் பெருமான் புதிய நெறியை வகுத்துக் காட்டுகிறார்.*

*பசியினால் வருந்தும் மக்களைக் கண்டு என்ன செய்ய வேண்டும் என்று சிந்திக்கின்றார். நோயினால் வருந்தும் மக்களைக் கண்டு என்ன செய்ய வேண்டு மென்று நினைக்கின்றார். பயிர்கள் வாடினால் என்ன*

செய்ய வேண்டுமென்று நினைக்கிறார் என்றால் மிகப் பெரிய தத்துவத்தை இதில் அடக்குகிறார். வாடிய பயிரையும், மக்களையும் ஒன்றாகச் சொல்லுகிறார். மக்களுக்காக வருந்தினார் என்று சொல்வது வேறு. ஆனால் வாடிய பயிரைக் கண்டு உளம் வருந்தினேன் என்பதற்கு அடுத்தபடியாக மக்களைச் சொல்வது என்றால் இந்தப் பயிருக்கும், மக்களுக்கும் அவரைப் பொறுத்தமட்டில் வேறுபாடு காணவில்லை என்ற மாபெரும் தத்துவத்தை இங்கே நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

தொல்காப்பியக் கூற்றுப்படி ஓரறிவு உயிர் முதல் ஆறு அறிவுடைய உயிர்வர்க்கம் அனைத்தும் ஒன்று என்று மிகப் பழங்காலத்திலேயே கண்டவர்கள் தமிழர்கள். ஆனால் பிற்காலத்தில் என்ன காரணத்தினாலோ இது நம்மைவிட்டு மெல்ல மெல்ல மறைந்து போயிற்று. திரும்ப 19 ஆம் நூற்றாண்டில் வந்த வள்ளற் பெருமகனார் மிகப் பழையதாகிய நம்முடைய இந்தத் தத்துவத்தை எடுத்து உயிர்கள் அனைத்தும் ஒன்று, அது பயிராக இருந்தாலும் சரி—மக்கள் உயிராக இருந்தாலும் சரி, வருந்துகின்ற போது அந்த வருத்தம் பயிருக்கும் மக்களுக்கும் ஒன்று தான் என்று சொல்கின்ற மாபெரும் தத்துவத்தை இங்கே வள்ளற்பெருமான் பேசுவதை நாம் அறிய முடிகின்றது.

அதற்கடுத்தபடியாக உயிர் வர்க்கம் அனைத்தும் ஒன்று என்று கருதிய பிறகு அந்த உயிர்கள் படும் துன்பத்தைப் போக்க வேண்டும் என்ற நினைவு அதற் கடுத்தபடியாகத் தோன்றுகின்ற நிலை. அந்த நிலையிலே யும் மற்றொரு அடிப்படை என்னவென்றால் இந்த உயிர்கள் படுகின்ற துன்பம் அவரவர்கள் வினைவழி வந்தது. அதனை ஆண்டவன்தான் போக்க வேண்டு மென்று நாம் இங்கு நம்மையும் அறியாமல் சமாதானம்

சொல்லுகின்றோம். அப்படி இல்லாமல் தாம் அதனைப் போக்க வேண்டும் என்று நினைக்கிறார் என்றால் அதற்குரிய காரணம் என்ன என்பதை நாம் சிந்திக்க வேண்டும்.

மனித சமுதாயம் எங்கிருந்தாலும் செல்வமும் வறுமையும் ஒன்றாகவே இணைந்திருந்தன என்றாலும் மனிதர்கள் பசியால் வாடுவது பொறுத்தற்கரிய துன்பமாகும். தான் வாழ்கின்ற சமுதாயத்தில் தன்னைச் சுற்றியுள்ளவர்கள் பசியால் வருந்தாமல் ஆவன செய்ய வேண்டியது ஒவ்வொருவருடைய கடமையாகும். இதனை மனத்தில் கொண்ட வள்ளலார் தர்மசாலை என்ற ஒன்றை நிறுவினார். அந்தச் சாலையில் உள்ள அடுப்பு என்றும் அணையக் கூடாது என்றும் ஆணையிட்டார். அதாவது எப்பொழுதும் உணவு தயாரித்துக் கொண்டே இருக்கவேண்டும். யார் எந்த நேரத்தில் வந்தாலும் உணவு வழங்கப்பட வேண்டும் என்று கருதித்தான் தர்மசாலை அமைக்கப் பெற்றது. தர்மசாலைக்கு வேண்டிய அரிசி முதலானவற்றை அன்பர்கள் ஓயாமல் வழங்கி வந்தனர். தேவைபடும் பொழுது வண்டி ஒன்றை அவ்வூரின் உள்ளும் பக்கத்து ஊர்களிலும் வலமாகச் செல்லுமாறும் செய்வித்தார். காலியாக புறப்பட்ட வண்டி வழிய உணவுப் பொருளை ஏற்றிக் கொண்டு திரும்புமாம். இன்றும் அந்த வண்டி உள்ளது. தேவை ஏற்படும்பொழுது அந்த வண்டி அனுப்பப் பெறுகிறது. அது நிரம்பி வழியும் வகையில் உணவுப் பண்டங்களை ஏற்றிக்கொண்டு இன்றும் அது வருவதைக் காணலாம்.

இனி அடுத்தபடியாக ஒரு மாபெரும் தத்துவத்தையும் காண முடிகின்றது. பிற உயிர்கள் துன்பப்பட்டால் அதனைப் போக்க வேண்டுமென்று இவர்கள் ஏன் நினைக்கின்றார்கள் என்பது ஆராய்ச்சிக்குரிய ஒன்றாகும்.

நம்மைப் போன்ற சாதாரண மக்கள் பிறருடைய துயரில் பங்கு கொள்கிறோம் என்று சொல்லி ஏதோ அவர்கள் நோய்வாய்ப் பட்டிருக்கும்போது சில பழங்களை வாங்கிக் கொண்டு சென்று அவர்களுக்குக் கொடுத்துவிட்டு வருவதனாலோ அல்லது அவர்களுடைய நிலை என்ன என்று விசாரிப்பதனாலோ பங்கு கொண்டதாக நினைக் கின்றோம். இதைத் தமிழர்கள் என்றைக்குமே ஏற்றுக் கொண்ட தில்லை. திருவள்ளுவர் தான் முதன் முதலாக இதற்கு இலக்கணம் வகுக்கின்றார்.

**அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்**
**தந்நோய் போல் போற்றாக் கடை (குறள்–315)**

என்கிற குறளுக்கு பரிமேலழகர் உட்பட யாரும் சரியாக உரை கண்டதாகச் சொல்ல முடியாது. பிற உயிர் களுடைய நோயைப் போக்க வேண்டுமென்று நினைக்கின்றவன் ஏதோ சில சமாதான வார்த்தைகளைச் சொல்வதனாலே நிச்சயமாக அந்தக் காரியத்தைச் செய்ய முடியாது. அப்படியானால் பிறகு என்ன செய்ய முடியும்? பிறருடைய நோயை நாம் பங்கிட்டுச் கொள்ள முடியுமா? பிறருக்கு வந்த வயிற்று வலியை நாம் பெற்றுக்கொள்ள முடியுமா? என்றால் நிச்சயமாகப் பெற முடியாது. ஆனால் வயிற்று வலியினாலே அவதிப்படுகின்றவர் எந்தத் துன்பத்தை அனுபவிக்கின்றாரோ அந்தத் துன்பத்தை தாம் ஏற்றுக்கொண்டு அனுபவிக்க வேண்டுமென்பது தான் அந்தக் குறளுடைய பொருளாகும்.

பிறிதின் நோய் தன் நோய்போல் போற்றாக் கடை என்பது, அந்த நோய் வந்தவர்கள் எந்தத் துன்பத்தை அனுபவிக்கின்றார்களோ அதே துன்பத்தை நாமும் அனுபவிக்க வேண்டும் என்பதுதான் அடிப்படைத் தத்துவமாகும். இக்கருத்தையே வள்ளலார்,

**மண்ணுல கதிலே உயிர்கள்தாம் வருந்தும்**
**வருத்தத்தை ஒரு சிறி தெனினும்**
**கண்ணுறப் பார்த்தும் செவியுறச் கேட்டும்**
**கணமும் நான் சகித்திட மாட்டேன்.**

**(திருஅருட்பா—3408)**

*என்று பாடுகிறார். சில சமயங்களிலே சில கொடுமை களை நாம் கண்ணால் பார்த்தால் சகிக்க முடியாததாக இருக்கும். ஆனால் அதையே பிறர் சொல்லக் கேட்டால் செய்தித்தாளில் படித்தால் நம்முடைய மனத்தில் அத்தகைய துன்பம் ஏற்படுவதில்லை. இது சாதாரண மக்களைப் பொறுத்த மட்டில் உண்மை. ஆனால் இந்த மகானைப் பொறுத்தமட்டில்*

**கண்ணுறப் பார்த்தும் செவியுறக்கேட்டும்**
**கணமும் நான் சகித்திட மாட்டேன்**
**எண்ணுறும் எனக்கே நின்னருள் வலத்தால்**
**இசைத்தபோது இசைத்த போதெல்லாம்**
**நண்ணும் அவ்வருத்தம் தவிர்க்கும் நல்வரந்தான்**
**நல்குதல் எனக்கிச்சை எந்தாய்**

**(திருஅருட்பா—3408)**

*என்கிறார். என்றால் பெருமானே இந்தத் துயரத்தைக் கண்டு நான் போக்க வேண்டும், இல்லாவிட்டால் அந்தத் துயரத்தை நானும் ஏற்று அனுபவிக்க வேண்டும். ஒருபடி மேலே சென்று வள்ளற்பெருமான் என்ன செய்கின்றார்? இந்த உயிர்கள் படுகின்ற துன்பத்தை நானும் ஏற்றுக் கொண்டு அனுபவிக்கிறேன் என்று சொன்னால் அது ஓரளவு இயலாமையை அறிவித்துவிடும். ஆதலினால் தான் ஆண்டவனிடம் ஒரு வரம் தர வேண்டும் எனக் கேட்கிறார். யார் யார் துயரத்தை அனுபவிக்கின்றார் களோ, அவர்களுடைய துன்பத்தை நான் போக்க வேண்டும், அதற்குரிய வரம் எனக்கு அருளல் வேண்டும்*

என்கிறார். நல்க வேண்டும் என்று கேட்கும்போது, வள்ளலார் வகுத்த வாழ்க்கை நெறி எப்படி புதிய தடத்திலே செல்கின்றது என்பதை நாம் காண முடிகிறது.

வள்ளுவன் காலத்திலே இருந்து மனுநீதிச் சோழன் வரையிலே இந்த ஒன்றைத்தான் அறிந்திருக்கிறோம். பிற உயிர்கள் படுகின்ற துன்பத்தைப் போக்க முயலவேண்டும். போக்க முடியவில்லையானால் அதை ஏற்றுக்கொண்டு அனுபவிக்க வேண்டும் என்று வள்ளுவன் கூறினான். ஒருபடி மேலே சென்ற வள்ளற் பெருமான் இறைவனிடத்தில் முறையிடுகின்றார். 'ஐயா இந்தத் துயரத்தைக் கண்டு, கேட்டு இவ்வினாக்களுக்கு நம்மைப் பொறுத்தமட்டில் அதை நீ ஏன் பார்க்கிறாய், அதை ஏன் கேட்கிறாய்? கண்ணையும் காதையும் மூடிக் கொள்வது தானே என்று எளிதாக விடை கூறிவிடுவோம். என்னால் மேலே நடந்து செல்ல முடியவில்லை.'

நாம்கூட இன்றைக்கு சமுதாயத்தில் பார்க்கின்றோம். அந்தக் கண்றாவியை ஏன் பார்க்கின்றீர்கள்? பேசாமல் போய்விடுங்கள் என்று சொல்வதை கேட்கிறோம். ஆகவே இதைக் கண்டபோது ஒதுங்கிப் போகின்ற முறைதான் சாதாரண மக்களுக்குரியது. ஆனால் மகான்கள் அப்படிச் செய்வதில்லை. அதற்குப் பதிலாக தாங்கள் யாரிடத்தில் முறையிட வேண்டுமோ அந்த இறைவனிடத்தில் முறை யிடுகின்றார்கள். முறையிட்டு என்ன கேட்கின்றார்கள்? தனக்கென்று ஒரு பயனை ஒரு காலத்திலும் இவர்கள் கேட்டதேயில்லை. பிற உயிர்களுக்காக இந்த வரபலம் தமக்கு வேண்டுமென்று நினைக்கின்றார்கள். வரபலத் தினாலே தாம் வீடு பேற்றை அடைய வேண்டுமென்று நினைப்பது ஒருவகை. அப்படி வாழ்ந்தவர்களும் உண்டு. ஆனால் இவர்கள் அவர்களைவிடப் பலபடி மேலே போனவர்கள். ஆகையினாலே இந்த வரத்தைப்பெற்று

அதனாலே தன்னுடைய ஆன்மிக வளர்ச்சியோ அல்லது வீடு பேற்றையோ அடைய வேண்டுமென்று ஒரு சிறிதும் நினைக்கவில்லை. இந்த உலகத்திலே என் கண்ணுக்கு முன்னாலே துன்பப்படுகின்ற மக்களுடைய துன்பத்தை, உயிர்களுடைய துன்பத்தை, ஏன், செடி கொடிகளுடைய துன்பத்தைப் போக்க வேண்டும், அதற்குரிய ஆற்றல் எனக்கு வேண்டுமென்று கேட்கும் போது இந்தத் தமிழ் நாட்டுப் பண்பாட்டின் சிகரத்தை அடைந்துவிடுகிறார் வள்ளற்பெருமான்.

உயிர்கள் தத்தம் வினைக்கு ஏற்ப நன்மை தீமைகளை அனுபவிக்கின்றன. இதில் நாம் ஒன்றும் செய்வதற்கில்லை என்ற கொள்கை தமிழகத்தில் தொன்று தொட்டே இருந்து வருகிறது. புறநானூற்றில், தீதும் நன்றும் பிறர்தர வாரா (புற—192) என்று கணியன் பூங்குன்றன் பாடுவதும் இக்கருத்தின் அடிப்படையிலேயே ஆகும். உயிர்க்கு உறுகண் செய்யாமை அற்றே தவ (குறள்) என்று தான் வள்ளுவனும் பாடினான். பிறருடைய துயரை தன்நோய் போல் போற்ற வேண்டும் என்ற அளவில்தான் தமிழர் கொள்கை இருந்ததே தவிர 19ஆம் நூற்றாண்டு முடிய அதற்கு மேல் சென்றதாகத் தெரியவில்லை. ஆழ்வார்கள், நாயன்மார்கள் தனிப்பட்டவர்களின் துயரத்தைப் போக்கினார்களே தவிர, உலகம் முழுவதற்கும், உயிர்கள் அனைத்திற்கும் இதைச் செய்ய முன் வரவில்லை.

இந்த அடிப்படையிலிருந்து முற்றிலும் மாறுபட்டு எல்லா உயிர்களின் துன்பத்தையும் போக்க ஒரு வரம் வேண்டும் என்கிறார் வள்ளலார். அவரை அடியொற்றி வந்த மகாகவி சுப்பிரமணிய பாரதி இதே போன்று ஒரு வரத்தை விநாயகப் பெருமானிடம் கேட்பதை அவன் கவிதைகளில் காண முடிகிறது.

மண்மீதுள்ள மக்கள், பறவைகள்,
விலங்குகள், பூச்சிகள், புற்பூண்டு, மரங்கள்–
யாவுமென் வினையா லிடும்பை தீர்ந்தே
இன்பமுற் றன்புட னிணங்கி வாழ்ந்திடவே
செய்தல் வேண்டும், தேவதேவா!
ஞானாகாசத்து நடுவே நின்று நான்
'பூமண்டலத்தில் அன்பும் பொறையும்
விளங்குக, துன்பமு மிடிமையு நோவுஞ்
சாவுநீங்கிச் சார்ந்த பல்லுயிரெலாம்
இன்புற்று வாழ்க' என்பேன்! இதனை நீ
திருச்செவிக் கொண்டு திருவுளமிரங்கி
'அங்ஙனே யாகுக' என்பாய், ஐயனே!
இந்நாள், இப்பொழுதெனக் கிவ்வரத்தினை
அருள்வாய் . . . . . . .

(விநாயகர் நான்மணி மாலை)

*வள்ளலாரையும், பாரதியையும் தோய்ந்து கற்று விரிவாகப் பேசுபவர்கள்கூட அவர்கள் எய்திய இந்த உயர்வான நிலையைப் பற்றி அறிந்து கொள்ளவில்லை என்றே தோன்றுகிறது. 2000 ஆண்டுகளாக தமிழகத்தில் ஊறியிருந்த ஒரு கொள்கையை ஏற்றுக்கொண்டு அதற்கு மேலே பலபடிகள் சென்று எல்லா உயிர்களின் துயரத்தைப் போக்கும் பணியைத்தான் செய்ய வேண்டும் என்று வடலூராரும், எட்டையபுரத்தாரும் கண்ட காட்சி தமிழ்ப் பண்பாட்டின் வளர்ச்சியில் ஒரு புதிய திருப்பம் என்பதை உணர வேண்டும். நாவரசர் பெருமான் என் கடன் பணி செய்து கிடப்பதே என்று கூறியதும், பாரதி, வள்ளலார் கூறியதும் ஒன்று அல்ல; வெவ்வேறானவை என்பதை நன்கு புரிந்து கொள்ள வேண்டும்.*

தமக்கென வாழா பிறர்க்குரியாளன்

என்று புறநானூறு பேசும். மனித குலத்திலே ஒப்பற்ற மகாத்மாவாக இருப்பவன் யார் என்றால் தனக்கென வாழா பிறர்க்குரியாளனாக, இருபத்துநான்கு மணி நேரமும் பிறருக்காக வாழ்கின்றவனைத்தான் இந்தத் தமிழச் சாதி போற்றிற்று. அப்படி பிறருக்காக வாழ்ந்தவர் கள் கூட ஓர் அளவில் நின்றுவிடுகிறார்கள். அதற்குமேல் ஒருபடிசென்று ஆண்டவனைப் பார்த்து இந்தத் துன்பத்தைப் போக்க வேண்டுமென்று கேட்கின்றனர் ஞானசம்பந்தரைப் போன்றவர்கள். ஏதோ ஒரு பெண் கணவனை இழந்து வருந்துகிறார் என்றால் ஆண்டவனிடம் சென்று,

**சடையா யெனுமால் சரண்நீ யெனுமால்**
**விடையா யெனுமால் வெருவா விழுமால்**

என்று கேட்கின்றார். அந்தத் துன்பத்தைப் போக்க வேண்டுமென்று ஞானசம்பந்தர் வேண்டுகிறார். ஏழாம் நூற்றாண்டிலிருந்து 19ஆம் நூற்றண்டில் ஏற்பட்ட வளர்ச்சி வள்ளற்பெருமானின் இந்த அற்புதமான பாடலில் தெரிகின்றது. ஒவ்வொன்றுக்கும் இறைவனிடத்தில் சென்று அவர்களுடைய துன்பத்தைப் போக்க வேண்டுமென்று மன்றாடுவதைக் காட்டிலும் — அதிகார பத்திரம் என்று சொல்கிறோமே அதுபோல 'எனக்கு ஒரு அதிகார பத்திரம் தந்துவிடு ஐயா' என்று ஆண்டவனைப் பார்த்துக் கேட்கின்றார்.

ஆண்டவனே அண்டகோடிகளை எல்லாம் படைத்துக் காக்கின்ற உனக்கு எத்தனையோ பணிகள் இருக்கும். இந்தச் சிறு பணிக்கு என்னை அதிகாரி ஆக்கிவிடு. உன்னுடைய திருவருள் பலத்தால் (இங்கே அகங்காரம் இல்லை என்பதை மறந்துவிடக்கூடாது)

**நின்னருள் வலத்தால் இசைத்தபோ திசைத்தபோதல்லாம்**
**நண்ணும் அவ்வருத்தும் தவிர்க்கும் நல்வரந்தான்நல்குதல்.**

*உன் திருவருள் வன்மையினாலே நினைத்தபோதெல்லாம் இந்தத் துன்பத்தைப் போக்கக் கூடிய வர பலம் வேண்டும் என்று கேட்கின்றார் என்றால் வள்ளலார் வகுத்த வாழ்க்கை நெறியில் குறிப்பாக புதிய ஒரு கட்டத்தை இங்கே காணுகின்றோம்.*

*இதற்கு அடுத்தபடியாக மக்களிடத்தில் எத்தகைய குணக்கேடுகள் இருந்தன என்பதை இருபதாம் நூற்றாண் டில் வாழ்கின்ற நாம் மட்டுமல்ல 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இந்தப் பெருமகனாரும் அறிந்திருந்தார் என்பதை இந்தப் பாடல் அறிவுறுத்துகின்றது.*

**நடுநிலை இல்லாக் கூட்டத்தைக் கருணை**
**நண்ணிடா அரையரை நாளும்**
**கெடுநிலை நினைக்கும் சிற்றதி காரக்**
**கேடரைப் பொய்யலால் கிளத்தாப்**
**படுநிலை யவரைப் பார்த்தபோ தெல்லாம்**
**பயந்தனன் சுத்தசன் மார்க்கம்**
**விடுநிலை உலக நடை எலாங்கண்டே**
**வெருவினேன் வெருவினேன் எந்தாய்.**

(திருஅருட்பா–**3474)**

*சிற்றதிகாரி என்றால் குட்டி அதிகாரிகள். அவர்களிடத்தில் நடுநிலை இல்லை — அவர்கள் கையில் அதிகாரம் இருக்கிறது. அதிகாரம் அதனையுடையவனை அழிக்கும்; முழு அதிகாரம் முழுவதுமாக அழித்துவிடும் என்று ஆக்டன் பிரபு சொன்னதுபோல நடுநிலை இல்லாக் கூட்டத்தார் கருணை என்பதே இல்லாதவர்கள்—இவர்கள் கையில் சிற்றதிகாரம் கிடைத்துவிடுமேயானால் சமுதாயம் படுகின்ற பாடு கொஞ்சநஞ்சம் அன்று. இருபதாம்*

நூற்றாண்டில் வாழ்ந்து கொண்டிருக்கிற நாம் இதனை அன்றாடம் அநுபவித்துக் கொண்டிருக்கிறோம். தகுதியும், பண்பாடும், கருணையும், நடுநிலையும் இல்லாதவர்கள் கையில் அதிகாரம் கிடைத்துவிட்டால் அதனால் மக்கள் கூட்டம் படுகின்ற துயரத்திற்கு எல்லையே இல்லாமல் போய்விடும். இதனை 19ஆம் நூற்றாண்டிலேயே நினைத்துப் பார்க்கின்றார் வள்ளற்பெருமான். இப்படிப் பட்ட மக்கள் கையில் அதிகாரம் கிடைத்தால் அவர்கள் படுத்துகின்ற பாட்டை நான் நன்றாக அறிகின்றேன். 'ஐயா' இவர்களைப் பார்த்தபோதெல்லாம் அஞ்சினேன்—அங்கே துயரத்தைக் கண்டு வருந்தினேன் என்றவர் இங்கே அஞ்சினேன் என்று சொல்ல வேண்டிய அவசியம் என்ன? அதிகாரிகளைக் கண்டு அஞ்சிவிட்டாரா? இல்லை. அச்சம் என்பது இந்தப் பெருமக்களுடைய வரலாற்றிலேயே இல்லை. அதனாலே அஞ்சினேன் என்று சொல்வதற்குரிய கருத்தென்ன? இவர்களைப் படைத்து இவர்கள் கையில் அதிகாரம் சிக்குமாறு செய்தவன் இறைவன் அல்லவா என்று நினைக்கும் பொழுது அச்சம் தோன்றுகிறது. இந்தக் கொடியவனை இறைவனே படைத் திருக்கிறான். ஆகையால் தான் ஒன்றும் செய்ய முடியாது என்று நினைத்து அஞ்சினேன் என்று சொல்கிறார். ஆகவே மிகப் புதிய வழியில் அவர் செல்வதை நாம் காண முடிகிறது. இனி உலகியல் முறையில் மக்கள் பசியைப் போக்க வேண்டுமென்ற ஒரு முடிவுக்கு அவர் வருகிறார். ஆன்மிக முறையில் விக்கிரக வழிபாட்டை விட்டு வளர்ந்து வளர்ந்து சென்று ஆறாவது திருமுறையை பாடத் தொடங்கும் பொழுது மிகப்பெரிய வளர்ச்சியைப் பெற்று விடுகின்றார். அங்கே என்ன முடிவுக்கு வருகின்றார்?

இதுவரையில் சம்பிரதாயமாகக் கற்ற சாத்திரங்கள், நூல்கள் முதலியன எல்லாம் குறுக்கே நிற்கின்றன.

கோயிலுக்குச் சென்றால் இந்த முறையில் வழிபட வேண்டும். இன்ன பிரசாதங்கள் படைக்க வேண்டும். இன்ன பூவினால் வழிபட வேண்டும் என்றெல்லாம் எழுதி வைத்து உண்மையான பக்தி என்பதற்கு அங்கே இடமே இல்லாமல் செய்துவிட்ட ஒரு சூழ்நிலை 19ஆம் நூற்றாண்டில் பரிபூரணமாக நிலவியிருந்தது.

கோயில்கள், ஏசுபெருமான் காலத்தில், இருந்தது போல கயவர்களுடைய இருப்பிடமாகவும், வாணிக தலமாகவும் மாறிவிட்டதால் சிதம்பரத்தில் அவர் கண்ட காட்சியால் அவருடைய மனம் துடித்தது. மாபெரும் சமய தத்துவத்தை அறிந்த பெருமகனார், இன்று நடைபெறு கின்ற நடைமுறையைப் பார்த்தபோது என்ன செய்வது என்று தெரியாமல் தவிக்கின்றார். உடனே அவரையும் அறியாமல் ஒரு சினம் ஏற்படுகின்றது. சாத்திரங்கள் என்று எழுதி வைத்து, இவற்றை நடைமுறையில் கொண்டுவர வேண்டுமென்று விரும்பிய சமுதாயத்தை நினைந்து வருந்துகின்றார். இதைக் குப்பை என்று ஒதுக்க வேண்டும். உண்மையாக இறைவனிடத்தில் ஈடுபாடு ஏற்படுமே யானால் உனக்கும் அவனுக்குமுள்ள தொடர்பை நீ அறிந்து கொள்ள முடியுமேயானால் இந்தச் சாத்திரக் குப்பை தேவையே இல்லை. இறைவன் உள்ளத்தின் உள்ளே உறைகின்றான். எல்லா உயிர்களிலும் அவன் இருக்கின்றான். ஆகவே அவனுக்கும் நமக்குமுள்ள தொடர்பு என்ன என்பதை அறிந்துகொள்ளக் கூடிய இயைபு கிடைத்துவிடுமேயானால் சாத்திர சம்பிரதாய மான வழிபாட்டு முறைகள் தேவையில்லை என்ற ஒரு மிகப் பெரிய கருத்தை இங்கே பேசுகின்றார்.

சாத்திரங்கள் என்ற பெயரில் எழுதி வைக்கப் பெற்றவை அறிவின் துணைக்கொண்டு எழுதப் பெற்றவை யாகும். அவை மனிதனுடைய புறவாழ்வும் இந்த உடம்பும்

செம்மைபடுவதற்காக எழுதப்பெற்ற கைகாட்டி மரங்களாகும். உணர்வு மூலம் அடையப்பட வேண்டிய இறை அனுபவத்தை சாத்திரங்கள் சடங்குகள் என்ற கைகாட்டி மரங்கள் என்றும் தரமாட்டா. வள்ளலாருக்கு 1300 ஆண்டுகள் முன்னர் தோன்றிய நாவரசுப் பெருமான் இவற்றை கடுமையாகச் சாடுகிறார்.

> **"சாத்திரம் பலபேசும்சழக்கர்காள்**
> **கோத்திரமும் குலமும் கொண்டு என்செய்வீர்**
> **(திருமுறை—5,60,3)**

என்றும்,

> **" . . . . . .**
> **பொக்கம் மிக்கவர் பூவும் நீருங்கொண்டு**
> **நக்கு நிற்பர் அவர்தமை நாணியே**
> **(திருமுறை—5,90,8)**

என்றும்,

> **வேதம் ஓதில் என்? வேள்விகள் செய்யில் என்**
> **நீதிநூல் பல நித்தம் பயிற்றில் என்**
> **(திருமுறை—5,99,4)**

என்றும்,

> **கங்கை ஆடில் என் காவிரி ஆடில் என்**
> **(திருமுறை—5,99,2)**

என்றும் பாடிச் செல்வது ஆறாம் நூற்றாண்டில் கூட இந்தச் சாத்திரங்களும் பைத்தியக்கார நம்பிக்கைகளும் தமிழ் மக்களை திசை மாற்றிவிட்டன என்பதை அறிய முடிகிறது. அன்று தொடங்கிய இந்தத் திசைத் திருப்பும் படலம் இன்றும் நம்மிடையே இருந்து வருகின்றது என்பதை நாம் காண்கிறோம். நம் காலத்தில் வாழ்ந்தவரும்

புதுவையில் குள்ளச்சாமி என்ற சித்தரிடம் உபதேசம் பெற்றவருமாகிய கவிச்சக்கரவர்த்தி பாரதி இந்த சாத்திரங்கள் முதலானவற்றை எவ்வாறு சாடுகிறார் என்பதைப் பின்வரும் பாடல் நன்கு விளக்குகிறது.

**சாத்திரங் கோடி வைத்தாள் – அவை**
**தம்மினு முயர்ந்ததோர் ஞானம் வைத்தாள்**
**பீத்திடும் பொழுதினிலே – நான்**
**வேடிக்கை யுறக் கண்டு நகைப்பதற்கே**
**கோத்த பொய் வேதங்களும் – பகக்**
**கொலைகளும் அரசர்தம் கூத்துக்களும்**
**மூத்தவர் பொய்ந் நடையும் – இள**
**மூடர்தம் கவலையு மவள் புனைந்தாள்**
**(கண்ணன் தாய்–9)**

மேலே காட்டிய உதாரணங்கள் ஓர் உண்மையை நன்கு விளக்குகின்றன. இறை உணர்வை பெறுவதற்கு சாத்திர சம்பிரதாயங்கள் சடங்குகள் என்பவை என்றுமே தடையாக இருந்தன; இருக்கின்றன என்பதை பலர் அறிந்து இருப்பினும் மிகத்துணிவோடு அதை எடுத்து கூறியவர்கள் நாவரசர், வள்ளலார், பாரதி ஆகிய மூவருமே ஆவர்.

இதனை இவ்வளவு விளக்கமாக சொல்லாவிட்டாலும் குறிப்பாக கண்ணப்பர் புராணத்தில் நுணுக்கமாக, சேக்கிழார் வெளியிடுகிறார். ஆகம ரீதியில் இறைவழிபாடு செய்த சிவகோசரியார் இறைவனைக் காணும் பேறு பெறவில்லை. சாத்திர வாடையே அறியாத திண்ணனார் ஆறே நாளில் இறைவனை நேரே காணும் பேறு பெற்றார். ஆகம சாத்திர வழியில் வழிபாடு செய்த திருநீலநக்கர் ஸ்தூல லிங்கத்தை வழிபட்டாரே தவிர இறைவனைக் காணவில்லை. சாத்திரத்தை சட்டை செய்யாத அவர் மனைவியார் திருலிங்கத் திருமேனி மேல் எச்சில்பட ஊதுவதன் மூலம் இறை காட்சி பெற்றார்.

எனவே வள்ளலார் புதுமை புகுத்தவில்லை, மறைந்து போன பழைய உண்மைகளை வெளிக் கொணர்ந்து மிக்க தைரியத்துடன் வெளிப்படுத்தினார் என்று சொல்வதில் தவறு இல்லை.

இதுதான் வள்ளலாரைப் பொறுத்த மட்டில் மிகப் பெரிய பிரச்சினைக்கு இடமாக ஆகிவிட்டது. 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சைவப் பெருமக்கள்—ஆறுமுக நாவலர் போன்றவர்கள் அந்தப் பழமையில் ஊறி, அந்த ஆகம வழிபாட்டு முறையில் தான் வழிபாடு செய்ய வேண்டுமென்று நினைத்தார்கள். சைவ வினாவிடை என்ற நூலை அவர் எழுதியிருக்கின்றார். அதைப் பார்ப்போமே யானால் சிறிய சிறிய காரியங்களுக்கெல்லாம் அவர்கள் எவ்வளவு பெரிய மதிப்பைத் தந்தார்கள் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது. திருநீற்றுப் பையினுடைய அகலம் எவ்வளவு இருக்க வேண்டும் என்பதை மிகப் பெரிதாகப் பேசுகின்றார் நாவலர். கிரியைகள் அல்லது சடங்குகள் ஆகியவற்றை செய்வதன் மூலமே பக்தியை வளர்க்க முடியும் என்று கருதினார்கள். அந்த வழிமுறை பயன்பட வில்லை என்பதை 19ஆம் நூற்றாண்டில் காணுகிறார் வள்ளற்பெருமான். இவற்றுக்கு முக்கியத்துவம் கொடுக்க ஆரம்பித்தால் அடிப்படை மறைந்து போய்விடும். ஆகவே இவற்றை ஒதுக்கினாலொழிய வேறு வழியே இல்லை என்பதை மிக அற்புதமாகக் கண்டு அவற்றுக்கு அடிப் படையாக இருக்கின்ற விக்கிரக வழிபாட்டையும் மெல்ல தவிர்க்கத் தொடங்குகிறார் என்பதை அறிய முடிகிறது.

**வேதநெறி ஆகமத்தின் நெறிபவுரா ணங்கள்**
**விளம்புநெறி இதிகாசம் விதித்தநெறி முழுதும்**
**ஓதுகின்ற சூதனைத்தும் உளவனைத்தும் காட்டி**
**உள்ளதனை உள்ளபடி உணரஉரைத் தனையே**
**(திருஅருட்பா—3767)**

இந்த நெறியினில் உள்ள சூது இருக்கிறதே—அதாவது வெறும் கார்மிகம் என்ற கடமைகளை அல்லது சில கிரியைகளைச் செய்கின்ற இவற்றையே வழிபாட்டுமுறை என்று நினைத்துவிட்டார்கள். இறைவனை வழிபடுவதற்கு இவை வழிகளே தவிர இவையே அனைத்தும் என்று நினைக்கின்ற நினைவு தவறு. ஆனால் அப்படி நினைத்தவர்கள் உண்டு. தாருகாவனத்து முனிவர்களைப் பொறுத்த மட்டில் கார்மிகள். ஆகையினாலே இந்தக் கடமைகளைச் செய்தால் அதுவே பயன்களைத் தந்து விடும். இறைவன் என்ற ஒருத்தன் தேவையே இல்லை என்று சொல்லுகின்ற அளவுக்கு வளர்ந்துவிட்ட இந்தச் சமுதாயம் 19ஆம் நூற்றாண்டைப் பொறுத்தமட்டிலும் வேதாந்திகள் ஒருபுறம்—சித்தாந்திகள் ஒருபுறம்—இஸ்லாமியர்கள் ஒருபுறம் — கிறிஸ்தவர்கள் ஒருபுறம் — இப்படிப் போராட்டம் பல்கி வளர்ந்துவிட்ட நிலையில் வள்ளற் பெருமான் வருகின்றார். இந்து சமயத்தைப் பொறுத்த மட்டில் கிரியைகள் ஆகியவற்றுக்கு முக்கியத்துவம் கொடுப்போமேயானால் பிற சமயங்கள் நம்மை அழித்து விடும் என்பதை அவர் தம் நுண்மையான மதியினால் கண்டுபிடித்து விடுகின்றார். விக்கிரக வழிபாட்டின் அடிப்படையை மீறாமல் பல்வேறு சிறு தெய்வ வணக்கங்கள் வளர்ந்துவிட்ட நிலை — அப்படிப்பட்ட சமுதாயம் எளிதாக பிற சமயங்களுடைய தாக்குதலுக்கு இரையாகிவிடும். ஆகவேதான் சிறு தெய்வ வணக்கங்களைச் சாடுகிறார். பலியிடுகின்றவர்களைச் சாடுகின்றார், இந்தக் கிரியைகள் செய்கின்றவர்களை எல்லாம் சாடுகின்றார்.

சமுதாயத்தைப் பொறுத்த மட்டில் என்ன நினைத்தார்? மறந்துவிட்டாரா? இல்லை. அற்புதமாகப் பாடுவார்.

**அப்பா நான் வேண்டுதல் கேட்டருள் புரிதல் வேண்டும்**
**ஆருயிர்கட் கெல்லாம் நான் அன்புசெயல் வேண்டும்**
**(திருஅருட்பா—4079)**

*என்று சொல்லுகின்ற பாடல். அடுத்தபடியாக அத்தனை பாடல்களையும் ஒன்றாக இணைக்கின்ற பாடல்,*

**எத்துணையும் பேதமுறா தெவ்வுயிரும்**
**தம்உயிர்போல் எண்ணி உள்ளே**
**ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்**
**யாவர்அவர் உளந்தான் சுத்த**
**சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்**
**இடம்எனநான் தெரிந்தேன் அந்த**
**வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திடஎன்**
**சிந்தை மிக விழைந்த தாலோ.**
**(திருஅருட்பா—5297)**

*என்று சொல்கிறார். ஆகவே எத்துணையும் பேதமுறாது நடப்பதுதான் மனித சமுதாயத்திற்குத் தேவை என்பதைச் சொல்கிறார்.*

*19ஆம் நூற்றாண்டில் இவரை அடுத்து வந்த பாரதியும் இதே கனவைக் காணுகின்றார் என்பதை நினைக்கும் போது ஆச்சரியமாக இருக்கிறது.*

**நாட்டுமக்கள் நலமுற்று வாழவும்**
**நானி லத்தவர் மேனிலை எய்தவும் (பராசக்தி—3)**

*இந்த இரண்டு கருத்துக்களும் வள்ளற்பெருமான் கருத்தோடு ஒன்றியிருப்பதைக் காணுகின்றோம்.*

*சில தத்துவங்களை அடிப்படையாக் வைத்து கதைகள் இயற்றியிருப்பார்கள். ஓங்கார வடிவினனாகிய விநாயகப் பெருமானைக் கூட ஏதோ போகின்ற யானையின் கழுத்தை வெட்டிக்கொண்டு வந்து வைத்தார்கள் என்று*

பௌராணிகர்கள் கதை சொல்லப் போக அதையே உலகம் நம்புகின்ற அளவுக்கு கீழ்த்தரமாக வந்து விட்டது. இவற்றை எல்லாம் பார்த்ததினாலேதான்,

**கலையுரைத்த கற்பனையே நிலைஎனக்கொண் டாடும்**
**கண்மூடி வழக்கம்எலாம் மண்மூடிப் போக**
**மலைவறுசன் மார்க்கம்ஒன்றே நிலைபெறமெய் உலகம்**
**வாழ்ந்தோங்கக் கருதியருள் வழங்கினைஎன் றனக்கே**
**(திருஅருட்பா–3768)**

என்கிறார். கலை உரைக்கின்ற கற்பனை எல்லாம் மெய் என்று நினைக்கின்ற சமுதாயத்தைப் பார்த்து அது ஒழிய வேண்டுமென்று பேசுகிறார். இத்தனை முடிவுகளையும் திருச்சிற்றம்பலத்தே எனக்கருளி இசைவித்தாய் என்பதாகக் கூறியவர், எல்லாச் சமயங்களும் ஒன்றுதான் என்ற முடிவுக்கு வருகிறார். சமயமும், மதமும் கடந்ததோர் ஞானசபை என்று, சமயம், மதம் என்பவற்றையெல்லாம் கடந்து நிற்கின்ற நிலையை ஒருவாறு பெறுகிறார் பெருமான்.

இவ்வுலகில், எவ்வெவர்க்கும் அரும்பெரும் சோதியாய் நிற்பவனே இறைவன் என்பதை அறிந்தேன். அது போதுமானது. அது தெரிந்துவிட்ட பின்னர் கவலைப்பட வேண்டிய தேவையே இல்லை. பிறசமயவாதிகள் எல்லாம் யானை கண்ட குருடர் போல ஒவ்வொரு பகுதியை எடுத்து வைத்துக் கொண்டு இதுதான் தங்கள் சமயம் என்று பேசுகிறார்கள். அது தேவையில்லை என்று பேசுகின்றார்.

இதற்கடுத்தபடியாக முழுவதுமாக ஒரு புதிய வழியை வகுக்கின்றார். பல நேரங்களில்—இந்த சமயத்தை ஆராய்கின்றார். இஸ்லாமிய சமயம், கிறிஸ்துவ சமயம், சைவம், வைணவம், அத்வைதம் முதலானவற்றை எல்லாம்

நினைந்து பார்த்து இவற்றுக்கெல்லாம் ஒரு பொதுத் தன்மை இருக்கிறதா, இவற்றை ஒருங்கிணைக்க முடியுமா என்ற ஆராய்ச்சியில் ஈடுபடுகின்றார். எல்லாச் சமயங் களையும் ஒருங்கிணைக்கும் முயற்சியில் இவருக்கு முன்னர் ஒரு பெரியார் ஈடுபட்டார். அவர் இவருக்கு முன்னர் 17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தாயுமானவப் பெருந்தகை. அக்காலத்திலிருந்த வேதாந்தம், சித்தாந்தம் ஆகிய இரண்டையும் மட்டுமே ஒருங்கிணைக்க முயன்று,

**வேதாந்த சித்தாந்த சமரச நன்நிலை பெற்ற,**
**வித்தகச் சித்தர்கணமே**

என்று பாடினார். இனி வள்ளற்பெருமான் தாயுமான வர்க்கு மூன்று நூற்றாண்டுகளுக்குப் பிற்பட்டு வருவத னால், அவருடைய காலத்தில் வெளிநாட்டில் இருந்து வந்த சமயங்களும் இங்கு நிலைபெற்றுவிட்ட காரணத் தினால், அவற்றையும் ஒருங்கிணைக்க முயன்றார். அந்த முயற்சியின் பயன் அற்புதமாகக் கிடைக்கின்றது.

எல்லாச் சமயங்களிலும் சொல்லப்படுகின்ற சடங்கு களையெல்லாம் தள்ளிவிட்டு அடிப்படைத் தத்துவத்தைப் பார்ப்போமேயானால் ஓர் உண்மை விளங்கும். தாயுமானவர் சொல்லுவார்,

**“வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்**
**விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லால்**
**மாறுபடுங் கருத்தில்லை முடிவில் மோன**
**வாரிதியில் நதித்திரள் போல் வயங்கிற்றம்மா**

**(தாயு:கல்லா–25)**

என்ற அந்தத் தாயுமானவப் பெருந்தகையின் கருத்தை வாங்கிக் கொண்ட வள்ளற்பெருமான் ஒரு முடிவுக்கு வருகின்றார். எல்லாச் சமயவாதிகளும் ஒன்றை ஒத்துக் கொள்கிறார்கள். அவர்களால் இறைவன் என்று குறிக்கப்

படும் பொருள் ஒளிவடிவானது என்பதை யாரும் மறுப்பதற்கில்லை. அதேபோல எல்லாச் சமயவாதிகளும், இறைவன் என்று அவர்கள் எந்தப் பொருளைச் சொல்லு கிறார்களோ அது கருணை வடிவானது என்பதை ஒத்துக் கொள்கிறார்கள். விக்கிரக வழிபாடு வேண்டுமென்று சொல்லுகிறவர்கள், வேண்டாம் என்று சொல்லுகிறவர்கள், கூடவே கூடாது என்று சொல்கிறவர்கள், பொருள் ஒன்றே என்று சொல்லுகிறவர்கள் அத்தனை பேரும் அந்த ஒரு பொருள் ஒளிவடிவானது என்பதை மறுப்பதே இல்லை. அதேநேரத்தில் குறிகுணம் இல்லாததாகிய அந்தப் பொருளுக்கு ஏதாவது ஒரு குணத்தைக் கற்பிக்க வேண்டு மென்றால் அது கருணையே வடிவானது என்பதை இவர் கள் யாரும் மறுப்பதில்லை. ஆக இத்தனை சமயங்களை யும் புகுந்து பார்த்த வள்ளற்பெருமான் பொதுத்தன்மை என்று இரண்டை வெளியே எடுத்துக் கொள்கிறார். ஒளி, கருணை என்ற இரண்டும் எல்லாச் சமயவாதிகளும் ஏற்றுக் கொள்கின்ற கடவுள் இலக்கணம் ஆகும். ஆகவே கடவுள் என்று பெயர் சொன்னாலோ, சிவன் என்று பெயர் சொன்னாலோ, திருமால் என்று பெயர் சொன்னாலோ, பிதா என்று பெயர் சொன்னாலோ அல்லா என்று பெயர் சொன்னாலோ குறிப்பிட்டவர் களைச் சார்ந்துவிடும். அப்படிச் சொல்லாமல் ஏதோ ஒரு அடிப்படையில் இத்தனை பேரையும் ஒருங்கிணைக்க ஒரு மாபெரும் முயற்சியைத் தொடங்கி,

**அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி**
**தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி**

என்ற ஒரு தாரக மந்திரத்தை வாழ்க்கை நெறியாக வகுத்துக் கொடுத்தார். இது புதிதல்ல. ஒளி என்று சொல்லுவது திருமுருகாற்றுப்படைக் காலத்தில் இருந்தே வருகிறது.

**உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு பலர்புகழ் ஞாயிறு**

என்று நக்கீரர் தொடங்கினார். ஒளிவடிவாக ஆண்டவனை,

**சோதியே சுடரே சூழ்ஒளி விளக்கே**

என்று மாணிக்கவாசர் பேசினார்.

**ஒளிவளர் விளக்கே உலப்பிலா, ஒன்றே**

என்று திருவிசைப்பா ஆசிரியர் பேசுவார். ஒளி என்பது எல்லோரும் ஏற்றுக் கொண்டதுதான். அதைப் பொதுத் தன்மையுடையதாக இங்கே வெளியே எடுத்து **"சோதி"** என்று சொன்னார். ஒளிக்கு இலக்கணம் வகுக்கின்ற முறையில் ஏதாவது குறிப்பிட்டார்களா என்றால் முன்னர் கூறிய கருத்தை தாயுமானவர் ஒளி என்பதனோடு அதில் கருணையையும் சேர்க்கின்றார்.

**எங்கும் பிரகாசமாய் . . . அருளொடு நிறைந்தது**

என்று சொல்லும்பொழுது, அந்த ஒளி அருளொடு நிறைந்தது என்ற கருத்தை விரிவாக கூறுகின்றார். அதில் ஈடுபட்டவராகிய வள்ளற்பெருமான் சோதி என்று சொல்லும் பொழுது அந்தச் சோதிக்கு கருணை என்ற குணத்தை ஏற்றி அருட்பெருஞ்சோதி என்று கூறுகிறார். ஆகவே எல்லாச் சமயத்தார்களும் தாங்கள் கருதும், இறைப் பொருளை சோதி வடிவானது என்று சொல்லுகிறார்கள், கருணை வடிவானது என்றும் சொல்லுகிறார்கள். ஆகவே அந்தத் தாரக மந்திரத்தை இவர் ஆக்கித் தரும்போது கடவுள் என்ற தனிப்பட்ட பெயரைச் சொல்லாமல்,

**அருட்பெருஞ்சோதி தனிப்பெருங் கருணை**

என்று சொல்லிவிட்டால் அது எல்லாச் சமயத்தாரும் ஏற்றுக் கொள்ளக் கூடிய ஒன்றாக அமையும் என்கிற

மாபெரும் முடிவுக்கு வந்து, அவருடைய வாழ்க்கை நெறியில் இந்தத் தாரக மந்திரத்தைத் தந்தார். அப்படியானால் சிவபெருமானையும், முருகனையும் வழிபட்ட பெருமான், விபூதி இடாதவர்களைக் கனவிலும் கூடக் காணக்கூடாது என்று தொடங்கிய பெருமான் வளர்ச்சி யடைந்து அருட்பெருஞ்சோதியில் முடிகின்றார். அவருடைய வாழ்வில் ஏற்பட்ட இந்தப் புதிய திருப்பத்தை அன்றையச் சமுதாயம் ஏற்றுக் கொண்டதா என்பது சிந்தனைக்குரியது.

ஆறாம் திருமுறையில் அகத்துறையில் அமைந்த பாடல் ஒன்றில் பின்வருமாறு கூறுகின்றார். ஒரு பாதி தோழியும்—ஒரு பாதி தலைவியும் சொல்வதாக அமைந்து உள்ளது அப்பாடல். முதல் பாதியில் தோழி 'உன்னுடைய தலைவன் பெயர் என்ன?' என்று கேட்கிறாள் அதற்கு அற்புதமாக தலைவி விடை கூறுகிறாள்.

**பெருகியபே ரருளுடையார் அம்பலத்தே நடிக்கும்**
**பெருந்தகைஎன் கணவர்திருப் பேர்புகல்என் கின்றாய்**
**அருகர்புத்த ராதிஎன்பேன் அயன்என்பேன் நாரா**
**யணன்என்பேன் அரன்என்பேன் ஆதிசிவன்என்பேன்**
**பருகுசதா சிவம்என்பேன் சத்திசிவம் என்பேன்**
**பரமம்என்பேன் பிரமம்என்பேன் பரப்பிரமம்என்பேன்**
**துருவுசுத்தப் பிரமம் என்பேன் துரியநிறை வென்பேன்**
**சுத்தசிவம் என்பன் இவை சித்துவிளை யாட்டே,**
**(திருஅருட்பா–5801)**

இது என்ன வேடிக்கை? இவை எல்லாம் புறச் சமயத்தார்களுடைய பெயர்கள் அல்லவோ? என்று தோழி கேட்கிறாள். இல்லை. பிற சமயம் என்று இஸ்லாம்— கிறிஸ்துவத்தைக் கூட ஒன்றாக்கிக் கொண்டு எந்தப் பெயரைச் சொன்னாலும் அது என்னுடைய தலைவனுடைய பெயர் தான்.

**சிற்சபையில் நடிக்கின்ற நாயகனார் தமக்குச்**
**சேர்ந்தபுறச் சமயப்பேர் பொருந்துவதோ என்றாய்**
**பிற்சமயத் தார்பெயரும் அவர்பெயரே கண்டாய்**
**பித்தர்என்றே பெயர்படைத்தார்க் கெப்பெயர்ஒவ்**
**வாதோ**
**அச்சமயத் தேவர்மட்டோ நின்பெயர்என் பெயரும்**
**அவர்பெயரே எவ்வுயிரின் பெயரும்அவர் பெயரே**
**சிற்சபையில் என்கணவர் செய்யும்ஒரு ஞானத்**
**திருக்கூத்துக் கண்டளவே தெளியும் இது தோழி.**
**(திருஅருட்பா—5802)**

*என்று கூறுகின்ற முறையில் ஓர் அற்புதத்தைச் செய்து காட்டுகிறார். இதோடு நிறுத்திக் கொள்ளாமல் ஒரு பகுதியை அதோடு சேர்க்கிறார்.*

*இவ்வளவு உயர்ந்த பொருள், அனைவருமே ஒத்துக் கொள்ளக்கூடிய ஒன்றைக் கண்ட பிற்பாடு அந்தப் பொருளை நாம் எப்படி அணுக வேண்டும் என்பதற்கு வழிவகுக்க வேண்டும். அதுவும் வள்ளற்பெருமான், பாரதி இந்த இரண்டு பேருமே நாட்டு மக்கள் நலமுற வாழ வேண்டும், நானிலத்தவர் மேனிலை எய்தவும்—தமக்கே உரிய முறையில் சொல்கிறார். இதுவரை சொன்னதுபோல இந்தப் பொருளைப் பற்றிச் சொல்லும் போது அது,*

**"நிர்க்குண நிராமய நிரஞ்சன நிராலம்ப"**

*என்றால் மக்களுடைய மனம் ஈடுபடாது. ஆகவே மிக உயர்ந்ததாகிய அந்தப் பொருளை நம்முடைய கைக்குக் கொண்டு வருகிற வகையிலே அன்புடைய பொருளாக,*

**அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே**
**அன்பெனும் குடில்புகும் அரசே**
**அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே**
**(திருஅருட்பா—3269)**

*என்று சொல்லுவார்.*

**அன்பு சிவம் இரண்டென்பர் அறிவிலார்**

*என்று திருமூலர் தொடங்கி வைத்தார். அவரை அடியொற்றி வந்த தாயுமானவப் பெருந்தகை, அவரை அடியொற்றி வந்த வள்ளற்பெருமான் 'அருட்பெருஞ் சோதி' என்ற தனிப்பட்ட ஒரு தாரக மந்திரத்தைத் தரும் போது, அதற்குரிய தொடர்பை நமக்குக் காட்டுகின்ற முறையில் அன்பு ஒன்றுதான் அந்தப் பொருளுக்கும் நமக்குமுள்ள தொடர்பு. அன்பு ஒன்றினால் அந்தப் பொருளை நம் கைக்குள் கொண்டு வந்துவிட முடியும் என்ற மாபெரும் கருத்தை அற்புதமாகப் பேசுகிறார். இதற்குமேல் இவை இரண்டும் ஆன்மிக அடிப்படையில் அமைந்ததாயிற்றே — சமுதாயத்தைப் பொறுத்த மட்டில் என்ன நினைத்தார் மறந்துவிட்டாரா? என்றால் இல்லை. மனிதனை அல்லாமல் இயங்கி இயல் உயிர்களாக உள்ள விலங்குகட்கு கூட தனி இலக்கணமாக அமைவது அன்பு ஒன்றுதான். அந்த அன்பே இறையின் இலக்கணம் என்ற முடிவுக்கு வந்த வள்ளலார் மனித சமுதாயத்தை எவ்வாறு மறக்க முடியும்? ஆக மனித சமுதாயத்திற்கு மட்டும் அல்லாமல் உயிர் வர்க்கம் அனைத்திற்கும் அன்பு செய்வதே இறைவனை அடையும் வழி என்ற முடிவுக்கு வந்து அதை விரிவாக இங்கே பேசுகின்றார்.*

**அப்பாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்**
**ஆருயிர்கட் கெல்லாம்நான் அன்புசெயல் வேண்டும்**
**எப்பாரும் எப்பதமும் எங்கணும்நான் சென்றே**
**எந்தைநின தருட்புகழை இயம்பியிடல் வேண்டும்**
**செப்பாத மேனிலைமேல் சுத்தசிவ மார்க்கம்**
**திகழ்ந்தோங்க அருட்சோதி செலுத்தியிடல் வேண்டும்**

**துப்பேது நான்செயினும் நீ பொறுத்தல் வேண்டும்**
**தலைவநினைப் பிரியாத நிலைமையும்வேண் டுவனே.**

(திருஅருட்பா–4079)

**ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும்**
**ஒருமைஉளர் ஆகிஉல கியல்நடத்தல் வேண்டும்.**

(திருஅருட்பா–4082)

*என்று சொல்கிற பாடல்கள் மேலே சொன்ன கருத்தை விளக்கும். இவரை அடுத்து வந்த பாரதி இதே கருத்தை காணி நிலம் வேண்டும் என்று தொடங்கும் பாடலில்,*

**பாட்டுத் திறத்தாலே இவ் வையகத்தைப்**
**பாலித்திட வேண்டும் பராசக்தி**

*என்று பாடுகின்றார்.*

*ஆக இந்த இரண்டு பெரியவர்களும் சமுதாய நோக்கத்தோடு பாடினார்கள் என்பதையும் அறிய முடியும். வள்ளற்பெருமான் ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட பாடல்கள் பாடியது அவருடைய பக்தியையோ, வளர்ச்சியையோ மட்டும் காட்டுவதற்காகப் பாடப்பட்டது என்று நினைப் போமேயானால் பெருந்தவறு இழைத்தவர்களாகிவிடு வோம். இந்தப் பெருமக்கள் பாடியதன் நோக்கம் இந்தப் பாட்டின் மூலமாக சமுதாயத்தை மாற்ற முடியும் என்ற கருத்தில்தான். அதையே வள்ளலாருக்குப் பின்னே வந்தவர் ஆகிய பாரதி இந்த இரண்டு பொருளையும் வைத்துக் கொண்டு நாட்டு மக்கள் நலமுற வாழவேண்டும். நானிலத்தவர் மேன்நிலை எய்தவும், அவர்கள் துன்பம் இல்லாமல் வாழவும் வேண்டும். ஆகையால் பாட்டுத் திறத்தாலே வையத்தைப் பாலித்திட வேண்டும் என்று சொல்கிறார். இதே கருத்தைத்தான் வள்ளற்பெருமானும்*

தம் ஐந்தாயிரம் பாடல்கள் மூலம் செய்திருக்கிறார் என்பதை அறிவோமானால் வள்ளற் பெருமான் கண்ட வாழ்க்கை நெறி என்ன என்பது தெரியும்.

வள்ளற்பெருமான் கண்ட வாழ்க்கை நெறி என்ன என்பதைச் சுருக்கிக் கூற வேண்டுமானால் மாறுபட்ட சமயங்களோடு வாழ்கின்ற இந்த மனித சமுதாயத்தில் எல்லாச் சமயங்களையும் எடுத்துச் சாராகப் பிழிந்து அனைவரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய முறையில்,

**அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி**
**தனிப்பெருங் கருணை அருட்பெருஞ்சோதி**

என்கிற ஒரு தாரக மந்திரத்தைத் தந்தார். மக்கள் இறைவனோடு தொடர்பு கொள்ள வேண்டுமேயானால் காடுகள் சென்று, கனசடை வைத்து பக்தி செய்ய வேண்டியதில்லை. அன்பு என்ற ஒன்றினாலேயே இறைவனை அடைய முடியும். ஆகவே, 'அன்பெனும் பிடியுள் அகப்படு மலையே' முதலான பாடல்களினால் இந்தத் தொடர்பு அன்புதான் என்பதைப் புதியதாகக் காட்டினார். அதற்கடுத்தபடியாக மனிதன் என்பவன் என்ன செய்ய வேண்டும் மக்கள் சமுதாயத்திற்கு என்றால்,

**ஆருயிர்களுக்கெல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்**
**எப்பாரும் எப்பதமும் எங்கணும்நான் சென்றே**
**எந்தைநின தருட்புகழை இயம்பிடல் வேண்டும்**

முதலான பகுதிகளைச் சொல்லும்போது என்ன செய்ய வேண்டும் தொண்டிற்கு, தொண்டு எப்படி நடைபெற வேண்டும் என்பதை அழகாக எடுத்துக் காட்டுகிறார். ஒத்தாரும் உயர்ந்தாரும் உலகில் நடக்க வேண்டும் என்று சொல்லும்போது வேறு பாடற்ற ஓர் அற்புதமான

சமுதாயத்தையும் படைக்க வேண்டும் என்று அவர் சொல்கிறார் என்றால், 19ஆம் நூற்றாண்டில் மிகப் பெரிய புரட்சியைச் செய்தவராகிய வள்ளற்பெருமான் சமயங் களினுடைய ஒருமைப்பாடு, சமயங்களுக்கும் மக்களுக்கு முள்ள தொடர்பு, மக்கள் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொள்ள வேண்டியது எது? என்ன பணியை மேற் கொள்ள வேண்டுமென்று அதி அற்புதமாகக் கூறுகிறார். வள்ளலார் வகுத்த வாழ்க்கை நெறி நமக்கு மட்டுமல்ல— இன்றைக்கு மட்டுமல்ல என்றைக்கும் மனித சாதி முழுவதும் பின்பற்ற வேண்டிய வாழ்க்கை நெறி என்பதை நன்றாக அறிய முடிகிறது.



# 11. சித்த யோகசுவாமிகள்

இந்த நாட்டைப் பொறுத்தவரை பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக சராசரி மனிதரிலும் பன்மடங்கு உயர்ந்து நின்ற மகாத்மாக்கள் பலருண்டு. ஒரு சிலர் பாடல்கள் மூலம் தாம் யாரென்பதை உலகிற்கு அறிவுறுத்தியுள்ளார்கள். திருமூலர், பாம்பாட்டிச் சித்தர், சிவவாக்கியர் போன்றவர்கள் தம் பாடல்கள் மூலம் மக்கள் சமுதாயத்திற்கு வழி காட்டியவர்கள் ஆவார்கள். இதன் எதிராக வேறுபல சித்தர்கள் தாங்கள் வாழ்கின்ற காலத்தில் தம்மை வந்தடையும் மக்களின் குறைகளைப் போக்கி நல்வாழ்வு வாழ வழி செய்தவர்கள் ஆவார்கள்.

யாழ்ப்பாணத்தில் நீண்டகாலம் வாழ்ந்து 1975 வாக்கில் வீடுபேறடைந்தவர் இச்சுவாமிகள். இவர் ஒரு தனிப்பட்ட இடத்தில், சிறிய குடிசையொன்றை அமைத்துக் கொண்டு அதனுள் இருந்து வந்தார். அந்தக் குடிசைக்குள் நுழைய வேண்டுமானால் யாராக இருந்தாலும் குனிந்து இடுப்பை வளைத்துக் கொண்டுதான் உள்ளே செல்லமுடியும். மீண்டும் வெளியே செல்வதும் இதே முறையிற்தான். அந்த நாட்டை ஆண்ட பிரதம மந்திரி முதல் ஆங்கிலேயர்வரை மிகப்பலர் சுவாமிகளிடம் அளவிலாத அன்பு பூண்டு வாழ்ந்தனர். சிங்களவர், இஸ்லாமியர், தமிழர், ஆங்கிலேயர்கள் என்ற எந்த வேறுபாடுமின்றி சுவாமிகளிடம் ஒவ்வொரு நாள் மாலையும் மக்கட் கூட்டம் திரண்டு நிற்கும். குடிசைக்குள் அதிகமாக நின்றால் பதினைந்து அல்லது இருபதுபேர் தான் நிற்கமுடியும். இவ்வாறு நிற்பவர்கள் தம்

வழிபாட்டை முடித்துக் கொண்டு வெளியே சென்றபிறகு தான் அடுத்த கூட்டம் உள்ளே நுழையமுடியும். ஒவ்வொரு வரும் காணிக்கையாக பழங்களை வாங்கி வந்து சுவாமி களின் திருவடிகளில் வைத்து வணங்குவார்கள். எந்த ஒன்றையும் சுவாமிகள் எடுத்து வாயில் போட்டதாக வரலாறு இல்லை.

குறைதீர்க்க வேண்டி வந்தவர்கள் வாய்விட்டுத் தம் குறைகளை சொல்லும் பழக்கமில்லை. எனவே பதினைந்து இருபது நிமிஷங்கள் ஒரு கூட்டம் உள்ளே நின்றாலும் ஒருவர்கூட வாய்திறந்து எதனையும் சுவாமிகளிடம் கூறியதில்லை. இந்த நடைமுறையின் பொருளை நான் தெரிந்து கொள்வதற்குச் சிறிதுகாலம் பிடித்தது. 1950 வாக்கில் முதன் முறையாக சுவாமிகளைத் தரிசிக்கும் பாக்கியம் கிடைத்தது. அதற்குமுன்னர் சுவாமிகளைப் பற்றி அதிகமொன்றும் தெரிந்துகொண்டதில்லை. முதன் முறையாக என்னை அழைத்துச் சென்றவர் வழக்கறிஞர் பணிபுரியும் ஓர் அன்பராவார். உள்ளே சென்று சுவாமி களை விழுந்து வணங்கிவிட்டு ஏனையோர்களுடன் நானும் நின்று கொண்டிருந்தேன். திடீரென்று சுவாமிகள், "எடே பொடியன் இங்காலை வந்திருக்கட்டும்'' என்று கூறிவிட்டு வலப்புறம் கையைக் காட்டினார்கள். என்னைத் தான் சுவாமிகள் குறிப்பிட்டார்கள் என்பதை அறியாத நான் பொடியன் என்று கூறியது யாரையென்று தெரியாமல் நின்று கொண்டிருந்தேன். சுவாமிகள் விரலினால் சுட்டிக்காட்டி "பொடியா! உன்னைத் தான்'' என்று கூறினார்கள். இப்பொழுது என்னை ஒரு பயம் கௌவிக் கொண்டது. சுவாமிகளிடம் நிற்பவர்கள் யாரும் எதிரே உட்காருவதில்லை என்பதைக் கேள்விப்பட்டிருக் கிறேன். அப்படியிருக்க நான் மட்டும் எப்படி அமர்வது என்று அஞ்சிநிற்கையில் கருணை நிறைந்த பார்வையோடு

"வா மகனே! இங்கே வந்து உட்கார்'' என்று கூறிவிட்டு வலக்கையால் அமரவேண்டிய இடத்தையும் தொட்டுக் காட்டினார்கள். அன்று முதல் எத்தனையோ தடவைகள் சுவாமிகளிடம் சென்றுள்ளேன். ஒவ்வொரு முறையும் வீழ்ந்து வணங்கியவுடன் அமரச் செய்வார்கள். முதல் இரண்டு தடவைகளில் சுவாமிகள் சொல்லிக் கொண்டிருந்தவை என் மனத்தில் குழப்பத்தை விளை வித்தன. சுவாமிகள் விடாமல் நீளமாகப் பாடிக்கொண்டே இருப்பார்கள். கூர்ந்து கவனித்த பொழுது திருவாசகத்தில் ஒரு அரையடி, தேவாரத்தில் ஒரு ஒன்றரையடி, திருவிசைப்பாவில் நாலு சொற்கள் என்று மாறி மாறிப் பாடிக்கொண்டே இருப்பார்கள். என் போன்ற விவரம் புரியாதோருக்கு ஏன் சுவாமிகள் இப்படி அரையடி முக்காலடி என்று பாடுகிறார்கள் என்ற சந்தேகம். வெளியே வந்து நண்பர்களைக் கேட்டபோது எப்போதும் சுவாமிகள் இப்படித்தான் பாடிக்கொண்டே இருப்பார்கள் என்றார்களே தவிர யாரும் என் ஐயத்தைப் போக்க வில்லை. உள்ளிருந்து வெளியே வந்த அன்பர்களைக் கண்டு பேசும்போது ஓர் உண்மை தெரியலாயிற்று. தாங்கள் பெரும் குறையோடு இருந்ததாகவும், சுவாமிகள் பாடிக் கொண்டிருக்கையில் குறிப்பிட்ட சிலவார்த்தைகள் தம் மனத்துள் புகுந்து பெரிய அமைதியைத் தந்ததாகவும், தம்முடைய பிரச்சனைகட்கு அவை விடையாக அமைந்த தாகவும் கூறினார்கள்.

வருபவர் வாய்விட்டுக் குறைகளைக் கூறுவதும் இல்லை. தங்களுக்கு என்ன குறையென்று அந்த மகாபுருஷர் கேட்பதுமில்லை. ஆனாலும் வருபவர்க்கு அமைதி கிடைத்துவிடும். கம்பநாடன் "வாராதே வரவல்லாய்'' என்று கூறுவதன் பொருளை சுவாமிகளிடம் இருக்கும்போது தெரிந்து கொள்ள முடிந்தது.

ஏறத்தாழ இருபது தடவைகளுக்கு மேல் சுவாமி களைத் தரிசித்திருக்கிறேன். ஒவ்வொரு முறையும் நான்கைந்து நாட்கள் யாழ்ப்பாணத்தில் இருப்பேன். ஆதலால் அன்றன்று என் சொற்பொழிவு முடிந்தவுடன் அந்த மகானின் சந்நிதிக்குச் சென்று அரை மணியோ ஒருமணியோ அவரின் திருவடிக்கீழ் அமர்ந்து அவரின் அருளைப்பெறும் வாய்ப்புப் பெற்றிருந்தேன். அவற்றைத் தொகுத்துக் கூறுவதானால் ஒரு நூலாகவே ஆகிவிடும். எனவே மூன்று நிகழ்ச்சிகளை மட்டும் அடியேன் தருகிறேன். இப் பெருமகனார் எல்லாம் வல்ல சித்தர் என்பதை நிரூபிக்க இந்நிகழ்ச்சிகள் துணைபுரியும் என்று நம்புகிறேன்.

ஒருமுறை திருவாளர் சிறீகாந்தா என்பவர் யாழ்ப்பாணத்தில கலெக்டராக பணிபுரிந்து வந்தார். அவரும் அவர் மனைவியாரும் சுவாமிகளிடம் பெரும்பக்தி கொண்டவர்கள். அவர்களுடன் தங்கியிருந்த நானும் சுவாமிகளைப் பற்றி அவர்களிடம் பேசிக் கொண்டிருப் பதில் பெருமகிழ்ச்சி அடைவேன். இம்முறை கதிர் காமத்தில் ஆடிவேல் விழா நடைபெறுகின்ற நாளாகும். திருவாளர் சிறீகாந்தா எங்கிருந்தாலும் ஆடிவேலுக்கு கதிர்காமம் செல்வது வழக்கம். ஆனால் இம்முறை ஊரைவிட்டுப் போகக் கூடாதென்று அரசு ஆணைகட்டிப் போட்டதால் போக முடியவில்லையென்று வருந்தினார். நெருங்கிய நண்பராகிய அவர் "அ. ச. ஐயா! யோகசுவாமி கள் தவறாமல் ஆடிவேலுக்கு கதிர்காமம் போய் விடுவார்கள். இந்த ஆண்டும் போயிருப்பார்கள் நமக்கோ போகமுடியவில்லை. சுவாமிகள் தங்கி இருக்கும் குடிலுக்குச் சென்று அவர்கள் அமரும் பீடத்திற்கு ஒரு கும்பிடுபோட்டு வரலாம் வாருங்கள்'' என்றார். அதை ஏற்றுக்கொண்டு நான் புறப்பட நானே காரை ஓட்ட ஏற்றுக்கொண்டேன். முதல் இருக்கையில் சிறீகாந்தாவும்

நானுமிருக்க பின் இருக்கையில் திருமதி சிறீகாந்தா அமர்ந்தார்கள். உறுதியாக சுவாமிகள் இருக்கமாட்டார்கள் என்ற துணிவுடன் சென்றோமாதலால் குடிலின் வாயிலை நெருங்குகின்ற வரையில் பேசிக்கொண்டே சென்றோம். மூவரும் நுழைந்தவுடன் மிகப்பெரிய அதிர்ச்சிக்கு ஆளானோம். நாங்கள் வாய்திறந்து ஒன்றும் பேசவில்லை; பேசவும் முடியவில்லை. அந்த நிலையிலும் அந்த அருளாளர் "பொடியா உன்னுடைய இடத்தில் வந்து இருக்கட்டும்'' என்றார்கள். நண்பர் சிறீகாந்தாவும் அவர் மனைவியும் சுவாமிகள்கூட ஆடிவேலுக்குப் போகவில்லை என்பதைக்கண்டு ஒன்றும் புரியாமல் நின்றார்கள். சுவாமிகள் அவர்களைப் பார்த்து "ஏன் மகனே! நீ ஆடிவேலுக்குப் போகவில்லையா?'' என்று கேட்டார்கள். நண்பர் சிறீகாந்தா கண்ணீர் ஆறாகப் பெருக, வாய்குழறி அரச ஆணையின் காரணமாக தான் யாழ்ப்பாணத்தில் தங்க நேரிட்டது என்று சொல்லி அழுதார்கள்.

உடனே சுவாமிகள் பின்வருமாறு கூறினார்கள்: "கவலைவேண்டாம் மகனே, நமக்கென்ன வாகனமா இருக்கிறது? அந்த மடையனுக்குத் தான் மயில் வாகனம் இருக்கிறது. வேண்டுமானால் அவன்தான் நம்மிடம் வரவேண்டும். நாமெங்கே போவது?'' என்று சொல்லி விட்டு சிரித்துக்கொண்டே பாட ஆரம்பித்து விட்டார்கள். ஒரு மணி நேரம் இங்கே தங்கியபிறகு சுவாமிகளிடம் விடை பெற்றுக் கொண்டு வீடு திரும்பினோம். வரும் பொழுது நண்பர் சிறீகாந்தா சொல்லியது இன்னும் என் கவனத்தில் உள்ளது, "அ. ச. ஐயா! பல ஆண்டுகளாக தவறாமல் ஆடிவேலுக்குக் கதிர் காமம் செல்லுகின்ற நான் இந்த ஆண்டு போகமுடியவில்லையே என்று வருந்தினேன். ஆனால் சுவாமிகளும் போகவில்லை என்பதை இப்போ கண்டு விட்டோம். அவரைத் தரிசித்ததால் கதிர்

காமத்தானைத் தரிசித்துவிட்டோம் என்ற எண்ணம் மனத்தில் நிறைந்து விட்டது'' என்றார்.

இரண்டு நாட்கள் கழித்து கொழும்பிற்குச் சென்றேன். அங்கு ஐந்து நாட்கள் பேச ஏற்றுக் கொண்டிருந்தேன். முதல்நாள் போய் இறங்கியவுடன் வழக்கம்போல் சேர். கந்தையா வைத்தியநாதன் உட்பட பலர் விமானநிலையம் வந்திருந்தனர். அன்றுமதியம் செய்தி விளம்பரத்துறைச் செயலாளர் வீட்டில் மதிய உணவிற்கு ஏற்பாடாகி இருந்தது. சாப்பிடுவதற்கு முன் ஆடிவேல் விழாவை சினிமா எடுத்திருக்கிறோம் பார்க்கிறீர்களா என்று கேட்டார். நான் சரியென்றவுடன் ஜன்னல்களை எல்லாம் மூடிவிட்டு 14. m m புரஜெக்டர் (projector) கருவி வைத்து மூன்று நாட்கள் முன்னர் நடந்த ஆடிவேல் விழாவில் எடுத்த படத்தைப் போட்டார்கள். சில நிமிடங்கள் கழிந்த உடன் என்மூச்சே நின்றுவிடும் போல் ஆகிவிட்டது. காரணம் யாழ்ப்பாணத்தில் சிறீகாந்தா உட்பட எங்கள் மூவரிடமும் ஒருமணிநேரம் காட்சி தந்த யோகசுவாமிகள் அதே நேரத்தில் கதிர்காமத்தில் ஒலிவாங்கியின் முன்னர் பேசுவதை அந்தச் சினிமாப் படம் காட்டிற்று.

அதிர்ந்துபோன நான் செயலாள நண்பரைப் பார்த்து "இது என்ன பழையபடம், இதைப் போட்டுக் காட்டினீர்களே'' என்றேன். அதை மறுத்த அவர் முந்தா நாள் எடுத்ததுதான் இது என்பதற்கு அத்தாட்சியாக அந்தப் படச்சுருளை வைக்கும் தகர டப்பாவின்மேல் எழுதியிருந்ததைக் காட்டினார். எப்பொழுது எடுக்கப் பட்டது எந்த மணியிலிருந்து எதுவரை என்றெல்லாம் அதில் எழுதியிருந்தது.

பொறுமை இழந்த நான் உடனே தொலைபேசி மூலம் யாழ்ப்பாணத்திலுள்ள சிறீகாந்தாவுடன் தொடர்பு கொண்டேன். நான் எவ்வளவு எடுத்துக் கூறியும்

சிறீகாந்தா நம்ப மறுத்து விட்டார். "அ. ச. ஐயா! நாம் மூன்றுபேரும் சுவாமிகளிடம் ஒரு மணிநேரம் இருந்ததையும் அவரது பொன்மொழிகளைக் கேட்டதையும் நன்றாக அறிவோம். 'நமக்கென்ன வாகனமா இருக்கிறது. அந்த மடையனுக்குத் தான் மயிலிருக்கிறது' என்று கூறியது நினைவில்லையா?'' என்று கேட்டார். எவ்வளவு சொல்லியும் நண்பர் சிறீகாந்தா படச்சுருளை நம்பத் தயாராக இல்லை. அரசுப் பணியாளர்கள் ஏதோ தவறு செய்து விட்டார்களென்றே உறுதியாக நம்பினார். இந்நிலையில் நான் ஒரு முடிவுக்கு வந்தேன். ஐந்து நாள் சொற்பொழிவு முடிந்ததும் கொழும்பிலிருந்து நேரே சென்னை வருவதற்கு என்னிடம் பயணச் சீட்டிருந்தாலும் அதை மாற்றி யாழ்ப்பாணத்தில் ஒரு நாள் தங்கிச் செல்ல முடிவு செய்தேன். அன்று கூட்டத்திற்கு வந்திருந்த பலரும் கதிர்காமம் சென்று மயில்வாகன முருகனையும் மானுட வடிவில் யோகர் சுவாமிகள் என்ற பெயரில் இருந்த முருகனையும் கண்டவர்கள் ஆவர். சுவாமிகளங்கு பேசியதை இவர்களனைவரும் நேரே கேட்டவர்களாதலால் அவர்கள் என்னை நம்பத் தயாராகவில்லை.

இந்த நிலையில் என் பணி முடிந்தவுடன் ஆறாம் நாள் புறப்பட்டு யாழ்ப்பாணம் வந்தேன். விமான நிலையத்திற்கு வந்த சிறீகாந்தா இதுபற்றி அவசரமாக என்னுடன் பேசவிரும்பியதால் ஓட்டுநரை விட்டு விட்டு தானே வண்டி ஓட்டி வந்திருந்தார். பலாலி விமான நிலையத்திலிருந்து கலெக்டர் பங்களா செல்லும்வரையில் நடந்தவற்றையெல்லாம் கூறினேன். நண்பர் சிறீகாந்தா அவர்கள் உறுதியாக அந்தச் சினிமாப் படம் பழையபடம் என்ற முடிவிலிருந்து மாறவேயில்லை. அன்றுமாலை ஒரு மணியளவில் நாங்கள் மூவரும் சுவாமிகளைத் தரிசிக்கச் சென்றோம். விழுந்து வணங்கியவுடன் சுவாமிகள் "பொடியா! நீ ஏன் பட்டணம் போகாமல் இங்கே

வந்தாய்?'' என்றவுடன் நான் அச்சத்தோடு நடந்தவற்றைக் கூறினேன். சுவாமிகள் கடகடவென்று சிரித்துவிட்டு, "அந்த மடையனுக்குத்தான் மயிலிருக்கிறது. நாங்கள் எப்படி அங்கே போகமுடியும். மயிலா இருக்கிறது நமக்கு?'' என்று கூறிச் சிரித்தார். அட்டமா சித்திகளில், வேறொருவர் காணாமல் ஒரே நேரத்தில் பல இடங்களில் இருக்கும் சிறப்பு சித்தர்களுக்குரியது என்பதைப் படித்திருக்கிறேன். ஆதலால் மனத்தில் கொஞ்சம் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "சுவாமிகள் அங்கே இருந்ததும் உண்மை. இது அட்ட.....'' என்று தொடங்கினேன். அந்த வார்த்தையை முழுவதும் கூறவிடாமல் சுவாமிகள் உரத்தகுரலில், "பொடியா! செருப்படி வேண்டுமோ மகனே உனக்கு? வாயை மூடடா'' என்றார்கள். பிறகு அன்பொழுகப் பேசிக் கொண்டிருந்தார்கள். மறுநாள் நான் சென்னை மீண்டு விட்டேன். யோகர் சுவாமிகள் எல்லாம் வல்ல சித்தர் என்பதற்கு தலையாய எடுத்துக் காட்டு இதுவாகும்.

என் நினைவில் ஆழமாக நின்றதைக் கூறலாம். ஒரு முறை யாழ்ப்பாண இந்துக்கல்லூரியில் சொற்பொழிவு ஆற்றுவதற்காக பல்கலைச் செல்வர் டாக்டர். தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், டாக்டர் டி. எம். பி. மகாதேவன், நான் ஆகிய மூவரும் சென்றிருந்தோம் அமைச்சர் நடேசன் அவர்கள் வீட்டில் தங்கி இருந்தோம். திரு. தெ.பொ.மீயும் நானும் சுவாமிகளிடம் செல்லும் வாய்ப்பை முன்னரே பெற்றிருந்தோம். திரு மகாதேவனுக்கு இது புதிய அனுபவம். நான்கு நாட்களும் சொற்பொழிவுகள் முடிந்தவுடன் சுவாமிகளிடம் சென்று ஒருமணி நேரம் தங்கி அவர்கள் ஆசீர்வாதத்துடன் திரும்புவது வழக்கம். முதல் மூன்று நாட்களிலும் பல திருவிளையாடல்களை சுவாமிகள் செய்தருளினார்கள். திரு. மகாதேவன் ஏதாவது பலகாரம் செய்து சுவாமிகளுக்கு அதை நைவேத்தியமாகப்

படைத்து விட்டு அந்த உச்சிஷ்டத்தை நாங்கள் உண்ணவேண்டு மென்று விரும்பினார். அமைச்சர் நடேசனாரிடம் இதைச் சொல்ல அவர் சமையற்காரனை அழைத்து, "ஏழு அல்லது எட்டுமணிக்கு குளித்துச் சுத்தமாக இடியப்பமும் சொதியும் தயார் செய்து வை'' என்று உத்தரவிட்டார். மகாதேவனிடம் திரும்பி, "உங்கள் ஆசைக்காக இதனைச் செய்யச் சொல்லி விட்டேன். சுவாமிகள் எதையும் வாயிற் போட்டு நானறியேன். இருந்தாலும் இப்பலகாரத்தை எடுத்துக் கொண்டு சென்று உங்கள் விருப்பத்தை விண்ணப்பம் செய்யுங்கள். சுவாமிகள் மறுத்துவிட்டால் அதற்காக வருந்தவேண்டாம்'' என்று கூறினார் நடேசனார்.

திடீரென்று ஓர் அதிசயம் நிகழ்ந்தது. நான்கு மணிக்கு அமைச்சர் உட்பட நாங்கள் நால்வரும் கல்லூரிக்குப் புறப்படத் தயாராக இருந்தோம். சமையற்காரனுக்கு திடீரென்று காக்கைவலி கண்டுவிட்டது. அவனை மருத்துவமனை அனுப்பிவிட்டு நாங்கள் சொற்பொழிவுக்குச் சென்று விட்டோம். எங்களுக்கே உணவில்லாத போது சுவாமிகளுக்கு நைவேத்தியம் கொண்டு செல்வதென்பது நடக்காமல் போய்விட்டது. எங்களுக்குக் கொடுத்துவைக்க வில்லை என்ற மனவருத்தத்துடன் பத்துமணியளவில் நாங்கள் மூவரும் சுவாமிகளிடம் சென்று வீழ்ந்து வணங்கி விட்டு நின்றோம். திடீரென்று சுவாமிகள் "அடே மகாதேவா! யோகனுக்குச் சாப்பாடு போடவேண்டு மென்று நினைத்தாயல்லவா? கவலைப்படாதே''. என்று கூறிவிட்டு மூவரையும் அமருமாறு செய்தார்கள். திடீரென்று குடிசையில் ஒரு மூலையைச் சுட்டிக் காட்டி, "டேய் பொடியா! அங்கே இடியப்பமும் சொதியும் இருக்கிறது. நான்கு இலைகள் இருக்கின்றன எடுத்துப் போடு'' என்றார்கள். சுவாமிகளுக்குப் படைக்கப்பட்ட இலையில் இருந்த இடியப்பத்தை நன்கு பிசைந்து

கடுகளவு தம்முடைய திருவாயில் போட்டுக் கொண்டு எஞ்சியவற்றை உருண்டைகளாக உருட்டி எம்மூவர் இலைகளிலும் போட்டு உண்ணுமாறு பணித்தார்கள். இவை முடித்த பிறகு திடீரென்று, "டேய் மகாதேவா! நீ என்ன செய்யப் போகிறாய் நாளைக்கு?'' என்றார்கள். அவர் தெ. பொ.மீயும், தானும் மறுநாட்காலை விமானத்தில் சென்னை செல்லப் போவதாகக் கூறினார் கள். நான் கொழும்பு செல்லப் போவதாகக் கூறினேன். சுவாமிகள் சிரித்துக் கொண்டே, "அடே பொடியா, இவர்கள் இருவரும் பறவை மாதிரி கைகளை இறக்கையாக பரப்பிக்கொண்டு பறக்கப் போகிறார்கள் தெரியுமா?'' என்றார்கள். எங்கள் வயிற்றில் புளியைக் கரைத்து விட்டது. இவர்களைப் போக வேண்டாமென்று சுவாமிகள் கூறுகின்றார்களா என்ற சந்தேகம். சுவாமி களின் எதிரே வருகின்ற பெரியவர்கள் பிரதம மந்திரி யிலிருந்து சாதாரண மனிதர் வரை யாரும் பேசுவ தில்லை. தொடக்கத்திலிருந்தே அவர்கள் எதிரே பேசும் உரிமையை எனக்கு வழங்கியிருந்தார்கள். நான் பேசாது இருந்தாற்கூட, "டேய் பொடியா! ஏன் சும்மா இருக் கிறாய்? ஏதாவது சொல்'' என்றார்கள். அந்த உரிமையை வைத்துக் கொண்டு, "இப்பொழுது இவர்கள் பயணத்தை நிறுத்தி விடட்டுமா?'' என்று கேட்டேன். சுவாமிகள் சிரித்துக் கொண்டு "அவர்கள் போவதை யோகன் ஏன் நிறுத்த வேண்டும். பறவை போலப் பறப்பார்கள்'' என்று கூறினார்கள். சுவாமிகளை விட்டு வரும்போது நடுநிசி ஆகிவிட்டது. நடந்தவற்றைக் கூறியவுடன் அமைச்சர் நடேசனார், இவர்களைப் போகவேண்டாமென்று எவ்வளவோ கூறிப் பார்த்தார். இருவரும் கேட்பதாக இல்லை. வேறு வழியில்லாமல் மறுநாட்காலை ஏழேகால் மணிக்கு இவர்கள் இருவரையும் வழியனுப்ப அமைச்சரும் நானும் சென்றோம். இருவரும் விமானத்தில் ஏறி

அமர்ந்து விட்டனர். ஓடு பாதையின் தொடக்கத்திற்குச் சென்ற விமானம் பல முறை விசிறிகளையும் சுழலவிட்டுக்கொண்டிருந்ததைக் காண முடிந்தது. அது 'டக்கோட்டா விமானம். சிறிது நேரத்துக் கெல்லாம் ஒலிபெருக்கியில் பின்வருமாறு பேசப்பட்டது. "விமானம் பழுதடைந்து விட்டதால் இன்று சென்னை செல்லும் வாய்ப்பு இல்லை. நாளை இதே நேரத்திற்கு இதே பயணச்சீட்டுகளுடன் பயணிகள் வரலாம்'' விமானத்தைக் கட்டி இழுத்துக் கொண்டு வந்தார்கள். தெ. பொ. மீயும், மகாதேவனும் கீழிறங்கினார்கள். அமைச்சர் நடேசனுக்கு பெரிய ஆனந்தம், மகாதேவனுக்கு வருத்தம். வழக்கம்போல் அன்று மாலை சுவாமிகளைக் காணச் சென்றோம். சுவாமிகள் சிரித்துக்கொண்டே, "என்னடா மகாதேவா! இறக்கையை விரித்துப் பறக்கவில்லையோ!'' என்றார்கள். மகாதேவன் அவர்கள் கண்ணீர் ததும்ப விழுந்து வணங்கிவிட்டு தான் அவசரப்பட்ட காரணம் கூறினார். "அன்று சென்னை போயிருந்தால் நான் இரவு டில்லி சென்று (T.W.A.) விமானம் மூலம் ஹவாய்த் தீவில் (Hawaii Island) உள்ள ஆனலுலுவுக்குச் (Honolulu) செல்ல வேண்டும். அதற்கு மறுநாள் அங்கு நடைபெறப் போகும் அகில உலக வேதாந்த மகாநாட்டிற்கு நான் தலைமை வகிக்க வேண்டும். எல்லாம் கெட்டுவிட்டது'' என்று வருந்தினார். அதைக் கேட்ட சுவாமிகள், "கவலைவேண்டாம் மகனே. இம் மகாநாட்டை பதினைந்து நாள் தள்ளிப் போட்டு விட்டார்கள். நீ அமைதியாகச் சென்று தலைமை ஏற்று நடத்தலாம்'' என்று கூறினார்கள். சுவாமிகளிடம் விடை பெற்று வந்து நடேசன் வீட்டில் தங்கியபோது மகாதேவன் கூறிய வார்த்தைகள் அவர் துயரத்தை எடுத்துக் காட்டின. "இந்த மகாநாடுகள், ஒரு வருஷத்திற்கு முன்பே அட்டவணை போட்டுத் தயாரிக்கப்

பட்டவையாகும். உலகம் முழுவதிலிருந்தும் பலர் வருவார்கள். ஆகையால் இரண்டுநாள் முன்னர் அதை மாற்றுவது இயலாத காரியம் என்று கூறி வருந்தினார். மறுநாள் அவர்கள் இருவரும் சென்னை சென்றனர். நான் கொழும்பு சென்று பதினைந்து நாட்கள் தங்கிவிட்டு சென்னை வந்து ஒருமாதம் கழிந்தபின் டாக்டர் மகாதேவனைச் சந்தித்தேன். நாத்தழுதழுக்க, “சுவாமிகள் அவர்கள் எவ்வளவு பெரிய சித்தர் என்பதை அனுபவித்து விட்டேன். அங்கே விமானம் தடைப்பட்ட அதே நேரத்தில் சென்னையில் என் வீட்டிற்கு ஒரு தந்தி வந்திருந்தது. பதினைந்து நாட்கள் மகாநாடு பல்வேறு காரணங்களால் தள்ளிவைக்கப்பட்டதென்றும், பதினாறா வது நாள் விழாத் தொடங்குமென்றும் தந்தியில் அறிவித்து இருந்தார்கள். அப்படியே பதினாறாவதுநாள் தொடங்கிய விழாவில் தலைமையேற்று என்பணி முடித்து வந்து விட்டேன்'' என்று கூறினார்கள். யோகர் சுவாமிகள் என்ற சித்தரிடம் நாங்கள் அனுபவித்த இந்த நிகழ்ச்சி அவர் யாரென்பதை எடுத்துக் காட்ட உதவும்.

மேலே கூறிய இரண்டு நிகழ்ச்சிகளிலும் உடனிருந்து சுவாமிகளின் யோகசித்தியையும், பக்தர்களுக்கு அருளு கின்ற திறத்தையும் என்னால் காண முடிந்தது. இனி நான் சொல்லப்போகும் நிகழ்ச்சி எனக்கு நேரடியாக நேர்ந்த அனுபவமாகும். சுவாமிகள் இருக்கும் காலத்திலேயே இதுபற்றி எழுதவேண்டுமென்று ஈழகேசரி, தினகரன் போன்ற பத்திரிகைகள் வேண்டியும் மகானின் உத்தர வில்லாமல் அதைச் செய்ய முடியாதென்று கூறிவிட்டேன். இப்போது அதனை எழுதுவதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. முதலாவது அப்பெருமகனார் சித்தியடைந்து விட்டார். இரண்டாவது என்னுடைய வயதும் எண்பதைக் கடந்து விட்ட காரணத்தால் பின்னர் வரும் சமுதாயம் எத்தகைய அருளாளர்களை இந்தத் தமிழினம்

பெற்றிருந்தது என்பதை அறிந்துகொள்ள ஒரு வாய்ப்பாக இருக்கும் ஆதலால் தான் இதனை விரிவாக எழுத முற்பட்டேன்.

1955 வாக்கில் யாழ்ப்பாணத்தை அடுத்துள்ள கரணவாய்தெற்கு என்ற ஊரில் பத்துநாட்கள் தொடர்ந்து சொற்பொழிவு செய்வதாக ஒப்புக் கொண்டு சென்றேன். மலாய்நாட்டு ஓய்வூதியம் பெறும் முருகப்பு என்பவர் வீட்டில் தங்கியிருந்தேன். பகல் முழுவதும் வேலையில்லை ஆதலாலும், இரவு ஒரு மணிக்கு சொற்பொழிவு தொடங்குவதாலும் அன்பர்கள் சிலர் எனக்காக ஒரு காரைக் கொடுத்து பகலில் எங்குவேண்டுமானாலும் போய் வர ஏற்பாடு செய்தார்கள். முதல்நாள் சொற்பொழிவு முடிந்து வழக்கம்போல் சுவாமிகளிடம் சென்று வணங்கி வழிபட்டு இரவு மீண்டுவிட்டேன்.

மறுநாள் பொழுது விடிந்தவுடன் பல்தேய்த்துக் கொண்டு நின்றேன். நண்பர் முருகப்பு வாலாயமாகக் கேட்கின்ற "நன்கு உறங்கினீர்களோ ஐயா'' என்ற கேள்வியைக் கேட்டார். அவருக்கு பதில்கூறத் தொடங்கி னேன். ஆனால் வாயிலிருந்து ஒரு சொல்லும் வரவில்லை; காற்றுத்தான் வெளிவந்தது. எவ்வளவு முயன்றும் ஒரு எழுத்தைக்கூட உச்சரிக்க முடியவில்லை. அதிர்ந்துபோன நான் என்னசெய்வது என்றறியாமல் திகைத்தேன். ஒன்பது மணியளவில் காரை நானே ஓட்டிச்சென்று சாவகச் சேரியில் ஓய்வுபெற்றிருந்த தொண்டை, காது, மூக்குநோய் நிபுண மருத்துவரை காணச்சென்று என் குறையை அவரிடம் எழுதிக் காட்டினேன். அவர் சோதனை செய்துவிட்டு இன்று மாலை உங்களுடன் ஒருவரை அனுப்புகிறேன். கொழும்பில் சென்று சில சோதனைகள் நடத்திய பிறகு மருத்துவம் செய்யலாம் என்று கூறினார். அவரிடம் எழுதிக் காட்டும் பொழுது Paralysis of Vocal chord என்று எழுதிக்காட்டினேன். அவருடைய வாக்கை

ஏற்றுக்கொண்டு மாலை கொழும்பு போவதற்குத் தயாராக காரில் ஏறி அமர்ந்தேன். கண்ணீர் மாலை மாலையாக வந்தது. காரணம் என் பிழைப்பே வாயின் மூலம்தான் நடைபெற்றது. கல்லூரிப் பேராசிரியர், தொடர்ந்து சொற்பொழிவு செய்பவர் என்ற இரண்டும் போய் விட்டனவே. என்னுடைய பெரிய குடும்பம் என்னாவது என்ற கவலை மனம் முழுவதையும் சூழ்ந்து கொண்டது. இந்த நிலையில் காரை ஆயத்தப்படுத்த சாவியைச் செருகிய நிலையில் அந்த மருத்துவ நிபுணர் வெளியே வந்து காரின் கதவைப் பிடித்துக் கொண்டு, "அ. ச. ஐயா! யோகருடைய சீடர்தானே தாங்கள். அவரைப் போய்ப் பாருங்களேன்'' என்றார். அந்த விநாடிவரை சுவாமிகளின் நினைவே என்மனத்தில் தோன்றவில்லை. அவர் கூறிய வுடன் சுவாமிகளிடம் செல்லப்புறப்பட்டேன். அக்காலத் தில் பகலில் யாரும் சுவாமிகளிடம் செல்வதில்லை. அவருடைய தியானம் முதலியவற்றிற்கு இடையூறாக யாரும் போவதில்லை. மாலை ஆறுமணிக்கு மேற்தான் செல்வார்கள். அனைவருக்கும் தெரிந்த இந்தச் செய்தி எனக்கும் தெரிந்திருந்தது. எனவே, ஒரு விநாடி சிந்தித்து உடனடியாக சுவாமிகளிடம் போவதே சரி என்ற முடிவிற்கு வந்தேன். நேரே வண்டியை ஓட்டிச் சென்று ஆசிரமத்தின் பக்கத்தில் நிறுத்திவிட்டு எதிரே உள்ள கேணியில் கைகால்களைச் சுத்தம் செய்து மகானின் குடிலுக்குள் நுழைந்தேன். அடக்கமுடியாத அழுகையும், கண்ணீரும் என்னை ஆட்கொண்டிருந்தன. விழுந்து வணங்கிய நான் எழுந்திருக்க விரும்பவில்லை. ஓரிரு நிமிடங்கள் கழித்து, "ஏண்டா பொடியா. அந்த மருத்துவர் என்ன முருகன் என்ற நினைப்பா? எதற்காக அவரிடம் போனாய்?'' என்று திட்டியதோடல்லாமல் என்னுடைய அறியாமை பற்றியும் வெகுவாக ஏசினார்கள், கடைசியில் "பொடியா இங்கே உட்கார்'' என்று நான் வழக்கமாக அமரும் இடத்தைக் காட்டினார்கள். அப்பொழுது இருந்த மனநிலையில் சுவாமிகள் பேசியது எதுவும் என் மனத்திற்

படியவில்லை. ஏதேதோ பேசிவிட்டு அரைமணி கழித்து அவர்கள் சொல்லிய வார்த்தைகளை ஏறத்தாழ அப்படியே கீழே தந்துள்ளேன். ஒரு சில சொற்கள் முன்பின்னாக இருக்கலாம். இத்தனை ஆண்டுகள் கழித்தும் அச்சொற் களை மறக்கமுடியவில்லை. காரணம் என்னுடைய வாழ்க்கையில் ஒரு மாபெரும் மாற்றத்தை ஏற்படுத்திய சொற்களவை. “பொடியா! வழக்கம்போல் மாலையில் பிரசங்கம் செய்துவிட்டு இங்கே வா'' என்று கூறிய சொற்கள் ஒருபெரிய அதிர்ச்சியைத் தந்தன. அப்படி யானால் நான் பேசமுடியும் என்பதைச் சுவாமிகள் குறிப்பாக உணர்த்தி விட்டார்கள். எழுந்து விழுந்து வணங்கி விட்டு ‘உத்தரவுப் படியே செய்கிறேன்' என்றேன். அந்த இரண்டு வார்த்தைகள்தான் அப்பொழுது புதிதாகப் பிறந்த என் வாயிலிருந்து வந்த முதலிரண்டு சொற்கள் ஆகும். என்னை மறந்து அந்தச் சித்தபுருஷன் எதிரே நிற்கும்போது திடீரென்று சுவாமிகள் பின்வருமாறு கூறினார்கள். “பொடியா, சேக்கிழாரையும் கம்பனையும் நாங்கள்தானே வெட்டிப் புதைக்கணும். கவலையில்லாமல் போய்வா'' என்றார்கள். இதன் பொருள் என்ன என்பதைப் பின்னர் விளக்குகிறேன். வெளியில் வந்து காரை ஓட்டிக் கொண்டு சுவாமிகளிடம் என்னைப் போகுமாறு பணித்த அந்த மருத்துவப் பெருந்தகையைக் காணச் சென்றேன். தெருவிலிருந்தபடியே “டாக்டர்......'' என்று பெருங்குரலெடுத்துக் கூவினேன். அந்த முதியவர் வீட்டினிலிருந்து வெளியே வந்து நடுத்தெருவில் சாஷ்டாங்கமாக விழுந்து என்னை வணங்கினார். சற்றும் எதிர்பாராத இதனைக் கண்ட நான் பெரிதும் அதிர்ச்சியடைந்து. ‘இவ்வளவு முதியவராகிய தாங்கள் என்னைக் கும்பிடலாமா? இது முறையன்று' என்று கூறினேன். என்னுடைய இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்ட அவர் உள்ளே அழைத்துச் சென்று அமர வைத்தார். அதே நேரம் அவர் பணியாளர் ஒருவர் இரண்டு விமான டிக்கட்டுகளைக் கொண்டு வந்து

அவரிடம் தந்தார். ஏதோ அவருக்கு அந்த டிக்கட்டு என்று நினைத்தேன். அப்பெருமகனார் டிக்கட்டை என்னிடம் கொடுத்து படிக்கச் சொன்னார். யாழ்ப்பாணத்திலிருந்து சென்னை செல்வதற்கு என் பெயரிலும், அப்பணியாளர் பெயரிலும் இரண்டு டிக்கட்டுகள் இருந்தன. ஒன்றும் புரியாமல் திகைக்கும் என்னைப் பார்த்து பின்வருமாறு பேசினார். "அ. ச. ஐயா! இங்கு செய்த சோதனையிலேயே தாங்கள் எழுதிக் காட்டியது உண்மை என்பதைத் தெரிந்து கொண்டேன். இதற்கு இதுவரை மருத்துவ உலகம் ஒன்றும் செய்யமுடியவில்லை. கோடிக்கு ஒருவருக்கு இது வரலாம். வந்து விட்டால் அதுதான் அவருடைய முடிவு. ஆக உங்களிடம் சொல்லாமல் நாளைக்கு உங்களை சென்னைக்கு அனுப்ப முடிவு செய்தேன். பேச முடியாத தாங்கள் ஒன்றும் செய்ய முடியாது ஆதலால் இந்த அன்பரையும் உங்களோடு அனுப்ப முடிவு செய்தேன். காரில் உங்களை ஏற்றுகின்ற வரை எனக்கும் சுவாமிகளின் நினைவுவரவில்ல. எப்படி உங்களை ஊருக்கனுப்புவது என்ற எண்ணம்தான் என் மனத்தில் மேலோங்கி நின்றது. தாங்கள் வண்டியில் ஏறிய பிறகு வண்டிக் கதவைத் தொட்டுக் கொண்டு, 'நீங்கள் சென்று வாருங்கள்' என்று விடை கொடுக்க முயலும்போதுதான் சுவாமிகளின் எண்ணம் திடீரென்று மனத்தில் தோன்றிற்று. நாற்பது வருடங்களுக்குமேல் E. N. T. மருத்துவராக கொழும்பில் பணி செய்த எனக்கு அந்த விநாடி ஓர் எண்ணம் தோன்றிற்று. மருத்துவ உலகம் உதவ முடியாத தங்களுக்கு இறைவனின் அருள் ஒன்றுதான் உதவமுடியும். அப்படி யானால் அந்த அருளை வழங்கக் கூடிய இறைநேசர் சுவாமிகள் ஒருவராகத்தான் இருக்க முடியும். அதனாற் தான் பகலில் யாரும் சுவாமிகளிடம் செல்வதில்லை யென்று தெரிந்திருந்தும் தங்களைப் போகுமாறு பணித்தேன். சுவாமிகளே என் மனத்தில் அந்த எண்ணத்தைத் தோற்றுவித்திருக்க வேண்டும். இத்தகைய அற்புதங்கள் பலவற்றை பிறர் அறியாமல் ஒரு சிலருக்கு

சுவாமிகள் செய்கிறார்கள் என்பதை தழுதழுத்த குரலில் கூறிவிட்டு, என்னை அங்கேயே தங்கி மதிய உணவு உட்கொண்ட பிறகு போகலாம் என்றும் பணித்தார்கள்.

அன்று மாலை வழக்கம்போல் பேசினேன். பின்னர் சுவாமிகளிடம் சென்று ஆசிபெற்றேன். ஏனைய ஒன்பது நாட்களும் இதேமுறையில் சுவாமிகளைச் சென்று தரிசனம் செய்து வந்தேன். இந்த நிகழ்ச்சி நடைபெற்ற காலத்தில் கம்பனைப் பற்றி "இராவணன் மாட்சியும் வீழ்ச்சியும்"என்ற நூலையும், "நாடும் மன்னனும்" என்ற நூலையும் எழுதி வெளியிட்டிருந்தேன். அதன்பிறகு ஏறத்தாழ முப்பது நூல்கள் எழுதியுள்ளேன். என்றாலும் சுவாமிகளின் வாக்குப் பொய்க்கவில்லை. இந்நூல்களில் முக்கால் பங்கிற்கு மேல் கம்பனையும் சேக்கிழாரையும் பற்றிய நூல்களே ஆகும். இவற்றோடு இல்லாமல் எஸ். ராஜம் அவர்கள் வெளியிட்ட கம்பராமாயண மூலத்திற்கு ஆசிரியர் குழுவில் ஒருவனாக இருந்தேன். அடுத்து சென்னைக் கம்பன் கழகம் வெளியிட்ட "கம்ப இராமாயணம்" பதிப்பிற்கு பல்கலைச் செல்வர் தெ.பொ.மீ. அவர்களுடன் சேர்ந்து பணியாற்றினேன். சென்ற நான்காண்டுகளாகக் கோவைக் கம்பன் கழகம் வெளியிடும் இராமாயண நூலுக்கும் முதன்மைப் பணிப்பாசிரியனாக இருந்து வருகின்றேன். தஞ்சைப் பல்கலைக் கழகத்தில் துணை வேந்தராக இருந்த வி. ஐ. சுப்பிரமணியம் அவர்கள் எதிர்பாராத விதமாக என்னை அழைத்து சேக்கிழாரைப் பற்றிய விரிவான நூலொன்றை எழுதுமாறு பணித்தார்கள். மூன்று ஆண்டுகள் பல்கலைக் கழகத்தின் ஏற்புப் பணியாக "பெரியபுராணம் ஓர் ஆய்வு" என்ற பெரியதொரு நூலை எழுதி முடித்தேன்.

1996ல் என்னுடைய எண்பதாவது வயது நிறைவு நாளில் இராமனைப் பற்றி புதிய கோணத்தில் ஒரு நூல் எழுதுமாறு "தான சூர கர்ணன்" திரு ஆர். துரைசாமி நாயுடு அவர்கள் (கோவை) பணித்தார்கள். "இராமன்

பன்முக நோக்கில்'' என்ற நூலை எழுதினேன். திரு நாயுடு அவர்கள் தம் செலவில் அதை வெளியிட்டார்கள். அது 1997 பிப்ரவரியில் வெளியாயிற்று. சேக்கிழாரின் பெரியபுராணத்தை பக்தி அடிப்படையில் இல்லாமல் சமுதாய அடிப்படையில் காணவேண்டுமென்ற எண்ணம் மனத்தில் தோன்றியதுண்டு. அதற்கு வடிவு கொடுக்கத் தொடங்கி 1997 ஜூலையில் "சேக்கிழார் தந்த செல்வம்'' என்ற நூலை வெளியிட்டேன்.

நூல்கள் எழுதும் பழக்கமுடைய நான் இவை இரண்டையும் எழுதியதில் என்ன புதுமை என்று பலர் நினைக்கலாம். ஆனால், என்னைப் பொறுத்த வரை யோகர் சுவாமிகள் இட்ட கட்டளை என்று ஒவ்வொரு விநாடியும் நினைக்கின்றேன். என்ன காரணத்தாலோ சென்ற நாற்பது ஆண்டுகளாக இவ்விருவரையும் தாண்டி வெளியே செல்ல முடியவில்லை. தொல்காப்பிய பொருளதிகாரத்திலுள்ள, மெய்ப்பாட்டியல், உவமவியல் என்ற இரண்டிற்கும் புதிய முறையில் பேராசிரியரிடம் மாறுபட்டு உரை எழுதும் எண்ணம் பல்லாண்டுகளாக இருப்பினும் ஏனோ எழுதமுடியவில்லை. தமிழ்த் தென்றல் திரு வி. க. அவர்கள் திருவாசகத்திற்கு என்னால் ஓர் உரையெழுதப் படவேண்டும் என்று பலமுறை என்னிடம் கூறியதோடு அவருடைய வாழ்க்கைக் குறிப்பிலும் இதனை எழுதியுள்ளார்கள். என்ன காரணத்தாலோ அதுவும் முடியவில்லை. எண்பது வயது பூர்த்தியாகும் போதும் இராமனைப் பற்றியும், சேக்கிழார் பற்றியுமே அடுத்தடுத்து இரண்டு பெரிய நூல்களை எழுதி வெளியிட முடிந்த தென்றால், அதன் உண்மையான காரணம் அ. ச. ஞா. என்ற தனி மனிதனுடைய முயற்சியோ, விருப்பமோ காரணமல்ல. எந்த விநாடி அந்த மகான் வாயைத் திறந்து 'அந்த இருவரையும் வெட்டிப் புதைக்க வேண்டும்' என்று சொன்னார்களோ அந்த விநாடியிலிருந்து அதே பணி என்னையும் அறியாமல் நடந்து கொண்டிருக்கிறது.

எண்பது வயதைக் கடந்தாலும் என்னுடைய குரல்வளத்தைக் கண்டு வியப்படைந்து 'எப்படி உனக்கு இந்தக் குரலிருக்கிறது' என்று என்னிடம் கேட்பவர்கள் பலருண்டு. இதற்காக நான் ஏதோ தனிப்பட்ட முறையில் மருத்துவம் செய்து கொள்ளுகிறேன் என்றோ, குரலை நெறிப்படுத்தும் (voice culture) முறை கையாள்கிறேன் என்றோ பலர் என்னிடம் கேட்டதுண்டு. எவ்விதக் கட்டுப்பாடு மில்லாமல் கண்டதையெல்லாம் உண்டு வாழும் எனக்கு இந்தக் குரல் இன்னும் இருக்கின்ற தென்றால் அது என்னுடையதன்று. அரசங்குடி சரவண முதலியாருக்கு 1916ல் மகனாகப் பிறந்த நான் பெற்றிருந்த குரல் யாழ்ப்பாணத்தில் 1955ல் இழக்கப்பட்டது. அந்தச் சித்த புருஷரைச் சந்தித்த பிறகு இன்றுவரை நான் பேசும் குரல் அப் பெருமகன் இட்ட பிச்சையாகும். எனவே இதில் ஆச்சரியப்படுவதற்கோ, பெருமை அடைவதற்கோ ஒன்றுமில்லை. இந்த மகான்களின் திருவருள் எத்தகையவர் களையும் காக்கும் திறன் உடையது என்பதற்கு இது ஓர் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

மேலே கூறிய மூன்று நிகழ்ச்சிகளும் என்னோடு நேரடித் தொடர்புடையவை. இனிக் கூறப்போகும் நிகழ்ச்சிக்கும் எனக்கும் நேரடித் தொடர்பில்லை. சுவாமி களிடம் மாபெரும் பக்தி பூண்டிருந்த யாழ்ப்பாண நண்பரொருவர் அவருடைய வாழ்க்கையில் நடந்ததைக் கூறினார். அதைப் பிறரிடம் சொல்லும் பழக்கம் அவரிடமில்லை. ஆனால் என் அனுபவங்களை அறிந்த பிறகு அவருடைய அனுபவத்தை என்னிடம் சொல்வதில் தவறில்லை என்று கருதிக் கூறினார். இப்போது பெரிய பதவியிலிருந்து ஓய்வு பெற்ற அந்த நண்பரும் இல்லை. சுவாமிகளும் இல்லை. எனவே நண்பர் கூறியதை அப்படியே தருகின்றேன். "அ. ச. ஐயா! சுவாமிகளின் மாபெரும் ஆற்றலுக்கு ஓர் உதாரணம் சொல்லப் போகிறேன். மனசுக்குள் வைத்துக் கொள்ளுங்கள்.

பிறரிடம் இது பற்றிப் பேசத் தேவையில்லை. ஒருமுறை யாழ்ப்பாணம் சென்று சுவாமிகளைத் தரிசித்த பொழுது சிரித்துக் கொண்டே 'மகனே சிவனொளி பாதம் போய் வரலாமோ' என்று கேட்டார். நான் கொஞ்சம் அஞ்சினேன். மலையின் மேலிருக்கும் அந்த இடத்திற்கு செல்வதற்கு சரியான பாதையொன்றும் அப்பொழுது இல்லை. பாறைகளைக் கடந்து தாண்டிக் கொண்டு செல்லவேண்டும். சுவாமிகளோ முதிர்ந்த பருவத்தினர். என்ன செய்வது என்று திகைத்து இறுதியில் ஒப்புக் கொண்டேன். அந்த மலையின்மேல் ஏறிச் செல்வதானால் போகவரவே பல மணிகள் ஆகும். வழியில் சாப்பிடுவதற்கு ஒன்றும் இராது. எனவே சுவாமிகள் குறித்த நாளில் ஒரு சட்டி நிறைய இடியப்பமும் சொதியும் தயார்செய்து காரின் பின்புறம் வைத்துவிட்டு சுவாமிகளும் நானும் மலையடிவாரம் போய்ச் சேர்ந்தோம். அங்கே காரில் இருந்து இறக்கிய இரண்டு பாத்திரங்களையும் பார்த்து 'என்ன மகனே இது' என்று கேட்டார்கள். மதிய உணவிற்காக என்று நான் கூறியவுடன் கடகடவென்று சிரித்த சுவாமிகள் 'போகும் வழியில் பாதி தூரத்தில் அழகான டீக்கடை இருக்கிறது. வேண்டுமான பண்டங்களை வாங்கிச் சாப்பிடலாம்; டீ குடிக்கலாம்' என்றார்கள். எனக்கு தலை சுற்றியது. ஒரு மாதம் முழுவதும் ஏதோ இரண்டொருவர் தவிர வேறு யாரும் அந்த மலைமீது ஏறிச் செல்வதில்லை. அந்த வழியில் யாரை நம்பி எந்தப் பைத்தியக்காரன் டீக்கடை வைத்திருப்பான் என்று நான் நினைத்தாலும் சுவாமி களிடம் எடுத்துச் சொல்லும் துணிவு எனக்கு இல்லை. ஆனாலும் சுவாமிகள் நான் கொண்டுவந்த உணவை வண்டியிலேயே வைத்து விடுமாறு பணித்தார்கள். வேறு வழியில்லாமல் அரைமனத்துடன் வண்டியிலேயே உணவை வைத்துவிட்டு இருவரும் மலையேறினோம். பாதிவழி சென்றதும் ஓர் அதிசயக் காட்சி, என்னென்று சொல்வது? பாண், ரொட்டி, பலகாரங்கள் இவை

அனைத்தும் வைக்கப்பட்டிருக்கும் ஒரு டீக்கடை அங்கே இருந்தது. 'பார்த்தாயா மகனே, வேண்டுமானதைச் சாப்பிட்டுவிட்டு மேலே போகலாம்' என்றார் அந்த சித்த புருஷர். இருவரும் உண்டுவிட்டு மேலே சென்றோம். மீண்டு வரும்பொழுதும் அதே டீக்கடையில் மறுமுறையும் சாப்பிட்டு விட்டு டீ குடித்து விட்டு கீழே வந்து விட்டோம். இதுவரையில் இல்லாத பெட்டிக்கடை அங்கே எப்படி வந்திருக்கும். அவ்வளவு பலகாரங்கள் அங்கிருந்தும் எங்களைத் தவிர வேறுயாரும் அங்கில்லையே, அக்கடைக்காரன் யாரை நம்பி இவ்வளவு பலகாரங்களையும், கடையையும் வைத்திருக்கிறான் என்ற எண்ணம் என் மனத்தை உலுப்பிக் கொண்டிருந்தது. சுவாமிகள் சிரித்துக் கொண்டே 'பார்த்தாயா மகனே, இந்த இடியப்பத்தையும் சொதியையும் சுமந்து செல்ல வேண்டிய வேலையே இல்லாமல் போய்விட்டது பார்த்தாயா?' என்றார்கள். சுவாமிகளைக் கொண்டு போய் யாழ்ப் பாணத்தில் விட்டுவிட்டு கொழும்பு மீண்ட எனக்கு மனத்தில் அமைதி ஏற்படவில்லை. இரண்டு நாட்கள் கழித்து உற்ற நண்பர் ஒருவரை அழைத்துக் கொண்டு சிவனொளி பாதம் போய்ச் சேர்ந்தேன். நண்பரிடம் இதைப்பற்றி ஒன்றும் நான் சொல்லவில்லை. டீக்கடை இருந்த இடத்தின் அடையாளம் நன்கு தெரிந்து வைத்திருந்தேன். அப்படி ஒருகடை அங்கிருந்த சுவடுகூடத் தெரியவில்லை. நான் சுற்றுமுற்றும் பார்ப்பதைப் பார்த்த நண்பர் என்ன பார்க்கிறீர்கள் என்று சொல்லிக் கேட்டார். இங்கு ஒரு டீக்கடை இருந்ததாக ஞாபகம், அதனாற்தான் அது எங்கே போய்விட்டது என்று தேடுகிறேன் என்றேன். நண்பர் சிரித்து விட்டு, 'இந்த இடத்தில் டீக்கடையா? முழுப் பைத்தியமாக இருந்தால் கூட இந்த இடத்தில் டீக்கடையைத் தேட மாட்டாய். மனித நடமாட்டமே இல்லாத இந்த இடத்தில் எந்தப் பைத்தியக்காரன் டீக்கடை வைப்பான்? வா போகலாம்' என்று அழைத்துப் போனார். அந்த நண்பரிடம் நடந்தது எதனையும் நான்

சொல்லவில்லை. காரணம் அதனைப் புரிந்து கொள்ளும் பக்குவம் அவருக்கில்லை என்பதை நான் அறிந்து இருந்ததால் அவரிடம் ஒன்றும் கூறவில்லை. அ. ச. ஐயா, மகானின் திருவருளுக்கு தாங்கள் பாத்திரமானது போல நானும் பாத்திரமாயினேன்'' என்று கூறி மெய்சிலிர்த்தார்.

அன்று இரவு கொழும்பில் பேசும்பொழுது இந்த நிகழ்ச்சியைச் சொல்லாமல் திருப்பைஞ்ஞீலியில் நாவரசர் பெருமானுக்கு இறைவன் கட்டமுது அளித்ததையும், சுந்தரர்க்கும் அவ்வாறே அளித்ததையும் கூறிவிட்டு இதில் வியப்பொன்றுமில்லை. "விச்சது இன்றியே விளைவு செய்குவான்'' ஆகிய இறைவன் திருவிளையாடலில் இது ஒரு சாதாரண நிகழ்ச்சி. இதுபோன்ற நிகழ்ச்சிகளை அனாயாசமாக செய்துகாட்டும் மகான்கள், சித்தர்கள் இப்பொழுதும் இருக்கிறார்கள். நல்வினை உடையவர்கள் அவர்களைக் கண்டு ஆசிபெற முடியும் என்று கூறி முடித்தேன்.

அருளாளர்கள் என்பவர்கள் எப்போதும், எல்லா இடங்களிலும் இருந்துகொண்டு இறைவன் கட்டளைகளை நிறைவேற்றிக் கொண்டுதான் இருக்கிறார்கள். அவர்களை இனங்கண்டு கொள்வதும், காண்பதும், அவர்களுடைய அருளாசிகளைப் பெறுவதும் பல பிறப்புக்களிலும் நாம் செய்த புண்ணியத்தின் பயனே ஆகும். "கந்துக மக்கரியை வசமாய் நடத்தலாம்'' என்று முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் தாயுமானவப் பெருந்தகை கூறியதை 1955லும் செய்து காட்டும் அருளாளர்கள் இருக்கிறார்கள் என்பதை எடுத்துக்காட்டவே இப்பெருமகனாருடைய வாழ்வில் அவர் நிகழ்த்திய நான்கு அற்புதங்களை மேலே கூறியுள்ளேன். அப்பெருமானின் அருளாசி அனைவருக்கும் கிட்ட வேண்டும் என்று அவருடைய திருவடிகளில் வேண்டி அமைகின்றேன்.

